டால்டா
எனக்கு
நல்லது !




எல்லோருக்குமே நல்லது . . .

❊ ஏனென்றல் அது சுத்தமானது

❊ ஏனென்றல் அது புஷ்டியுள்ளது

**டால்டா வனஸ்பதி**

½, 1, 2, 5, 10 பவுண்டு டின்களில் இந்தியாவில் எங்கும் கிடைக்கும்

HVM. 239-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 14 | இதழ் 35
மார்ச் 27
ஜய ஸ்ரீ | பங்குனி 14



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# மார்ச் 25ந் தேதி

முதல் தமிழ்நாடெங்கும்

○★○

T.R.ராமச்சந்திரன்
T.K.ராமச்சந்திரன்
பிரண்ட் ராமசாமி
M.S.கருப்பையா
ராகினி
K.N.கமலம்
லக்ஷ்மிப்ரபா

K.A.தங்கவேலு
T.N.சிவதாணு
N.S.நாராயண பிள்ளை
M.N.கிருஷ்ணன்
ராஜ சுலோசனா

லலிதா-பத்மினி
GUEST ARTISTES

நடித்த

சிரிப்பையும் கண்ணீரையும்
கருத்துடன் கலந்து தரும்

பி.என்.டி புரொடக்ஷன்ஸ் .....

# எல்லாம் இன்பமயம்

தயாரிப்பு & சூபர்விஷன்
**R.பத்மநாபன்**

டைரக்ஷன்
**ஜிதன் பானர்ஜி**

வசனம்
**V.K.பத்மநாபன்**

சங்கீதம்
**கண்டசாலா**



CHARI

நாராயணன் கம்பெனி ரிலீஸ்

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்

# ஆந்திர ராஜ்யத்தில் அதிசயம்!

பாரத நாட்டு மக்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் அளிக்கக் கூடிய செய்தி சென்ற வாரம் ஆந்திர ராஜ்யத்திலிருந்து வந்தது.

அங்கு ஆந்திர சட்டசபை காங்கிரஸ் கட்சியின் தலைவராக ஸ்ரீ பி. கோபால ரெட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது தேச மக்களின் நலனிலும் ஒற்றுமையிலும் அக்கறை கொண்ட சகலருக்கும் சந்தோஷத்தைக் கொடுத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

சுதந்திரப் போராட்டத்தின் போது முன்னணியில் நின்ற ஆந்திரப் பிரதேசம், பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின் தலைவர்களின் கருத்து வேற்றுமைக்கும் கட்சிகளின் போட்டிகளுக்கும் நிலைக்களமாக இருந்து வந்தது.

அந்த வேற்றுமையும் போட்டியும் தந்த சமயத்தைக் கம்யூனிஸ்டுகள் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொண்டு கலகங்களையும் நெருக்கடிகளையும் சிருஷ்டித்து வந்தார்கள்.

ஆனால், சென்ற தேர்தலில் காங்கிரஸ் தலைவர்களிடையே ஒற்றுமையும் ஐக்கிய பாவமும் ஏற்பட்டு விட்டதால், கம்யூனிஸ்டுகளின் மனக் கோட்டையெல்லாம் பொல பொலவென்று தகர்ந்து விட்டது.

ஆந்திர மக்கள் காங்கிரஸ் கட்சியிடம் நம்பிக்கை வைத்து, அக்கட்சியினருக்குப் பெருவாரியாக வோட்டுக் கொடுத்தார்கள்.

மக்கள் வைத்த நம்பிக்கை வீண் போகவில்லை. அந்த நம்பிக்கைக்குத் தாங்கள் தகுந்த பாத்திரர்கள் என்பதைக் காங்கிரஸ் தலைவர்கள் செய்கையில் காட்டி விட்டார்கள்.

மக்களுக்கு ஒற்றுமைப் பாதையைக் காட்ட வேண்டிய தலைவர்களும் பிரதிநிதிகளும் பிளவுபட்டு நின்றால், உருவான நன்மை எதையும் செய்ய முடியாமற் போய் விடும்.

பிடிவாத சூரரான பிரகாசம்காரு கூட பழைய போட்டிகளை யெல்லாம் மறந்து ஸ்ரீ கோபால ரெட்டிக்கு ஆசியளிக்க முன் வந்தது பாராட்டத் தக்கதாகும்.

"அரசாங்க ஊழல்களைக் காங்கிரஸ்காரர்கள் நிவர்த்தி செய்து விடுவார்கள் என்பது பொது ஜனங்களின் நம்பிக்கை. அந்த நம்பிக்கை நிறைவேறும்படி செய்ய வேண்டியது ஆந்திர காங்கிரஸ்வாதிகளின் முதற் கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அந்தக் கடமையைச் சரிவரச் செய்ய வேண்டுமாயின், ஆந்திர ராஜ்யத் தேர்தலில் வெற்றி பெற்றவர்கள் சரியான தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்படிச் செய்தால், அடைந்த வெற்றியால் ஆந்திர மக்கள் லாபம் அடைவார்கள்" என்று முன்பே குறிப்பிட்டிருந்தோம்.

ஆந்திர காங்கிரஸ்வாதிகள் அவ்விதமே சரியான தலைவரை ஒற்றுமையுடன் தேர்ந்தெடுத்தது மகிழ்ச்சிக்கு உரியது.

ஆந்திர ராஜ்யத்தில் நடந்த தேர்தலைத் தேச மக்கள் சகலரும் ஆவலுடனும் கவலையுடனும் கவனித்து வந்தனர்.

அந்தத் தேர்தலில் காங்கிரஸ்வாதிகள் வெற்றி பெற்றதைக் குறித்துத் தேச மக்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

அங்கு இப்போது சரியான தலைவர் ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டதைக் குறித்து அவர்களின் மகிழ்ச்சி இரட்டிப்பாகும் என்பது நிச்சயம்.

இனி, ஆந்திர ராஜ்யத்தில் பெரும்பாலோரின் பூரண ஆதரவு பெற்ற நிலையான சர்க்கார் ஏற்படும். கம்யூனிஸ்டுகளின் ஆசைக் குடம் உடைந்தது.

ராஜ்யத்திலும் உற்பத்திக் காரியாலயங்களிலும் அமைதி உண்டாவதற்கு வழி பிறக்கும்.

தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ கோபால ரெட்டி எல்லோருக்கும் நன்றி தெரிவித்துப் பேசியபோது ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட்டார்.

"நான் மக்களின் முதல் ஊழியன். சட்டசபையில் உள்ள எல்லா அங்கத்தினர்களும் தங்களை ஜனங்களின் ஊழியர்களாகவே கருத வேண்டும். நம்மிடமிருந்து ஜனங்கள் பல நன்மைகளை எதிர்பார்க்கிறார்கள். அவ்விதம் எதிர்பார்க்க அவர்களுக்கு உரிமை உண்டு. அவர்கள், தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் மகத்தான வெற்றிக்குப் பொறுப்பாளிகள் அல்லவா! எனவே, காங்கிரஸ் கட்சியினர் இடைவிடாது உழைத்து, அவர்களுடைய நம்பிக்கையை நிறைவேற்ற வேண்டும்" என்று கூறினார்.

ஆந்திர ராஜ்ய சர்க்கார் நிர்வாகம் நன்கு நடைபெறுவதற்கான அறிகுறிகள் தோன்ற ஆரம்பித்திருக்கின்றன.

காங்கிரஸ்காரர்கள் காந்திஜியின் வழியைப் பின்பற்றி, சொந்த யோக க்ஷேமங்களை மறந்து காங்கிரஸ் வகுத்த திட்டங்களைச் சரிவர நிறைவேற்றுவார்களாயின் காங்கிரசுக்குப் பொது மக்களின் ஆதரவு சிறிதும் குன்றாது என்பதும் ஆந்திர ராஜ்யத் தேர்தலிலிருந்து தெளிவாகியிருக்கிறது. ஆந்திர நிர்வாகம் மற்ற ராஜ்யங்களுக்கு வழி காட்டியாகவும் உதவும்.

# பன்னிரண்டும் ஒரு லட்சமும்

சென்ற வருஷம் அக்டோபர் மாதம் இந்தியப் பிரதம மந்திரிக்கும் இலங்கைப் பிரதமருக்கும் இரண்டாவது தடவையாக ஒப்பந்தம் ஏற்பட்டது யாவரும் அறிந்த விஷயம். அந்த ஒப்பந்தம் ஏற்பட்டுச் சென்ற மாதத்துடன் நாலு மாதங்கள் ஆகின்றன. இந்த நாலு மாதங்களில் இலங்கை சர்க்கார் இலங்கை இந்தியர்களில் 12 பேர்களுடைய பிரஜா உரிமை மனுக்களை அங்கீகரித்திருக்கிறார்கள். ஆனால் 1,20,543 பேர்களுடைய மனுக்களை நிராகரித்து விட்டனர். இந்தப் புள்ளி விவரங்களை ஸ்ரீ எஸ். சுந்தரலிங்கம் இலங்கை ஜனப் பிரதிநிதி சபையில் சென்ற வாரம் வெளியிட்டார். அவற்றை சர்க்கார் மறுக்கவில்லை. எனவே அவ்விவரம் உண்மை என்பது தெளிவாகிறது.

இலங்கை—இந்தியப் பிரதம மந்திரிகளுக் கிடையில் சமீபத்தில் நடந்துள்ள கடிதப் போக்குவரத்திலிருந்து, இலங்கை இந்தியர் பிரச்னையில் எள்ளளவும் முன்னேற்றம் ஏற்படவில்லை என்பது தெரிகிறது. நிராகரிக்கப்படும் பிரஜா உரிமை மனுக்களின் தொகை ஆயிரம், பதினாயிரம், லட்சம் என்று அதிகமாகி வருகிறது. டில்லி ஒப்பந்தத்தின் மூலம் இலங்கை சர்க்கார் ஒப்புக்கொண்டபடி, இலங்கைப் பார்லிமெண்டில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக இடைத் தேர்தல் நடைபெறவில்லை. இந்தியப் பிரஜைகளாகப் பதிவுசெய்து கொண்டவர்களுக்கு இலங்கையில் 55 வயது வரையில் இருப்பதற்கு அனுமதிச் சீட்டு அளிப்பதாக இலங்கை சர்க்கார் உறுதி கூறிப் பல மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் இதுவரையில் ஒருவருக்குக்கூட இலங்கை சர்க்கார் அவ்வித அனுமதிச் சீட்டு வழங்கியதாகத் தெரியவில்லை.

இவ்வாறு டில்லி ஒப்பந்தத்தைப் புறக்கணித்து இலங்கை சர்க்கார் செய்து வரும் நடவடிக்கைகளைச் சுட்டிக் காட்டி நேருஜி சர் ஜான் கொத்தலாவலைக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதற்கு சர் ஜான் கொத்தலாவலை அனுப்பியுள்ள பதிலில், அவர் இந்திய சர்க்கார் மீது சில புகார்களைக் கூறியிருக்கிறார்!

போதாக்குறைக்குச் சென்ற வாரம் இலங்கை சர்க்கார் இலங்கை இந்தியர்களை மேலும் துன்பத்துக்கு உள்ளாக்கக் கூடிய இரண்டு சட்டங்களை நிறைவேற்றியுள்ளனர். ஏற்கெனவே வழங்கப்பட்ட பிரஜா உரிமையை ரத்துச் செய்யவும் புதிய சட்டத்தின் மூலம் அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. இலங்கை இந்தியர்கள் பிரஜா உரிமை பெறுவதற்கு மேலும் பல தடைகளை விதிப்பதே அச்சட்டத்தின் நோக்கமாகும்.

எனவே, ஒன்றுக்கு இரண்டு ஒப்பந்தங்கள் ஏற்பட்டும் இலங்கை இந்தியர்களின் கஷ்டங்கள் தீரவில்லை. கஷ்டங்கள் தீராதது ஒரு புறமிருக்க, அவர்களுக்கு மேன்மேலும் துன்பத்தைக் கொடுக்கக்கூடிய காரியங்களை இலங்கை சர்க்கார் செய்து வருகிறார்கள். அதன் காரணமாக இலங்கை இந்தியர்களிடையே மிகுந்த மனக் கொதிப்பும் இலங்கை சர்க்காரின் நல்லெண்ணத்தில் அவநம்பிக்கையும் ஏற்பட்டிருக்கின்றன.

எனவே, இலங்கையின் நற்பெயருக்கோ, இந்தியா—இலங்கை நல்லுறவுக்கோ பாதகம் ஏற்படாமல் இருக்க வேண்டுமாயின், டில்லியில் செய்து கொண்ட ஒப்பந்த ஷரத்துகளையாவது இலங்கை சர்க்கார் நிறைவேற்ற முற்பட வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறோம்.

# கைத்தறித் துணி வாங்கி உதவி புரியுங்கள்

வேலையில்லாத் திண்டாட்டம் என்பது பள்ளிக் கூடத்தில் படித்தவர்களுக்கு உண்டாகும் நோய் என்று சாதாரணமாகப் பத்திரிகை படிப்போரின் எண்ணம். ஆனால் லக்ஷக்கணக்கான தறிகாரர்களின் கஷ்டமும் இந்த வேலையில்லாப் பிரச்னையில் ஒரு முக்கியப் பகுதி.

இப்போது நம் நாட்டில் என்ன நடந்து கொண்டிருக்கிறது? சுமார் முப்பது லட்சம் குடும்பங்களுக்குப் பிழைப்புத் தரும் குடிசைத் தொழில் ஒன்று உயிருக்கு மன்றாடுகிறது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக இந்த நாட்டில் வளர்ந்து வேரூன்றிய அற்புத நெசவுத் தொழில் குற்றுயிரும் குறையுயிருமாக இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சிக்குத் தப்பிப் பிழைத்த கைத்தறித் தொழில் இன்று மடிந்து கொண்டிருக்கிறது. இந்தத் தொழிலுக்குப் பெரிய மூலதனம் திரட்ட வேண்டியதில்லை. இதர நாடுகளிடமிருந்து கடன் வாங்க வேண்டியதில்லை. புதிதாகத் தொழிற் பயிற்சி யாருக்கும் செய்து கொடுக்க வேண்டியதில்லை. முப்பது லட்சம் குடிசைகளில் முப்பது லட்சம் கைத்தறிகள் வேலை செய்யக் காத்திருக்கின்றன. அவற்றில் வேலை செய்வதற்கு அற்புதமான கைத்திறன் வாய்ந்த அதிசயமான தொழிலாளிகள் இருக்கிறார்கள். அந்தத் தொழிலாளிகளின் தொகை

வருஷந் தோறும் பெருகிக் கொண்டும் வருகிறது. கைத்தொழில்களைப் பேணிவளர்க்க வேண்டும் என்று காந்தி மகாத்மா தம் வாழ்நாளெல்லாம் பாடுபட்டார். இதற்காகவே சுயராஜ்யம் வேண்டும் என்று கேட்டார். சுயராஜ்யம் பெற்று விட்டோம். ஆனால் கைத்தறித் தொழில் இந்திய ஆலைத் தொழில் போட்டியினால் அழிந்து கொண்டுதான் வருகிறது.

இயந்திர ராட்சதர்களிடமிருந்து கைத்தறியைக் காப்பதற்காக ராஜாஜி யோசனைகளைக் கூறினார். கைத்தறிக்கு வேஷ்டிகளும், சேலைகளும் ஒதுக்கிவிட வேண்டும் என்றும் கூறினார். இந்திய சர்க்காரின் காதில் இன்னும் அவர் கூறிய யோசனை விழவில்லை. யோசனைகளை மட்டும் கூறிவிட்டுச் சும்மா இருந்தாரா! மக்களிடம் சென்று கைத்தறித் துணியை வாங்கும்படி கேட்டுக் கொண்டார். பத்திரிகைகளில் கண்ணீர் கசியும்படி எழுதினார். மில் துணிக்கு வரி போட்டார். கைத்தறித் துணிக்கு விலை குறைக்க ஏற்பாடு செய்தார். மக்கள் மனம் கரைந்தது. கைத்தறித் துணியை வாங்கினார்கள்.

ஆயினும் இப்போது நம் ராஜ்யத்தில் மட்டும் ஐம்பது லட்ச ரூபாய் பெறுமானமுள்ள கைத்தறித் துணி, கூட்டுறவுச் சங்கங்களில் தேங்கிக் கிடக்கிறது. தனிப்பட்ட வியாபாரிகளிடமும், தறிக்காரர்களிடமும் இதைப் போலப் பலமடங்கு மதிப்புள்ள துணி தேங்கியிருக்கலாம். இந்த நிலைமை நீடித்தால் ஏற்கெனவே இருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைவிட இன்னும் முப்பது









1. ஒரு குடிசையையே நிர்மாணித்து அதில் கைத்தறி நெய்யும் காட்சியுடன் சென்னை நகர வீதிகளில் ஊர்வலம் வருகிறது. 2. திருவாளர் எம். ஆர். காஸிமி கைத்தறிக் கண்காட்சியைத் திறந்து வைக்கிறார். 3. கண்ணைப் பறிக்கும் விதம் விதமான கைத்தறித் துணிக் கண்காட்சியை மந்திரி திரு சுப்பிரமணியம் பார்வையிடுகிறார். 4. திரு எம். பி. நாச்சிமுத்து கண்காட்சியில் உள்ள ஒரு நவீனக் கைத்தறி யந்திரம் வேலை செய்வதை மந்திரிக்குக் காண்பிக்கிறார்.

லட்சம் குடும்பங்கள், அந்தக் குடும்பங்களில் இருக்கும் மூன்று கோடி மக்கள் வேலையில்லாத் திண்டாட்டத்தில் அகப்பட்டு உழலும்படி நேரிடும்.

புதிதாக வேலை தேடித் தருவதற்கு ஊக்க மளிப்பதற்கு முன் சுமார் மூன்று கோடி மக்களுக்குப் பிழைப்புத் தரும் இந்தக் கைத்தறித் தொழிலை, இந்தியாவுக்குச் சரித்திர காலத்திலிருந்து புகழ் தேடித் தந்த அற்புதமான கலைத் தொழிலை, நசிந்து நாசமாகாமல் காப்பாற்ற வேண்டும்.

இந்திய சர்க்கார் இப்படித் தங்கள் கடமையைச் செய்யாமலிருக்கிறார்களே என்று நாம் கோபித்துக் கொண்டு பேசாமலிருந்து விடலாமா! நம்முடைய ஏழைக் கைத்தறித் தொழிலாளர்களுக்கு நம்முடைய கடமையை நாம் செய்தேயாக வேண்டும். இந்திய சர்க்காரின் இரும்பு மனம் இளகிக் கைத்தறிக்கு நல்ல பாதுகாப்பு அளிக்க முன்வரும் வரையில் கைத்தறிக்காரர்கள் உயிரோடிருந்து வருவதற்கு உதவி செய்ய வேண்டும்.

கைத்தறித் தொழிலின் நிலைமையைப் பொது மக்களின் கவனத்துக்குக் கொண்டு வருவதற்காகத்தான் சென்ற இருபதாம் தேதியிலிருந்து ஒரு வாரத்துக்கு அகில இந்தியாவிலும் "கைத்தறி வாரம்" கொண்டாடப்பட்டது. சென்னை நகரில் கைத்தறித் தொழிலாளரின் மாகாண கூட்டுறவுச் சங்கத்தாரின் சார்பில் கைத்தறித் தொழில் கண்காட்சி நடத்தப்பட்டது. மார்ச் 20உ இக் கண்காட்சியையும் கைத்தறி வாரத்தையும் சேர்த்து ஆரம்பித்து விட்டார்கள். கண் காட்சியில் சாதாரணமாக எதிர்பார்க்கப்படும் கலைப் பொருள் காட்சிகளும், ஆடல் பாடல்களும் இருந்தன.

முதல் நாள் 20உ அகில இந்திய கைத்தறி போர்டு உப தலைவர் திருவாளர் எம். ஆர். காளிமி கைத்தறிக் கண்காட்சியைத் திறந்து வைத்தார். சபா நாயகர் திரு சிவஷண்முகம் பிள்ளை தலைமையில் நிதி அமைச்சர் திரு சுப்பிரமண்யம் கைத்தறி விழாவைத் துவக்கி வைத்தார். இரண்டாவது நாள் முதல் அமைச்சர் திரு காமராஜ நாடார் விழாவில் கலந்து கொண்டு அருமையான யோசனைகளைக் கூறினார். தேங்கி நிற்கும் கைத்தறித் துணிகளை வாங்குவதற்கு, கைத்தறிக் கூப்பன்கள் விற்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.



திரு எம். பி. நாச்சிமுத்து

சென்னை நகரத்தின் நடுநாயகமாக விளங்கும் மியூஸியத்துக்குப் பக்கத்தில் அமைந்துள்ள கைத்தறிக் கண் காட்சியில் விதம் விதமான கைத்தறித் துணிகள் இருக்கின்றன. பதினெட்டு முழம் (ஒன்பது கஜம்) நீளமுள்ள கைத்தறிச் சேலையைப் பத்து ரூபாய்க்குக் கொடுக்கிறார்கள். மற்ற துணிகளையும் இதே மாதிரி மலிவான விலைக்குத் தருகிறார்கள்.

எண்பதாம் நம்பர், நூறாம் நம்பர் நூலினால் நெய்த கைத்தறிச் சேலைகளைப் பார்க்கப் பார்க்க அதிசயமாக இருக்கிறது. சேலையின் அமைப்பும், வேலைப் பாடும், கண்ணைக் கவரும் வர்ணமும் மனத்தைக் கவர்கின்றன. மிகக் குறைந்த விலைக்கு இந்த அற்புதமான கைத்தொழில் துணிகளை எப்படிக் கொடுக்கிறார்களோ, ஆச்சரியமாக இருக்கிறது.

கைத்தறித் துணி வாங்கினால் ஒரே சமயத்தில் இரண்டு விதப் பயனைப் பெறலாம். ஆலைத் துணிகளைவிட அதிக நாள் உழைக்கக் கூடிய உறுதியான துணியைக் குறைந்த விலையில் அடைவதுடன், ஒரு நெசவுத் தொழிலாளியின் குடும்பத்தைச் சில நாள் பட்டினியிலிருந்து காப்பாற்றிய புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளலாம்.

சென்னை மாநகரத்தில் கைத்தறி வார விழாவும், கைத்தறிக் கலைக் கண்காட்சியும் இவ்வளவு சிறப்பாக நடைபெறுவதற்குக் காரணமான சென்னை ராஜ்ய கூட்டுறவு சங்கத் தலைவர் திரு எம். பி. நாச்சிமுத்து அவர்களைப் பாராட்டுகிறோம். அவருக்குத் துணையாக நின்று உழைத்து வரும் கூட்டுறவுச் சங்கப் பிரதம கணக்கு அதிகாரி திரு டி. பி. ஷண்முகசுந்தரம் அவர்களுக்கு நெசவாளர்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

காந்தி மகாத்மா எந்த இயக்கம் ஆரம்பிக்கும் போதும் மக்களைத்தான் நம்பினார். சர்க்காரை நம்பவில்லை. கைத்தறித் தொழிலுக்கு நமது சுயராஜ்ய சர்க்கார் ஆதரவு கொடுக்கும் வரை காத்திருக்காமல் பொது மக்கள்தான் உதவி புரிய வேணும். தமிழ்ப் பெருமக்கள் கைத்தறித் துணியையே வாங்க வேண்டும். ஈவிரக்கம் பச்சாத்தாபம் உள்ளவர்கள் அனைவரும் கைத்தறியில் நெசவு செய்த துணிகளையே தங்கள் உபயோகத்துக்கு வாங்கிப் பல லட்சம் கைத்திறன் படைத்த ஏழைத் தொழிலாளிகளைப் பசி பட்டினியிலிருந்து காப்பாற்றி வரவேண்டும்.

<u>அட்டைப் பட விளக்கம்</u>

## சொல்லாதே கிளியே!

அவளும் அவளுடைய காதலனும் எத்தனையோ இன்பமாகப் பேசி மகிழ்ந்தார்கள் இரவிலே. காதல் என்ற ஜன்னியின் வேகத்தில் ஏதேதோ பேசினார்கள், உளறிக் கொட்டினார்கள்! இதையெல்லாம் மறு நாள் எண்ணிப் பார்த்தாலே வெட்கமாகத்தான் இருக்கும். இப்படியிருக்க அந்தக் கிளிப் பிள்ளையின் காரியத்தைப் பாருங்களேன்!

இரவில் அந்த மயக்க வெறியில் நடந்த பேச்சுக்களை யெல்லாம் கேட்டுக் கொண்டே யிருந்த கிளி இப்பொழுது காலையிலே அவள் தன் தோழிப் பெண்களோடு உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும் போது "சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை" என்ற கதையாகத் தன் வழக்கத்தை ஆரம்பித்து விட்டது! ஆமாம், இரவில் நிகழ்ந்த மயக்க மொழிகளை யெல்லாம் அது இப்பொழுது திரும்பச் சொல்ல ஆரம்பித்து விட்டது! அவளுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை! அப்படியே எழுந்து போய், அந்தக் கிளியின் வாயைப் பொத்துகிறாள்.

"நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளி உரைப்ப
வாயைப் புதைக்கும் மடநல்லீர்!"

[வாயைப் புதைக்கும் — வாயைப் பொத்துகின்ற]

'கலிங்கத்துப் பரணி' என்னும் தமிழ்க் காவியத்தின் இந்தச் சொற் சித்திரத்தை மூவர்ண அட்டைச் சித்திரமாகத் தருகிறார் ஓவியர் சந்திரா.

# ஆபத்து நீங்குமா?

இயந்திரப் புலி

கைத்தறி

கைத்தறியை நசுக்க இயந்திர நெசவு எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கிறது.

# குப்பைத் தொட்டி!

அமெரிக்கா

யால்டா தஸ்தாவேஜுகள்

யால்டா மகாநாட்டு ரகசிய தஸ்தாவேஜுகளை அம்பலப்படுத்திய அமெரிக்காவின் செய்கை உலகெங்கும் வெறுப்பையும் ஆத்திரத்தையும் உண்டாக்கி யிருக்கிறது.

# அபயம்!

திருத்தம்

முதலாளித்துவம்

அரசியல் நிர்ணய சட்டம்

பொது ஜனம்

பொது மக்களுக்குத் தீங்கு விளைவிக்கும் வகையில் நடந்து கொண்ட ஷோலாப்பூர் மில் நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிட்டும் நீதிமன்றத்தின் உத்தரவு காரணமாக அது பயனில்லாமல் போய் விட்டது. அந்நிலைய நிலை மீண்டும் ஏற்படாமல் தடுப்பதே இத் திருத்த மசோதாவின் நோக்கம்.

நான் என்னுடைய புத்திசாலித்தனம் முழுவதையும் கையாண்டேன்; ஆனால் என் வார்த்தையைக் கேட்பார் யாருமில்லையே!”

“ஆந்திரத் தலைவர் தேர்தல் விஷயமாக என்னுடன் எவரும் ஆலோசிக்காதது என்னை அவமதித்ததாகும்” என்று ஆந்திர சிம்மம் கர்ஜனையில் கர்ஜித்தது.

# என்ன சேதி?

## யால்ட்டா அம்பலம்

யால்ட்டா அந்தரங்கப் பேச்சுக்களை அணுகுண்டு வெடியின் வேகத்துடன் யாரையும் கேட்காமல் அமெரிக்க சர்க்கார் வல்லரசுகளுக்கு இடையில் போட்டு விட்டார்கள். இதனால் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் அமெரிக்காவில் ஒரு கட்சியினருக்கும் மகத்தான கோபம் உண்டாகியிருக்கிறது. அமெரிக்கத் தலைவர் ரூஸ்வெல்ட் பிரபு ரஷ்யத் தலைவர் ஸ்டாலினிடத்தில் வர வரப் பரிவு அதிகம் செலுத்தினர் என்பதும், சர்ச்சிலினுடைய மனப்பான்மையை அவர் அதிகம் பாராட்ட வில்லை என்பதும், ரூஸ்வெல்டின் குமாரர் தம் தகப்பனாருடைய சரித்திரமாக எழுதியிருக்கும் நூல்களிலிருந்தே வெளிப்படை. யால்ட்டா பேச்சுக்கள் வெளியிட்டதினின்று புதிதாகத் தெரிந்த விஷயமல்ல.

எது எவ்வாறாயினும் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பொதுத் தேர்தல்கள் சமீபத்தில் நடக்கப் போகின்றன. அணுகுண்டு விஷயத்தைப் பற்றிப் பொதுஜனங்களுடைய ஆதரவைக் கோருவது அரசாங்கங்களுக்கு அவசியமாக ஏற்பட்டு இருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு கட்சியினர் இன்னொரு கட்சியினரைப் பலவீனப்படுத்த முயற்சி செய்வது இயற்கை.

யாரையும் கேட்காமல் உற்பத்தி செய்த அணுகுண்டைச் சுடச்சுட ஜப்பான் பேரில் எறிந்தது, அமெரிக்க சர்க்காரினுடைய தனிச் செயல் என்பது வியக்தம் ஆகிறது. யால்ட்டா பேச்சு அம்பலமானதிலிருந்து இதைப் பற்றி சந்தேகம் இல்லை.

## ஆலயப் பிரவேசம்

வினோபா பாவே அவர்களுடன் சென்ற ஒரு ப்ரெஞ்சு அம்மையாரைக் கோவிலுக்குள் விடாத விஷயம் பத்திரிகைகளில் வெளி வந்தது. இதைப் பற்றிப் பலர் மனம் புண்படுவார்கள் என்பது உண்மை. எல்லா விதங்களிலும் முன்னேறி வரும் இக் காலத்தில் இத்தகைய நிகழ்ச்சிகள் தேச பக்தர்களின் மனத்தை வேதனை செய்யும். இந்த வேதனையின் பலனாக நாம் ஒரு நல்ல முடிவுக்கு வர வேண்டும். எந்தக் கோவிலுக்கும் யாருமே பூஜை செலுத்தத்தான் செல்ல வேண்டும். பூஜை நடவாத பழைய கோவில்களில் புகுந்து சிற்பங்களையோ மற்ற விசேஷங்களையோ பார்க்கலாம். ஆனால் பூஜை நடக்கும் தேவாலயங்களில் பக்தி சிரத்தையுடன் போகும் எவரையும் தடுக்கக் கூடாது. பக்தி சிரத்தை யற்றவர்கள் உள்ளே பிரவேசிக்க வேண்டாம் என்று விளம்பரம் மட்டும் போட்டு விட்டு, அவரவருடைய மனசாட்சிக்கு அதை விட்டு விடலாம். இதுவே திருப்தி தரும்படியான முறை யென்று தோன்றுகிறது. வேறு மதத்தினர்களும் பக்தி சிரத்தையுடன் செல்லுவதுண்டு என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இக் காலத்தில் விசால மனப்பான்மை எல்லாச் சமயத்தினருக்கும் ஏற்பட்டு விட்டது.

## ஜனநாயகமும் பத்திரிகைகளும்

சென்ற வாரம் புது டில்லியிலே இந்தியா, கீழ்த் திசை பத்திரிகைகள் சங்கக் கட்டடத்துக்கு அஸ்திவாரக் கல்நாட்டு விழா வெகு விமரிசையாக நடந்தது. அஸ்திவாரக் கல் நாட்டிய நேருஜி அப்போது பேசுகையில், பத்திரிகைகள், பொது மக்களின் நன்மை ஒன்றையே முக்கியமாகக் கருதித் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்ய வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர்.

அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான் போன்ற நாடுகளில் ஐம்பது லட்சம், அறுபது லட்சம் அச்சாகும் பத்திரிகைகள் இருக்கின்றன. ஆனால், பாரத நாட்டிலோ ஒரு லட்சம் பிரதிகள் கூட அச்சிடப்படும் இந்திய பாஷைப் பத்திரிகை இல்லை.

இந்திய பாஷைப் பத்திரிகைகள் இது வரையில் அதிகமாக அச்சிடப்படாததற்கு இரண்டு காரணங்களை முக்கியமாகக் கூறலாம்: ஒன்று அன்னிய பாஷை பேசும் கூட்டங்களின் ஆதிக்கம், மற்றொன்று எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் குறைந்த விகிதம். இந்தியாவில் அன்னியர் ஆதிக்கம் ஒழிந்து சுதந்திர சர்க்கார் ஏற்பட்டதிலிருந்து இந்திய பாஷைப் பத்திரிகாலயங்களில் பதினாயிரக்கணக்கான பிரதிகள் அச்சிடப்படுகின்றன. அன்னிய நாடுகளைப்போல் இந்தியாவிலும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை எண்பது, தொண்ணூறு சத விகிதமாகும்போது இந்திய பாஷைப் பத்திரிகைகள் லட்சக் கணக்கான பிரதிகள் அச்சிடும்படியான நற்காலம் வரலாம்.

ஒழுங்காகவும் யோக்கியமாகவும் நடந்து வதில் தமிழ்ப் பத்திரிகைகள் ஆங்கிலப் பத்திரிகைகளுக்குக் குறைந்தன வல்ல என்கிற பெயர் எடுக்க வேண்டும்.

## ஷோலாப்பூர் விஷயம்

ஷோலாப்பூர் மில் நிர்வாகத்தின் காரணமாக அரசியல் சட்டத்தில் ஒரு திருத்த மசோதா கொண்டு வரப்பட்டது. அதாவது, சர்க்கார் எடுத்துக் கொள்ளும் சொத்துக்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பது சம

பந்தமாக பார்லிமெண்டு செய்யும் தீர்ப்பே முடிவானது என்பதே இத் திருத்த மசோதாவின் கருத்து.

ஷோலாப்பூர் மில்லை நிர்வகித்த டைரக்டர்கள் படுமோசமாக நடந்து கொண்டார்கள். அதன் காரணமாகச் சர்க்கார் தலையிட்டுத் தாற்காலிகமாக அந்த மில்லின் பொறுப்பை ஏற்க வேண்டியிருந்தது. அப்போது மில் டைரக்டர்கள், சர்க்கார்மீது வழக்குத் தொடுத்தார்கள். சட்டத்தையே அநுசரித்து மில்லுக்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பு செய்தது. சட்டப்படி அது சரியாக இருந்தாலும், மில் நிர்வாகத்தின் ஊழலைப் பார்க்கும் போது அது விபரீதமாக இருக்கிறது. இக் காரணத்தால் திருத்த மசோதா கொண்டு வரப் பட்டது. நஷ்ட ஈடு கொடுப்பது சம்பந்தமாக பார்லிமெண்டுக்கு முழு உரிமை இருக்க வேண்டும் என்பதே அதன் அடிப்படையான கருத்தாகும்.

இந்த மசோதாவின் மீது விளக்கம் கூறும் வகையில் பேசிய நேருஜி ஷோலாப்பூர் மில் நிர்வாகத்தைப் பற்றிப் பின்வருமாறு மிகவும் காரமாகப் பேசினார்:

"அந்த மில்லில் ஏற்கெனவே நடந்த விஷமங்களின் காரணமாக அதன் நிர்வாகத்தைச் சர்க்கார் தாற்காலிகமாக எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அதற்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டு மென்ற சந்தேகங் கூட நமக்கு எழவில்லை!"

இப்படிப்பட்ட நிர்வாகமுள்ள மற்ற தொழில் ஸ்தாபனங்களும் இனி மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று இந்த மசோதா எச்சரிக்கை செய்கிறது.

ஆவடியில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டபோது, "இது என்ன வெறும் காகிதத் தீர்மானம், சும்மா, மக்கள் கண் துடைப்புத் தீர்மானம்!" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் நம்மில் பலர். அவர்கள் இப்பொழுது முகத்தை வேறு பக்கம் திருப்பி வைத்துக் கொள்ளுகின்றனர்!

நேருஜியின் தலைமையில் ஏழை—பணக்காரரிடையே நிலவும் இப் பெரும் வித்தியாசம் அறவே நீங்கப் பெற்று எல்லாரும் சமம் என்னும் காலமும் வந்துவிடும் என்ற பூரண நம்பிக்கை யளிக்கிறது!

## கல்கி நினைவு நிதி

**கா**லஞ் சென்ற கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவாக ஒரு நிதி ஆரம்பித்திருக்கும் விவரம் ஏற்கெனவே நேயர்கள் பத்திரிகைகளில் பார்த்திருப்பார்கள். 'சுதேசமித்திரன்' ஆசிரியர் திரு ஸி.ஆர். ஸ்ரீனிவாஸன் அவர்கள் இந்த நிதியைத் தமிழ் மக்களின் சார்பில் திரட்டி வருகிறார். மறுமலர்ச்சித் தமிழுக்கும், தமிழ் மக்களின் நல்வாழ்வுக்கும் எத்தனையோ ஆக்க வேலைகளைச் செய்து மறைந்த பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவாகத் தொடங்கியிருக்கும் இந்த நல்ல காரியத்தை மிகவும் பாராட்டுகிறோம்.




"அப்ராமா கிராமத்தில் உள்ள வயோதிகர்கள் பிச்சை எடுப்பதையோ அல்லது பட்டினி கிடப்பதையோ அனுமதிக்கக் கூடாது என்று கிராம வாசிகள் முடிவு செய்து கொண்டுள்ளனர்." —சூரத் செய்தி

"அத்தனை வயோதிகப் பிச்சைக்காரர்களும் அங்கு குடியேறி விட்டால் கூடவா!" என்று கேட்கிறார் ஒருவர்.

★

"ராணுவ இலக்குகள் மீது மட்டும் அணுகுண்டு வீசலாம்." —ஐஸன் ஹோவர்

அது போதுமே! சமாதானம் அணு அணுவாய்ச் சிதறிப் போவதற்கு!

★

"பரீட்சை எழுதும் போது ஊக்கமாக இருக்க வேண்டுமென்பதற்காக ஒரு மாணவன் தன் காதலியின் படத்தைப் புத்தகத்தில் வைத்திருந்தான்!" —பத்திரிகைச் செய்தி.

காந்த சக்தியால் எத்தனையோ அதிசயங்கள் நிகழ்கின்றன. அதில் இதுவும் ஒன்று போலும்!

"சென்னை ராஜ்யத்தில் 1954 ஆகஸ்டிலிருந்து டிசம்பர் வரை 86 வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. இதில் 54 வேலை நிறுத்தங்களுக்குக் காரணமே தெரியவில்லை!" —மந்திரி

இதைக் காரணமாக வைத்து வேலை நிறுத்தம் செய்யாமலிருக்க வேண்டுமே என்று பயப்படுகிறார் ஒருவர்!

★

"விற்பனை வரியை நல்ல கறவைப் பசுவுக்கு ஒப்பிடலாம். அதை நல்லபடி கறந்து பூராப் பலனடைவதே லட்சியம்!" —பத்திரிகைச் செய்தி

வரிக் குதிரை இந்த உதாரணத்தை ஆட்சேபிக்கலாம்!

★

"அகதிப் பெண்களுக்கு மணம் செய்து கொள்ளப் பண உதவி!" —கல்கத்தா செய்தி.

அகதிப் பிரச்னை தீர்ந்து விடுமா!

# வாழ்க்கை நாதகம்



ரீஷ்மன்

'வெள்ளித் திரை' ஆசிரியர் என்னைப் பார்த்துக் கேட்கிறார்: "உங்கள் குரல் சோகப் பாட்டிலே அபரிமிதமாய்ச் சோபிப்பது ஏன்!" என்று. ஏன், எல்லோருமே அப்படித் தான் கேட்கிறார்கள். கொதிக்கின்ற பாலைவனத்திலிருந்து வீசும் காற்று குளிர் காற்றாய் இருந்தால்தான் ஆச்சரியப்பட வேண்டும். அனல் காற்றாயிருந்தால் ஆச்சரியப்படுவது உண்டா! ஆனால் ஒன்று. வருகின்ற காற்று பாலை வனத்தின் வழியே வருகிறது என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்!

சங்கீதச் சூழ்நிலையில்தான் நான் பிறந்தேன். வளர்ந்தேன். ஆயினும், வாழ்க்கை கூட்டிய சுருதி தான் வேறு கதியில் இருந்தது. இதோ, இப்போதுகூட சென்று போன நாட்களை எண்ணிப் பார்க்கும் போது பஞ்சகச்ச வேஷ்டியும் கதர் ஜிப்பாவும் அதன் மேலே உல்லாசமாய்ப் புரளும் சால்வையுமாய் அதிர் வெடிச் சிரிப்புடன் என் அப்பாதான் முன்னே வந்து நிற்கிறார்.

திரை விலகி நாடக மேடையில் கண்ணைப் பறிக்கும் ஒளியில் நாடகத்தின் முதற் காட்சி தோன்றுவது போல என்னெதிரே அந்த நாட்கள் தாம் எத்தனை தத்ரூபமாய் ஓடி வருகின்றன!

பாவாடையும் சட்டையும் அணிந்து கொண்டு எங்கள் வீட்டு ரேழியில் அந்தப் பெரிய ஆர்மோனியப் பெட்டிக்கு எதிரே நான் உட்கார்ந்திருக்கிறேன்.

அப்பா ஆர்மோனியத்தைத் தன் பக்கமாகத் திருப்பி வைத்துக் கொண்டு சுருதி போடுகிறார்.

"என்ன அமிர்தா, ஆரம்பிக்கலாமா!"

அவரிடம் பாட்டு கற்றுக் கொள்ளப் போகிற சமயங்களில் குரு–சிஷ்யை பாவம்தான். அப்பா, மகள் என்று எங்களை அந்த நேரத்தில் பார்க்கும் அன்னியர் யாரும் தெரிந்து கொள்ள முடியாது. அத்தனை விட்டேற்றியாய்ப் பேசுவார் அப்பா.

"ஹம்ஸத்வனி வர்ணம் இன்னும் சரியாகப் பிடிபடலையே. இன்னிக்கும் பழைய ஏட்டையே திருப்பலாம்!"

வகுப்பு ஆரம்பமாகிவிடும்.

அப்புறம்...ஒரு மணி, இரண்டு மணி நேரமானாலும் அவராக 'இன்று இவ்வளவு போதும்' என்று நினைத்தால்தான் உண்டு. சமயத்தில் சிக்ஷை வகுப்பு முடிந்திருக்கும். அவர் ஏதேனும் பிரசங்கம் ஆரம்பித்திருப்பார். ரஸமாக அவர் எதையாவது சொல்லும் போது நான் பாதியில் எழுந்தேனோ அவ்வளவுதான். மூன்று நாட்களுக்கு 'ரஸனையில்லாத ஜன்மம்!' என்று முனகித் நின்று விடுவார்.

ஆயினும் என் வாழ்க்கையில் இனிமை, இன்பம் என்ற வார்த்தைகளுக்கே அந்த நாட்களில்தான் அர்த்தம் இருந்தது. அம்மா என்னைக் கண்ணிமைக்குள் வைத்துத்தான் காப்பாற்றினாள். அவ்வளவு அன்பு! நான் ஒரே குழந்தை அவர்களுக்கு.

அவர்கள் அன்பிலே கவலையற்று நான் வளர்ந்தேன். 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும்' என்று சொல்வார்களே, அப்படித்தான் வளர்ந்தேன். சூழ்நிலை அத்தனை சுமுகமாக எனக்கு இசை பாடியது.

நான் வளர வளர, அப்பாவின் முகத்தில் கவலைக் குறிகளும் வளர்ந்தன. ஓரளவு எனக்கு இது ஆச்சரியமாகத் தான் இருந்தது.

தன் சங்கீத சம்பத்தை அப்படியே அள்ளி எனக்கு வழங்கியிருந்தார் அப்பா. இயற்கையாக அமைந்திருந்த குரலின் சகவாசத்தில், நானும் பூரண திருப்திக்குப் பாத்திரமான முறையில் அதை ஏற்றுக் கொண்டிருந்தேன்.

குத்துவிளக்கைத் தேய்த்து விளக்கி, எண்ணெய் திரியிட்டுப் பூஜை மாடத்தில் ஏற்றி வைத்தேன். அழகுத் தெய்வம் புன்னகை செய்வது போலத் தோன்றும் குத்து விளக்கின் குளிரொளியில்தான் உடம்பு எப்படிப் புல்லரிக்கிறது!

என்னை மீறிய மகிழ்வில், விளக்கின் முன் வீணையை எடுத்து வைத்துக் கொண்டு பாட ஆரம்பித்தேன். அந்தப் பரவச நிலையில் என் பாட்டில் என்னையே மறந்து போனேன்.

பாடி முடித்து, வீணையைச் சுவரோரமாய் நகர்த்தி உறை போட்டு விட்டு எழுந்தேன். எதிர்ச் சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தார் அப்பா.

"நீங்க எப்போ வந்தீர்கள், அப்பா! கவனிக்கவே இல்லையே!" என்று சொல்லிக் கொண்டே அவரை நமஸ்கரித்தேன்.

நான் தலை நிமிர்ந்த போது......

அப்பாவின் கண்களில் நீர்த்திரை படர்ந்திருப்பது விளக்கொளியில் பளபளத்தது. — ஏன்...!

"என்னப்பா, இது!"

"ஒன்று மில்லையம்மா! இன்னும் எத்தனை நாளைக்கு நீ இங்கேயே இருக்க முடியும்! கலியாணம் என்று ஆகி விட்டால் அப்புறம்......"

எனக்கும் ஒன்றும் சொல்லத் தோன்ற வில்லை. 'என் பிரிவைப் பற்றிய நினைப்பே அவரை இப்படித் தவிக்கிறதே! அப்புறம்...' என் யோசனை அங்கேயே சுற்றிச் சுற்றி வந்தது.

காலமும் எப்படி எப்படியோ சுற்றி விட்டது.

சின்ன வயதிலிருந்தே ஒரே செல்லமாக வளர்த்து விட்ட என்னை, செல்வமும் சிறப்புமுள்ள சீரான குடும்பத்தில் வாழ்க்கைப் படுத்த வேண்டும் என்பதுதான் அப்பாவின் ஆசையெல்லாம். அப்படித் தகுதி வாய்ந்த வரனைத் தேடி அப்பாதான் எவ்வளவு அலைந்திருக்கிறார்!

கடைசியில்......

ஒருநாள் அபரிமிதமான மகிழ்ச்சியுடன் வீட்டுக்கு வந்தார் அப்பா.

"அமிர்தா அதிர்ஷ்டக்காரிதான், மீனாட்சி! வரன் எப்படித் தெரியுமோ!" ஊஞ்சலில் வந்து உட்கார்ந்த அவர் வந்ததும் வராததுமாய், தமது வெற்றிப் பிரதாபத்தை யெல்லாம் அளக்க ஆரம்பித்து விட்டார்.

"'அவரு'க்கு இருபத்தைந்து வயதாகிறதாம். பங்காரு பாங்கில் உத்தியோகமாம். அவர் வகைக்கு ஐந்து ஏக்கர் அயனான பூர்விக நிலம் இருக்கிறதாம்.

"பையன் எப்படியிருக்கான் தெரியுமோ! ரவிவர்மா படத்திலே ராமர் இருக்கிறாரே அத்தனை லக்ஷணமாய் இருக்கிறான். சீர் வகையை

யெல்லாம் பார்க்கிறது என்ன! நமக்கு இருக்கிறது ஒரே பெண். அவளுக்கு இல்லாதது என்ன!'' — அப்பா மூச்சு விடாமல் பேசிக் கொண்டு போனார்.

என் இள மனத்தில் இன்பக் கற்பனைகள் ஆயிரமாயிரம் எழுந்து வளர்ந்தன. என்னைச் சுற்றிப் பறக்கும் இந்தக் கனவு கொடியில் நான் மயங்கித்தான் போனேன்.

எத்தனை இன்பக் கோட்டைகள்!

அப்பா சேகரித்துச் சொன்ன விஷயங்களனைத்தும் உண்மைதான். அவர், என் கணவர், மன்மத சொரூபமாய், அழகுப் பிம்பமாய்த்தான் இருந்தார். எல்லாமிருந்தும்......

மண வாழ்க்கை இன்பத்தின் ரேகை படிந்ததாகக் கூட எனக்குக் காட்சி யளிக்கவில்லை.

கலியாணம் முடிந்து சில மாதங்களுக்குப் பின் தான் நான் புக்ககம் சென்றேன். அன்று ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் என்னையும் என் கணவரையும் வண்டியேற்றி விட்டுத் தாங்க முடியாத பிரிவுத் துயரில் குழந்தைகள் போலக் கண் கலங்கி நின்ற அம்மாவையும் அப்பாவையும் பார்த்தபோது நான் நினைத்தேன். — 'மண வாழ்க்கை என்னை இன்பத்திலிருந்து பிரித்துச் செல்லுகிறதோ!' என்று.

அது அப்படியேதான் ஆகி விட்டது.

'அன்பு' என்ற சொல்லின் பொருளை அப்புறம் நான் அகராதியைப் பார்த்துத்தான் தெரிந்து கொண்டேன். வாழ்க்கையின் இன்பப் பகுதி எனக்கு அதைச் சொல்ல மறுத்து விட்டது.

என் கணவர் ஆஜானுபாகு! அழகர்! வெளியாரிடம் பேசும்போதெல்லாம் சிரித்துச் சிரித்துத் தான் பேசுவார். ஆனால் என்னைப் பார்த்ததுமே, என் குரலைக் கேட்டதுமே அவர் குணம் திடீரென மாறிவிடும். அப்பா கொள்ளை ஆசையுடன் கற்றுக் கொடுத்த சங்கீதச் செல்வத்தைப் புக்ககம் வந்தவுடனேயே மூட்டை கட்டிப் பத்திரமாகப் பூஜை மாடத்தில் வைக்க நேருமென்று நான் கனவு கூடக் கண்டதில்லை.

ஆனால்......

எங்கள் தனிக் குடித்தனம் ஆரம்பமாகி ஒரு மாதம்தான் ஆகியிருக்கும்.

## கைத்தறி

வழக்கம் போல் ஒரு நாள் காலை எட்டரை மணிக்கு டி. கே. சி. அவர்களும் ராஜாஜியும் மற்ற நண்பர்களும் இலை முன் வரிசையாக உட்கார்ந்து காலைப் பலகாரம் செய்து கொண்டிருந்தார்கள். டி. கே. சி. ஒவ்வொரு சமயம் திருநெல்வேலித் தோசையின் அந்தரங்க ரகசியங்களை எடுத்துச் சொல்லுவார். அது கம்பர் விளக்கம் போலவே காவிய ரசம் நிறைந்து இருக்கும். ஆட்டுரலின் விவரங்களோடு, எவ்வளவு உளுந்து, எவ்வளவு அரிசி, எவ்வளவு நேரம் ஊற வேண்டும், எத்தனை நேரம் ஆட்ட வேண்டும் என்பதையெல்லாம் ராஜாஜியும், டி. கே. சி.யும் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது, ஒரு சென்னைப் பத்திரிகை நண்பர் அவசரம் அவசரமாகத் தோசை, நாரத்தம் ஊறுகாய், துவையல் எல்லாவற்றையும் தீர்த்துக் கட்டி இலையைக் காலி செய்து விட்டு, ''என்ன சார்! எவ்வளவு நூற்றாண்டுகளாக இந்தத் தோசையும் இட்டிலியும் நம் நாட்டில் செய்து கொண்டு வருகிறார்கள், இதில் ஏதும் 'இம்ப்ருவ்மெண்ட்' டே செய்யவில்லையே!'' என்றார். ''முன்னாட்களில் எப்படிச் செய்தார்களோ அதே உரல், அதே கல், அதே உளுந்து வேறு மாறுதலே இல்லை, இது முன்னேற்றத்துக்கு அடையாளமா!'' என்று கேட்டார்.

''நீங்கள் கேட்டது ரொம்ப சரி'' என்றார் டி. கே. சி. சிரிக்காமல். ''கொஞ்சம் கூட மூளை இல்லை நம்மவர்களுக்கு! சாதம், குழம்பு, பச்சடி, துவையல், ரஸம், தோசை, இட்டிலி, மாட்டு வண்டி, இந்தப் பழைய சரக்குகள் எல்லாம், பதினாயிரம் ஆண்டு ஆனாலும் அப்படியேதான் இருந்து வருகின்றன. இரண்டு மாடுகளுக்குப் பதில் மூன்று மாடுகள் அல்லது வண்டிக்கு முன்னால் மாட்டைக் கட்டுவதை விட்டு வண்டிக்குப் பின்னால் கட்டி— ஓட்ட ஏற்பாடு செய்யவில்லை. எலெக்ட்ரிஸிடியில் சாதம் பக்குவம் செய்வதை வழக்கத்துக்குக் கொண்டு வரவில்லை. தோசையும் இட்டிலியும் முன்போலவே வட்டமாகவே செய்து வருகிறார்கள். சின்னச் சின்ன சதுரம், முக்கோணம், எண் கோணம் என்றெல்லாம் பிட்டாய் போல் செய்து காகிதத்தில் சுருட்டித் தரக் கூடாதோ! பைத்தியக்காரர்கள்! இதைப்பற்றி நீங்கள் பேப்பரில் எழுதுங்கள். நம்முடைய ஆசாமிகளுக்குக் கொஞ்சம் புத்தி வரும்'' என்றார். எல்லாரும் சிரித்தார்கள். டி. கே. சி. யும் பத்திரிகை நண்பரும் மட்டும் சிரிக்கவில்லை!

நம்முடைய சேலை வேஷ்டி நெய்யும் கைத்தறிக்காரர்களைப் பற்றி ஒரு பத்திரிகை சமீபத்தில் பைத்தியக்கார விமரிசனம் ஒன்று செய்திருக்கிறது. ''முன்னேற்றமே யில்லை. இந்தத் தொழில் ஒரே மாதிரியாகவே இருந்து வருகிறது. லக்ஷக் கணக்கான குடும்பங்கள் இப்படி ஒன்றும் சீர்திருத்தமே செய்யாமல் தொழில் நடத்தி வருகிறார்கள். இப்படியே போய்க் கொண்டிருந்தால் ஏன் தறிகாரர்கள் கஷ்டப்பட மாட்டார்கள்!'' என்று எழுதியிருக்கிறது. சில புராதன விஷயங்கள் இப்படித்தான் மாறுதல் இன்றி நடந்து வரும். தமிழ் எழுத்தையும் குழந்தைக்குப் பாலூட்டுவதையும் சீர்திருத்தம் செய்ய வேண்டிய அவசியமில்லை. மாறுதலெல்லாம் சீர்திருத்த மாகாது. குரங்குச் சேஷ்டை என்று பெயர் — பயனற்ற வழியில் புத்தியைச் செலுத்திப் பொருளைக் கெடுப்பதற்கு! ரிக்ஷாவை முன்னால் பிடித்து இழுக்கிறார்கள். சில ஊர்களில் பின்னால் நின்று தள்ளுகிறார்கள். ஆனால் வண்டிக்குப் பின்னால் மாடுகளைக் கட்டுவது என்பதில்லை. இதைச் செய்யவில்லையே என்று முன்னேற்றக் காரர்கள் — பாவம் — கஷ்டப்படுகிறார்கள்!

கடிகாரத்தில் மணி நான்கடித்தது. அன்று வீட்டு வேலைகளெல்லாம் கூட முடிந்திருந்தது.

மாமியார் ரேழி நிலைப்படியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டிருந்தார்.

" அத்தை, வீணையை எடுத்து வந்து கொஞ்சம் வாசிக்கலாமா !'' என்றேன்.

" உ...ம் '' என்று பட்டும் படாமலும் சொல்லி விட்டார் அவர். வேறு வேலையொன்றுமில்லாத தால் எனக்கு என்னவோ போலிருந்தது. பேசாது வீணையைக் கொணர்ந்து வைத்துக் கொண்டு வாசிக்க ஆரம்பித்தேன். இத்தனை நாட்கள் அதைத் தொடாமலேயே இருந்ததுதான் கார ணமோ என்னவோ விரல்களில் வேகம் இல்லை. ஆயினும் மனத்திலே அன்று மறுபடியும் ஜனித்த கீத தாகம் என்னைப் பாட வைத்தது. நான் என்னை மறந்துதான் பாடினேன்.

பிறந்தகத்திலே அனேகமாக நான் எப்போது வீணையை எடுத்து வைத்துக் கொண்டாலும் அப்பாவும் என் எதிரே வந்து உட்கார்ந்து விடுவார். இப்போது அவர் ஊரில் இருக்கிறார். ஆயினும்...அப்பாவின் நினைப்பு என்னில் எழுப்பிய குரு பக்தியில் என் மெய் சிலிர்த்தது. கண்டம் புதிய விழிப்புடன் திறந்தது. என் குரலில் எனக்கே பெருமிதம் ஏற்பட்டது.

அப்பாவுக்குப் பிடித்தமான கீர்த்தனைகளை யெல்லாம் பாடித் தீர்த்தேன். என் மாமியார் எழுந்து உட்கார்ந்து என் பாட்டை ரஸித்துக் கொண்டிருந்தாள். நேரத்தின் ஓட்டம் பற்றிய நினைவே எனக்கு இல்லை.

" இது என்ன வீடா, அல்லது சங்கீத சபையா !''—

இடிக் குரலில் எழுந்த ஒலியைக் கேட்டு நடு நடுங்கிப் போய் நான் பாடுவதை நிறுத்தி விட்டு எழுந்தேன்.

முகத்திலே செவ்வரியோட என் கணவர் எதிரே நின்றார்.

அன்று வீணையை உறை போட்டு மூடி மூலையில் நகர்த்தியதுதான். அப்புறம் புக்ககத்தில் வைத்து அதைத் தொடவே இல்லை. அப்பா இதய ஆழத்தில் எழுந்த ஆசையுடன் கற்றுக் கொடுத்த செல்வத்தை என் உள்ளத்தின் மூலையில் சிதைந்த என் ஆசைக் கனவுகளுடன் சேர்த்துப் பூட்டி வைத்தேன். அப்பாவுக்கு இது தெரிந்தால்...!

இந்த அளவோடு நின்றாலும் பரவாயில்லைதான். ஆனால்,...

நண்பர்களுடனெல்லாம் மகிழ்ச்சி பொங்கப் பேசும் அவர் என்னைக் கண்டாலே சிடுசிடுத்தார். வீட்டுக்குள் வந்ததுமே அவர் குணங்களெல்லாம் மாறிவிடும். நான் வந்த பிறகு தான் அவர் இப்படி மாறி விட்டாரோ என்று நினைத்தேன். என் அத்தை பாவம் வெகுளி ! மகனுக்குப் பயந்து நடுங்குவார் !

" இன்றைக்கு என்றில்லை அம்மா, அமிர்தா ! எப்பவுமே அவன் ஊருக்குத்தான் நல்லவன், வீட்டுவாசற்படி தாண்டி உள்ளே வந்துவிட்டாலே அவன் ருத்ரமூர்த்திதான். நான் பெற்ற வேலை!'' என்று அவரே நொந்து கொள்வார்.

" இது என்ன விசித்திர குணமோ !'' என்று நினைத்துக் கொண்டேன் நான்.

மாதங்கள் மடிந்தன. இனிப்பான பண்டங்களையே சுவைத்துப் பழகிய நாக்கில் வேம்பின் கசப்பு எப்படி பிருக்க முடியும் ! என் மண வாழ்வின் ஆரம்ப நாட்கள் அப்படித்தானிருந்தன. காலப் போக்கில் இந்த வாழ்வும் எனக்குப் பழகிப் போய் விட்டது.

நாட்கள் வேகமாக ஓடின. வருடம் ஒன்றும் உருண்டு விட்டது.

இதற்கிடையில் அப்பா என்னை அழைத்துப் போவது பற்றி எத்தனையோ முறை என் கணவருக்குக் கடிதம் எழுதி விட்டார். பதில் கடிதம் என்ன போயிற்று என்றுகூட எனக்குத் தெரியாது. ஆனால், அப்பா ஏனோ வரவில்லை. "வர வேண்டும், வரவேண்டும் என்றுதான் துடிக்கிறேன். அமிர்தா ! ஒவ்வொரு முறையும் எப்படியோ தட்டிப் போய் விடுகிறது'' என்று எனக்கு இதே ரீதியில்தான் கடிதங்கள் வரும். அவ்வளவுதான்.

அப்பா எப்படித்தான் என்னைப் பார்க்காமலிருந்தாரோ ! எனக்கு இப்படிச் சிறைப்பட்ட நிலையைக் கண்டு அழுகை அழுகையாய்த் தான் வந்தது. என் மனத்தின் உணர்ச்சிகளை யெல்லாம் கொட்டி அப்பாவை ஒரு முறை வந்து போகும்படி கடிதம் எழுதினேன்.

அன்று மாலை பாங்கியிலிருந்து வீட்டுக்கு வரும் போதே ஜுரத்துடன் வந்தார் என் கணவர். சாதாரண நாட்களிலேயே கேட்க வேண்டாம் ! நோயும் சேர்ந்து விட்டால்......

இரவு முழுதும் தூக்கமில்லை. ஒரே முக்கலும் முனகலும்தான். அவர் தூங்காதபோது எனக்குத் தூக்கமேது !

மறு நாள் ஜுரம் முந்திய இரவு போல் அவ்வளவு இல்லை. சற்று மட்டுப்பட்டிருந்தது. ஆயினும், சோர்வும், நோவும் அவரை இன்னும் சற்றுக் கோபமூட்டின.

அன்று மாலை என் அப்பா வந்தார். வேதனையினூடே என் நெஞ்சில் இனம் புரியாத இன்பம் கிளர்ந்தது.

" அவருக்கு ஜுரம் என்று நீ எழுதவில்லையே, அமிர்தா !'' என்று கேட்டார்.

"சாயங்கிரம்தான் எனக்குத் தெரியும், அப்பா!''

அப்புறம்...என் கணவருடன் அப்பா லோகாயதமாய் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார். தனித்து அப்பாவுடன் பேச எனக்குத்தான் வாய்ப்புக் கிடைக்கவில்லை.

என் கணவர் முன்னிலையில் ஆத்மார்த்தமாய் அப்பாவுடன் என்ன பேசுவது ! பொதுப்படையாகப் பேசிக் கொண்டே இரவு ஒன்பது மணி வரை உட்கார்ந்திருந்து விட்டோம். கலியாண மான பின்பு என்முன் கொஞ்சமும் சிடு சிடுக்காமல் என் கணவர் அன்றுதான் நடந்து கொண்டார். அதுவும் அப்பாவும்கூட உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்ததனால்தான் !

இத்தனை நாளும் இல்லாத நிம்மதி அன்று என் மனத்தில் நிறைந்திருந்தது.

மணிபதினொன்றுஅடித்தது. அப்பாவாசல்நடையில் படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டு விட்டார். மாமியார் கொட்டிலையடுத்த தாழ்வாரத்தில் எப்போதும் போல் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

நானும் அவரும் கூடத்தில் படுத்துக் கொண்டிருந்தோம். அவருக்கு உடம்பை என்னவோ செய்திருக்க வேண்டும் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தார்.

" உடம்பை என்ன பண்ணுகிறது !'' என்றேன், அவரருகில் போய் உட்கார்ந்து கொண்டே.

"என்ன பண்ணலும் ! தலையை வலிக்கிறது. கை காலெல்லாம் குடைகிறது. போறாதா !''

மெதுவாக அவர் தலையைப் பிடித்தேன்.

" இப்படி சேர்ந்தாற்போல ஒரு வாரமா ராத்திரி கண் முழிச்சது தான் ஆகலை ! உடம்பையும் கொஞ்சம் கவனித்துக் கொள்ள வேண்டாமா !''

நான் ஆதுரத்துடன் தான் சொன்னேன். அவருக்கு ஏனோ அது விபரீதமாகப் பட்டு விட்டது!

"உபதேசம் பண்ண வந்து விட்டயோ, அதிகப் பிரசங்கி!" எப்படித்தான் அப்பொழுது அவருக்கு அவ்வளவு பலம் வந்ததோ!

துள்ளி எழுந்து உட்கார்ந்து காலால் அவர் கொடுத்த உதையில் கதவிலே போய் விழுந்தேன். நெற்றியில் நல்ல காயம் பட்டு விட்டது. ரத்தம் ஆறாகப் பெருகி வழிந்தது.

இங்கே நடந்த அமர்க்களம் அப்பாவை எழுப்பி விட்டது போலும்.

"என்னது!..." என்று தூக்கக் கலக்கத்தில் கேட்டுக் கொண்டே அப்பா கதவு வரையில் வந்து விட்டார்.

அவர் என் காயத்தைப் பார்த்து விடக்கூடாதே என்று ஜாக்கிரதையாகப் புடவையால் காயத்தை மறைத்துக் கொண்டே, கதவு நிழலில் நின்று, "ஒண்ணுமில்லேயப்பா, நீங்கள் போய்த் தூங்குங்கோ!" என்றேன்.

அப்பா நம்பி விட்டார். வந்தவர் திரும்பிப் போய்ப் படுத்துக் கொண்டார்.

நெற்றி வலித்தது. நெஞ்சு அதைவிடக் கனத்தது. இரவும் பயங்கரமாய் நீண்டு படர்ந்தது.

பொழுது விடிந்து, நான் கிணற்றங் கரையில் பல் தேய்த்துக் கொண்டிருந்தேன்.

"அமிர்தா...!"

என் அப்பா! அவரை அப்போது பார்க்கையில் அழுகை மடை திறந்து கொண்டு வந்தது.

என் நெற்றிக் காயத்தை அவர் பார்த்தார்.

"உங்கள் வீட்டுக்கு நாலாவது வீட்டுக் கிழவி நம்மூர்த் திருநாளுக்கு வந்திருந்தாள். அவள் இங்கே நீ எப்படி இருக்கிறாய் என்பதை யெல்லாம் சொல்லி விட்டாள். ஊம்! கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுத்தாச்சு! என் கண் முன்னேயுமா இப்படி நடக்கணும்!" அப்பாவின் குரல் சோகத்தில் இழைந்து நெஞ்சை உருக்கியது.

"அப்பா!..." என்றேன். அவருக்கு இரவு நடந்தவை யெல்லாம் தெரிந்துதான் இருந்தது.

எனக்கு வேறெதுவுமே அவரிடம் சொல்லத் தோன்றவில்லை.

"என்னோடு பேசாமல் ஊருக்கு வந்துவிடுகிறாயா, அமிர்தம்!" அப்பா உறுதியாகத்தான் கேட்டார். ஆனாலும், அப்புறம் என் வாழ்வு! அடித்தாலும் அணைத்தாலும் அவர் என்னுடைய கணவர் இல்லையா!

"இல்லையப்பா! அப்புறம்......"

அவர் என் நிலையைப் புரிந்து கொண்டார். உள்ளிருந்து யாரோ வரும் அடியோசை கேட்டது.

அப்பா தன் உணர்ச்சிகளைப் பூராவும் இழுத்துப் பெருமூச்செறிந்து விட்டு மௌனமாய் நடந்து உள்ளே போனார்.

காலையில் சாப்பிட்டதுமே அவர் ஊருக்குக் கிளம்பி விட்டார்.

"இன்றைக்கு ஒருநாள் இருந்து விட்டுப் போங்களேன்!" என்று வேண்டிக் கொண்டேன்.

"இல்லே, அமிர்தம்! ஏதோ பார்க்கணும் போல இருந்தது, வந்தேன். ஜோலியிருக்கிறது! நான் போகணும்!"

எனக்குத் தெரியும்! அவரால் இனி இங்கே ஒரு கணமும் இருக்க முடியாது.

போகும்போது இரக்கமே உருவான அவர் என்னைப் பார்த்த பார்வை, இப்போது நினைத்தாலும் என் வயிற்றைப் பிசைகிறது.

அவர் உருவம் கண்ணுக்கு மறையும் வரை வாசல் நிலையில் சாய்ந்து பார்த்துக் கொண்டே நின்றேன். தெரு மூலை திரும்பி அவர் மறைந்து விட்டார். என்னைத் தனியே விட்டு விட்டு அப்பா பிரிந்து விட்டதுபோல் உணர்ந்தேன்.

சே! என்ன நினைப்பு!

ஆனால்... அன்று மாலை ஊரிலிருந்து வந்த தந்தி என் நினைப்பை ஊர்ஜிதம் செய்து விட்டது.

'அப்பா மாரடைப்பில் இறந்து போனார்!'

"அ...ப்...பா!......"

கதறினால் அப்பா வந்து விடுவாரா!

கலியாணக் கோலத்துடன் அழைத்து வந்த என்னை என் அப்பாவின் கடைசிக் கோலத்தைக் காணத்தான் என் கணவர் அழைத்துச் சென்றார்.

'அப்பா! அப்பா!' என்று வாய் ஓயும் வரை அலற என் நெஞ்சு துடித்தது. என் கணவர்கூடக் கண்ணீர் விட்டார். "அழாதே, அமிர்தா!" என்று இரக்கமாகப் பேசினார்.

சாவின் சந்நிதானம்தான் எத்தனை சக்தி வாய்ந்ததாக இருக்கிறது!

ஊர் வந்து விட்டது! இதோ எங்கள் தெரு! என் வீடு! எந்த வீட்டின் வாசலில் என் திருமணம் நடந்ததோ, அங்கே இப்போது என் அப்பாவின் அந்திம ஊர்வலத்துக்கு ஆயத்தம் நடக்கிறது!

"பெண்ணைப் போய்ப் பார்த்துவிட்டு வந்ததுமே சொன்னான்: 'கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுத்தாச்சு! என் கண்ணெதிரே அமிர்தா செத்துச் சுண்ணும்பாய்ப் போறதைப் பார்த்துக் கொண்டு நான் இருக்கேன்' என்று. உருகித்தான் போயிட்டான். உயிரையே விட்டுட்டானே!"—வீட்டினுள்ளே என் ஒன்று விட்ட பாட்டி அரற்றிக் கொண்டிருந்தாள்.

என் கூட வந்த என் கணவர் திடீரென 'ஹாவ்' என்றார். அவர் காதிலும் பாட்டியின் பிரலாபம் விழுந்து விட்டது. அவர் முகம் பேயறைந்தது போல் மாறியது.

—அப்புறமும் நாட்கள் ஓடின. அவை எதற்காவது மரியாதைசெலுத்தி என்றாவது நின்றதுண்டா!

என் கணவர்தான் ஸ்தம்பித்து விட்டார். அன்று அவர் முகத்திலே படர்ந்த கலக்கம் அப்



புத்தனம்பட்டி குளத்திரி பெரியண்ணபிள்ளை அவர்களின் திருவளர்ச் செல்வன் பி. ஆர். முத்துஸ்வாமிக்கும், வெலகண்ணை கல்பொடவு கரு. ஆண்டியா பிள்ளை அவர்களின் திருவளர்ச் செல்வி தெய்வானைக்கும் பண்டாரவேலையில் 2—2—55ந் தேதி திருமணம் சிறப்பாக நடந்தேறியது. தம்பதிகளுக்கு உறவினர்களிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகளும், பரிசுகளும் ஏராளமாக வந்தன.

வாழ்க, மணமக்கள்!

புறம் மறையவேயில்லே. அவர் கோபம் எங்கே ஓடி ஒளிந்தது என்றே தெரியவில்லே.

"அமிர்தூ!" என்று அழைப்பார். நான் அவர் எதிரே போய் நிற்பேன். கண் இமைக்காது பார்த்துக் கொண்டிருப்பார் அவர்.

"என்ன வேணும்......!"

அவர் கண்கள் திடீரெனக் கலங்கி விடும். முகத்திலே சொல்லொணுத சோகம் குமையும்.

"நான் கொலேகாரன் இல்லேயா, அமிர்தம்!" என்று திடீரெனக் கேட்பார். ஏளனமாகத் தனக்குத்தானே நகைத்துக் கொள்வார்.

இரவு தூங்குவதே கிடையாது. எப்பொழுது பார்த்தாலும் மௌனச் சிந்தனேதான்! தனக்குத் தானே மறுகும் அவரது இந்த நிலே என்னுல் சகிக்க முடியாததாக இருந்தது.

இயந்திரம் போல 'கடனே' என்று பாங்கிற்குப் போய் வரும் நேரம் தவிர, பாக்கிப் பொழுதெல்லாம் கூடத்தில் தான் அடைந்து கிடப்பார்.

அவர் உடம்பு இந்த ஏக்கத்தில் நாளுக்கு நாள் மெலிந்து உருக் குலேந்தது. கட்டமைந்த அவரது உடற்பொலிவு எப்படியோ அழிந்து போய்விட்டது. சோய்ந்து போன உள்ளம், சோய்ந்த உடல்—இவற்றிற்கும் நோய் நொடிக்கும் தான் என்ன உறவு! பாலேவனத்தில் வீசும் அனற் காற்று ஆளேயே பொசுக்குகிறதல்லவா! அப்படித்தான் ஆயிற்று என் நிலேயும்.

'இது என்ன ஒரே அழுகை மயமாகி விட்டதே!' என்றுதான் யாரும் நினேப்பார்கள்! ஆனுல் என் கதை அப்படித்தான் ஆகிவிட்டது. இல்லேயென்ருல், இந்தத் தளர்ந்த நிலேயில் அவர் எலும்பை உருக்கும் இருமல் ஏன் வர வேண்டும்!

ஒரு நாளிரவு! இருமல் வாய் ஓயாது அவரை வாட்டி எடுத்தது.

"டாக்டரிடம் காட்டக் கூடாதா! இப்படியே இருந்தால்...என் கதி என்ன!"

அவர் வறட்சியாகச் சிரித்தார்.

"என்னேக் கலியாணம் செய்து கொண்ட போதே உன்கதி அதோகதிதான் என்று தெரிந்திருக்கே, அமிர்தம்!"

மறுநாள் நானே டாக்டரை வரவழைத்தேன். அவர் என்னேப் பார்த்து "டாக்டரை ஏன் வரவழைத்தாய்!" என்று கேட்கவில்லே.

டாக்டர் சொன்ன சேதிதான் என்னேக் கதி கலங்க அடித்தது.

"இதயம் ரொம்பப் பலவீனமாகி விட்டதம்மா! ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேணும்."

"நீங்கதான் எப்படியும் காப்பாற்றனும், டாக்டர்!"

"பார்க்கலாம் அம்மா!"—டாக்டர் போய் விட்டார். பின்னுல் யாரோ சிரித்தார்கள்.

திரும்பினேன். என் கணவர்தான் சிரித்தார்.

"அமிர்தம்! நீ அப்பாவி உனக்கு ஒன்றுமே தெரியாது!"

அவர் சிரிப்பு, அவர் வாக்கு எல்லாம் உண்மைதான்! மேலே வளர்த்துவானேன்!

ஏக்கம் புதிய உருவில் அவரை ஒரு நாள் ஏப்பமிட்டு விட்டது!—இப்போது என்னுள்ளிருந்து ஏதோ சிரித்தது. நான் அழுதேன்!

அப்புறம்......

நான் வாழ்கிறேன், என்னே ஈன்ற என் அன்னேக்காக, அவரை ஈன்ற என் மாமிக்காக!

வயிறு வளர்க்க நான் பாடுகிறேன். என் இதயம் அழுகிறது.—இரண்டும் சங்கமிக்கையில்

---

# தமிழ் அறிஞர் மறைந்தார்

தமிழ் அன்னேக்குத் தொண்டுபுரிந்த பழம்பெரும் அறிஞர் வரகவி திரு அ. சுப்ரமண்யபாரதியார்.

1880-ம் ஆண்டு திருச்சி ஜில்லா, முசிரிதாலூக்கா, அலேகரை கிராமத்தில் பிறந்த பாரதியார் பிள்ளேப் பிராயத்திலேயே தமிழ் மொழியினிடம் அளவற்ற ஆர்வம் கொண்டார். கல்லூரிப் படிப்பை ஓரளவில் நிறுத்திக் கொண்டு திரிசிரபுரம் மகாவித்வான் சிவானந்த சாகர யோகீச்வரர் என்னும் அருந்தமிழ்ப் புலவரிடம் தமிழ்க் கல்வி பயின்று, "வரகவி" என்றும், "பாரதி" என்றும் இளமைப் பிராயத்திலேயே சிறப்புப் பெயர்கள் பெற்ருர். "ஜடா வல்லவர்" என்னும் அரிய நவீனத்தை எழுதிப் பெரும் புகழும் பெற்ருர்.



தமிழில் வசன நூல்கள் ஏராளமாக எழுதி வெளியிட்டுத் தமிழுக்கு ஏற்றம் தந்தார்; கதைகள், கட்டுரைகள், கவிதைகள், நாடகங்கள் முதலிய எல்லாத்துறைகளிலும் அவர் எழுத்துத் திறமைசிறப்பாக இடம் பெற்றது.

குழந்தைகளுக்குச் செய்யும் தொண்டே உண்மையான தேசத் தொண்டென மதித்து, ஸ்ரீ பாரதியார், சிறுவர்களுக்கேற்ற அனேக நூல்களே எளிய நடையில் எழுதி வெளியிட்டார்; மகாபாரதம், ராமாயணம், ஸ்காந்தம், பாகவதம் முதலிய மாபெரும் காவியங்களின் சாரத்தை வடித்தெடுத்து, சிறுவர்களுக்கு உகந்த முறையில் பல சிறு நூல்களாக எழுதி வெளியிட்டார்; "பால விநோதினி" என்னும் குழந்தைப் பத்திரிகையைப் பதினறு ஆண்டுகள் சிறப்பாக நடத்தினர்.

ஸ்ரீமத் பாகவதத்தை வடமொழிப் புலவர்களின் உதவியைக் கொண்டு தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார்; ஆனந்த ராமாயணம், தத்துவசங்கிரக ராமாயணம் முதலிய மொழிபெயர்ப்பு நூல்களும் அவரது எழுத்துத் தொண்டின் சிகரங்களாக நிற்கின்றன.

முருகப் பெருமான் மீது மாருத நேயம் பூண்டு, பல தீந்தமிழ்ப் பாமாலேகள் புனேந்துள்ளார்.

இப் புலவர் பெருந்தகை, ஸ்ரீ பாரதியார் மார்ச்சு 14-ந் தேதி, எழுபத்தைந்தாவது வயதில், பெரம்பூரில் உள்ள தமது இல்லத்தில், தமிழன்னேயின் பாத கமலங்களில் கலந்து விட்டார். அவரது குமாரர் 'கல்கி' உதவியாசிரியர் ஸ்ரீ ஸோமாஸ் கந்தன் (ஸோமாஸ்) அவர்களுக்கும், மற்றுமுள்ள சுற்றத்தினருக்கும் நமது அநுதாபம் உரியது.

★

# ஸோலார் ஒர்க்ஸ்

12, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

டெலிபோன் : 3649

★

எல்லாவிதமான அச்சு வேலைகளையும் - பெரியதாக இருந்தாலும் சிறியதாக இருந்தாலும் - வெகு சகாயமான விகிதத்தில் பூரண திருப்தி அளிக்கும் வகையில் செய்து கொடுக்கப்படும்.

★

பாங்குகளுக்குத் தேவையான கணக்குப் புத்தகங்களும் மற்ற கணக்குப் புத்தகங்களும் தயாரித்து பையிண்டு செய்து கொடுப்பதில் விசேஷ அனுபவம் வாய்ந்தவர்கள்.

★

நவீன அச்சு இயந்திர வசதிகளுடன் விசேஷ தொழில் அனுபவம் பெற்றவர்களின் நேரிடையான கவனிப்பும் இருந்து வருவதால்தான் புத்தக அச்சு வேலைகள் யாவும் மிக்க திருப்தி அளிக்கும் முறையில் செய்து கொடுக்கப்படுகிறது.

★

எங்கள்பரிபூரண சேவை உங்களுக்கு எப்போதும் கிடைக்கும்.



# SOLAR WORKS

**12. THAMBU CHETTY ST., MADRAS. I.**

# புதுச்சேரி விழா

✧ எஸ். வி. எஸ் ✧

வெகு நாட்களாகவே எனக்குப் புதுச்சேரிக்குப் போக வேண்டும் என்ற விருப்பம் இருந்து வந்தது. இதை வெளியிட்டால் 'யாருடைய கடனுக்கு எவ்வளவு தொகைக்கு ஏமாற்றப் பார்க்கிறாய் !' என்றோ, அல்லது 'இந்தப் பழக்கம் எத்தனை நாளாக !' என்றோதான் கேள்விகள் என் நண்பர்களிடம் எழும். சும்மா ஊர் பார்க்க, வேடிக்கை பார்க்க என்று சொன்னால் நம்பவே மாட்டார்கள். புதுச்சேரிப் பனைமரத்தடியில் உட்கார்ந்து பால் சாப்பிட்டாலும் வேறு விதமாகத்தானே எண்ணுவார்கள் !

ஆனால் சென்ற சனிக்கிழமை காலை ஒரு நண்பரிடம் "நான் புதுச்சேரிக்குப் போகப் போகிறேன் !" என்றேன்.

"ராஜாஜி போகிறாரே, அந்த விழா சம்பந்தமாகவா ! போய்விட்டு வந்து எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுங்கள்" என்றார் அந்த நண்பர், ரொம்பவும் உற்சாகமாக.

எனக்கு ஒரே வியப்பாகப் போய் விட்டது. "ராஜாஜி புதுச்சேரிக்குப் போகிறார்" என்ற செய்தி முதல் நான் தான் வந்திருந்தது. அதற்குள்ளாகவா புதுச்சேரி சம்பந்தமாக வேடிக்கையாகப் பேசப்பட்ட செய்திகள் உடனே மனத்தை விட்டு அகன்று விட்டன ! இதுதான் பெரியோர்கள் அடிக்கடி பல ஊர்களுக்குப் போவதால் அந்த ஊர்கள் அடையும் புனிதம் போலும். ஆம், எவ்வளவோ பெரிய கோயிலாக இருக்கலாம், ஆனாலும் "இது பாடல் பெற்ற ஸ்தலமா!" என்றுதானே கேட்கத் தோன்றுகிறது. அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞான சம்பந்தர் ஆகியோரால் பாடப்பெற்ற ஸ்தலத்துக்கு நம் மனசும் அதிக மதிப்பும் மரியாதையும் கொடுக்கிறது அல்லவா ! அதுபோல் புதுச்சேரிக்கு ராஜாஜி விஜயம் செய்கிறார் என்ற செய்தியே புதுச்சேரிக்குப் புதுமையும் மதிப்பும் புதிய சிறப்பும் வழங்கி விட்டது.

அன்று விழாவில் பேசியபோது ராஜாஜி பின்வருமாறு குறிப்பிட்டார்.

"புதுச்சேரி என்று நினைத்தால் கடன்காரர்களை ஏமாற்றி ஒளிந்து கொள்பவர்களும், மது பானம் செய்ய விரும்புகிறவர்களும் வரும் இடமென்று யாருக்கும் ஞாபகம் வரும். ஆனால் அது ஒருபுறம் கிடக்க, இது எத்தகைய தேசபக்தர்களுக்குப் புகலிடமாக விளங்கிய ஸ்தலம். முந்தைய பிரிட்டிஷ் அரசாங்கத்திலிருந்திருந்தால் தூக்கிவிட்டிருப்பார்கள், அப்படிப்பட்ட தேசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்ட பெரும் தேசபக்தர்களுக்குப் புகலிடமாக இருந்த புண்ணிய ஸ்தலம் இந்தப் புதுச்சேரி. இந்த எண்ணம்தான் என் மனத்தில் மேலோங்கி நிற்கிறது !" என்றார்.

ஆம், பெரியோரைப் பெரியோரே உகப்பர்; ராஜாஜிக்கு, சுப்பிரமணிய பாரதியார், வ.வே.சு. ஐயர், அரவிந்தர் போன்ற தேச பக்த புரட்சி வீரர்கள் உயிர் தப்பி வாழ்ந்த ஸ்தலமல்லவா இந்தப் புதுச்சேரி என்ற நினைவுதான் அப்பொழுது மனத்திலிருந்தது என்று சொல்லவும்



ராஜாஜி புதுவை நகரைச் சுற்றிப் பார்க்கிறார்.

வேண்டுமா! இந்த மகான்கள் அங்கு வாழ்ந்ததும், ராஜாஜியின் இந்த விஜயமும் சேர்ந்து புதுச்சேரிக்குத் தனியானதோர் புகழும் பெருமையும் சம்பாதித்துக் கொடுத்து விட்டன!

* *
*

ராஜாஜி ஏற்கெனவே புதுச்சேரிக்கு முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் வந்திருக்கிறார். சுப்பிரமணிய பாரதியாரின் விருந்தினராக இருந்திருக்கிறார். இப்பொழுது அவர் புதுச்சேரிக்கு வருவதன் முக்கிய காரணம், புதுச்சேரியில் 'பிரஞ்சுக் கழகம்' ஒன்று பிரஞ்சு சர்க்கார் தொடங்குவதுதான்.

சென்ற சனிக்கிழமை 19-ம் தேதி பிற்பகல் சரியாக இரண்டரை மணிக்கு ராஜாஜி தமது இல்லத்தை விட்டுப் புதுச்சேரிக்குக் காரில் புறப்பட்டார்.

அவரோடு, கல்கி ஆசிரியர் திரு சோமுவும் நானும் நம் புகைப்படக் கலைஞர் திரு கணேஷும் வேறொரு காரில் புறப்பட்டோம்.

சரியாக ஐந்தரை மணிக்குப் புதுச்சேரி போய்ச் சேர்ந்தோம். புதுச்சேரி ஊருக்குள் நுழையும் போது தெருவின் குறுக்கே, "அறிவுக் களஞ்சியமே வருக!" "அடிமை வாழ்வு அகற்றிய தலைவா வருக!" என்பன போன்ற பல வரவேற்புத் தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. இவற்றைப் படிக்கும்போது எனக்கு ஒரே ஆனந்தமாக இருந்தது.

ஆகா! அங்கே போனபோது என்ன வரவேற்பு! என்ன வரவேற்பு! புதுச்சேரியின் பிரதம கமிஷனர் திரு கேவல்சிங் உள்பட சர்க்கார் மாளிகைச் சேவகர் வரை என்னுடைய வரவையே வெகு ஆவலுடன் எதிர் நோக்கி நின்றார்கள். காரணம் என்னவென்று நினைக்கிறீர்கள்! ராஜாஜி வண்டியில் வைக்க மறந்து விட்டுப் போன ஒரு பையை நான் எடுத்துக் கொண்டு சென்றதுதான்!

அன்று மாலை, உழியஞ்சாலை என்னுமிடத்தில் புதுச்சேரி காங்கிரஸ் சபையின் சார்பில் ஒரு மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது. சுமார் முப்பதினாயிரம் பேர் ஆண்களும் பெண்களுமாகக் கூடி யிருந்தார்கள்.

ராஜாஜி வந்ததுமே பலத்த கரகோஷம் எழுந்தது. பிறகு வரவேற்புரை வாசித்தளிக்கப்பட்டது. பல சங்கங்களின் சார்பில் ஏராளமான மாலைகள் மலையாகக் குவிந்தன.

ராஜாஜி பேச எழுந்தார். அவ்வளவுதான்! மக்களின் உற்சாகம் கரைபுரண்டு விட்டது என்பதை உணர்த்தும் வகையில் கரகோஷம் எழுந்தது. பிறகு ராஜாஜி பேசினார்:

"உங்களுக்கு சுயராஜ்யம், சற்றுத் தாமதித்துக் கிடைத்தது. பாரத நாட்டின் மற்றப் பகுதியிலுள்ளவர்கள் சுயராஜ்யம் அடைந்த போது அதைக் கண்டு ஆனந்தப் பட்டீர்கள். அதற்குச் சற்றுத் தாமதித்து உங்களுக்குச் சுதந்திரம் கிடைத்தது. இதனால் ஒரு பெரிய சௌகரியம் உங்களுக்கு. நீங்கள் உங்களுக்கு என்று தனியாகவும் ஒரு சுதந்திர நாள் கொண்டாடலாம் அல்லவா! நம் நாட்டில் எந்தத் திருநாளும் இரண்டு இரண்டாக வரும். ஏகாதசி, ஒரு நாள் ஒரு சாரார் கொண்டாடுவார்கள். மறுநாள் வேறு ஒரு சாரார் அதே ஏகாதசியைக் கொண்டாடுவார்கள். இப்படியே இரண்டு ஏகாதசி, இரண்டு கார்த்திகை, இரண்டு கிருஷ்ண ஜயந்தி வருவதில்லையா! அம்மாதிரி இரண்டு சுயராஜ்யத் திருநாள் கிடைத்தது உங்களுக்கு!

"சுயராஜ்ய நாட்டில் மக்கள் சந்தோஷமாக, யோக்கியமாக வாழ வேண்டும். இதற்கு ஒரே வழி நம்மை நாமே திருத்தி உயர்த்திக் கொள்வதுதான். பொய் பேசுவதில்லை, லஞ்சம் கொடுப்பதில்லை, வியாபாரத்தில் ஏமாற்றுவதில்லை, என்றெல்லாம் உறுதி செய்து கொண்டு நடந்து கொள்ள வேண்டும். இக் காரியங்கள் சர்க்கார் சட்டமியற்றிச் செய்ய முடியாது. இது உங்கள் உள்ளத்தில் தானாகக் கிளம்ப வேண்டும். இப்படியெல்லாம் நான் பேசுவதைக் கேட்டு 'இது என்ன வேதாந்தம் பேசுகிறீர்களே' என்று நீங்கள் எண்ணலாம். அன்னிய அரசாட்சி இருந்த வரையில், அன்னிய ஆட்சி நீக்குவதைப் பற்றியதாகவே அரசியல் இருந்தது. அன்னிய ஆட்சி நீங்கி, நம்மை நாமே ஆண்டு கொள்ள வேண்டும் என்ற நிலை ஏற்பட்ட பிறகு, வேதாந்த விஷயம் தான் நம்முடைய அரசியல் விஷயம். அன்னிய ஆட்சி தீர்ந்து போன பின் சுயராஜ்யம் என்பது தன்னைத்தான் ஆள்வதே ஆகும். நம்முடைய வேதாந்தம் தான் மக்கள் பண்பை உயர்த்தும்.



புதுச்சேரிக் கடற்கரையிலுள்ள சிற்பத் தூண்களைத் திரு கேவல் சிங் கட்டிக் காண்பிக்கிறார்.



உதியஞ்சாலை மைதானத்தில் நிகழ்ந்த பொதுக் கூட்டத்தின் ஒரு பகுதி.

யோக்கியமான மக்களாக வாழ வழி கற்றுத்தரும். சமீபத்தில் இப் பிரதேசத்திலும் தேர்தல்கள் வரும். அப்போது ஜாதியின் பெயரால் வோட்டுக் கேட்டால் கொடுக்காதீர்கள். லஞ்சம் கொடுத்து வோட்டுக் கேட்டால் வோட்டுக் கொடுக்காதீர்கள். லஞ்சம் வாங்காமலிருப்பதோடு லஞ்சம் கொடுக்காமலும் இருக்க வேண்டும்!" என்று கூறினர்.

புதுச்சேரி மக்கள் தங்கள் எதிர்கால வாழ்க்கையை எப்படி வகுத்துக் கொள்ள வேண்டும் என்று அறவுரை பெற்றதில் மிக்க திருப்தியுடன் சென்றனர்.

* * *

மறுநாட் காலை எட்டு மணிக்கு நாங்கள் அரமனைக்குச் சென்று ராஜாஜியைச் சந்தித்த போது, உட்புறம் ஒரு மகாவிஷ்ணு சிலை இருப்பதைக் கண்டோம். "இச் சிலையும், மற்றும் புதுச்சேரியில் காணப்படும் அழகிய சிற்பச் சிலைகள் பலவும் பழைய பிரஞ்சு கவர்னர்களால் செஞ்சிக்கோட்டையிலிருந்து கொண்டு வந்து காப்பாற்றப்பட்டு வருகின்றன!" என்று திரு கேவல் சிங் கூறினர்.

ராஜாஜி "இந்த ஊரில் டூப்ளே சிலை உண்டல்லவா!" என்று கேட்டார்.

"கடற்கரையி லிருக்கிறது. ஊருக்குள் ஒரு முறை சுற்றிப் பார்த்து விட்டு வரலாமா!" என்று கேட்டார் திரு கேவல் சிங்.

நாங்கள் கடற்கரை நோக்கிப் புறப்பட்டோம்.

புதுச்சேரிக் கடற்கரையில் அழகான சிற்ப வேலைகள் செய்யப்பட்ட தூண்கள் ஆறு நிற்கின்றன. ஒவ்வொன்றையும் மணிக்கணக்காகப் பார்த்துக் கொண்டிருக்கலாம். ஒரு தூணின் நான்கு புறங்களில் மகா விஷ்ணுவின் அவதாரங்கள் நான்கை, யாரோ பெயர் தெரியாத ஒரு சிற்பி வெகு நேர்த்தியாகச் செதுக்கி யிருந்தார்.

சிதிலமான துறைமுகத்தோடு விளங்கிய கடற்கரையிலிருந்து ஐம்பது கஜ தூரத்தில் டூப்ளேயின் உருவச்சிலை உயரமாக நின்றது. அதை நெருங்கிப் பார்த்தபோது, சில நிறுத்தப்பட்டிருந்த பழைய ஸ்தம்பங்கள் கவனத்தைப் பெரிதும் கவர்ந்து விட்டன! ஜடைவில்லை முதலியவற்றில் செய்யப்படும் நுட்பமான வேலைகளுக்கு இணையாகச் சிறு உளியைக் கொண்டு கல்லில் ஒரு சிற்பி அற்புதமான தன் கலைத் திறனைக் காண்பித்திருந்தான்.

இப்படிப் பல சரித்திரப் புகழ் பெற்ற காட்சிகளைப் பார்த்துவிட்டு ராஜ் பவனம் திரும்பினேம். பத்து மணிக்குப் பிரஞ்சு பண்பாட்டுச் சங்கத்தின் துவக்க விழா நடக்க இருந்தது. அந்த விழாவுக்குப் புறப்படுவதற்காகத் தயாரானேம்.

(அடுத்த இதழில் முடியும்.)

## கல்கி திரு கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

**2000/- ரூபாய்ப் பரிசு**

தமிழில் அருமையான கதைகள் பல எழுதி அழியாப் புகழ் பெற்ற கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவாக இப்போட்டி நடத்தப்படுகிறது.

தேர்ந்தெடுக்கும் கதைகளுக்கு, ரூபாய் இரண்டாயிரம் அடியிற் கண்டவாறு பரிசு வழங்கப்படும். போட்டியின் முடிவு தேதி 30-6-55.

| | |
|---|---|
| முதற் பரிசு | ரூ. 500 |
| இரண்டாம் பரிசு | ரூ. 250 |
| மூன்றும் பரிசு | ரூ. 125 வீதம் பத்துக் கதைகளுக்கு |

பரிசுக் கதைகள் சம்பந்தமான நிபந்தனைகளும் மற்ற விவரங்களும் அடுத்த இதழில் வெளியாகும்

## பம்பாயில் கலை விழா

பம்பாய் பாரதிய சங்கீத கலைக் கழகத்தின் இரண்டாவது ஆண்டு விழா மார்ச்சு மாதம் 4-ந் தேதி முதல் ஆறு தினங்கள் விமரிசையாக நடைபெற்றது. பம்பாய் மந்திரி ஸ்ரீ ஷாந்திலால் ஷா விழாவைத் துவக்கி வைத்தார். விழா நடந்த ஆறு தினங்களிலும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கலைக்கு இடம் அளிக்கப்பட்டது. விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த கலைஞர்கள் அரியக்குடி திரு ராமாநுஜ ஐயங்கார் குழுவினர், மதுரை திரு மணி ஐயர் குழுவினர், புல்லாங்குழல் திரு மகாலிங்கம் குழுவினர், வழுவூர் திரு ராமய்யாப் பிள்ளையின் சிஷ்யை குமாரி சரோஜா முதலியவர்களையும், கலைக் கழக நிர்வாகிகளையும், உற்சாகம் நிறைந்த ரஸிக மகா சபையின் ஒரு பகுதியையும் இந்தப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம். ★







# சமநிலை—

## மோட்டார் எண்ணெய்களில் கூட வெகு முக்கியமான அம்சம்!

உங்களது மோட்டார் எண்ணெய் மூன்றுவித காரியங்களைச் செய்கிறது — குளிர்ச்சியைக் கொடுக்கிறது, சுத்தம் செய்கிறது, தேய்ந்து போகாமல் தடுக்கிறது. இந்த மூன்று குணங்களில் ஏதாவது ஒன்று இருந்தால்கூட அதைப் பெருமையாக மிகைப்படுத்திச் சொல்வது ஒரு எண்ணெய் தயாரிப்பவருக்குச் சுலபம். ஆனால் ஒரு சிறந்த எண்ணெயின் தன்மை இம் மூன்று விசேஷ காரியங்களையும் சம நிலையுடன் செய்து வருவதுதான். **காஸ்ட்ரால்** எண்ணெயில் இந்த மூன்று குணங்களும் சம நிலையில் பொருந்தி இருக்கிறது. பெருவாரியான மோட்டார் ஓட்டுபவர்கள் இதுவே எல்லா அம்சங்களும் கொண்ட ஒரு சிறந்த எண்ணெய் எனக்கருதுகிறார்கள். இவ்வருஷத்தில் சென்ற வருஷங்களைவிட அதிகமாகமோட்டார் ஓட்டுபவர்கள் **காஸ்ட்ரால்** உபயோகிக்கிறார்கள்.




**காஸ்ட்ரால் - எண்ணெய்களில் மிகச் சிறந்தது**

**ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி லிட்.**

C. 27

# உங்கள் பாதுகாப்பிற்காக

நீங்கள் "'ஹாஸலீன்' ஸ்னோ" வாங்கும்பொழுது பாட்டிலின் மூடியின் மேல் யூனிகார்ன் டிஸைன் வரையப்பட்டுள்ள வெள்ளி நிற அலுமினியம் ஆலு காப்சூல் சரியானபடி பொருத்தப்பட்டிருக்கிறதா என்பதை கவனிக்கவும். இந்த ஒரு வழியில் மட்டுமே நீங்கள் அசலான சரக்கு வாங்குவதை நிச்சயமாய் அறிந்து கொள்ளமுடியும்.






இந்த டிஸைன் நீல நிறத்தில் மேல் புறத்திலிருக்கிறது.

# "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

"'ஹாஸலீன்' ஸ்னோ" டிரேட் மார்க்

பர்ரோஸ் வெல்கம் அண்ட் கம்பெனி (இந்தியா) லிட்.

தபால் பெட்டி 290, பம்பாய்.




சன்னல் வழியே தெருப்புறத்தை நோக்கியவாறே உட்கார்ந்திருந்தாள் சுலோசனா. வெளிப்புறத்தின் அமானுஷ்ய அமைதியும், இருளும் அவள் மனத் துயரைப் பின்னும் அதிகமாக்குவது போன்ற பிரமை ஏற்பட்டது. கண்ணீர் அவள் கண்களில் திரையிட்டு நின்றிருந்தது.

"சுலோ! நாளைக்கு விடிந்தால் வெள்ளிக் கிழமை! தெரியுமோ இல்லையோ? ஆபீசிலிருந்து நாளைக்கு மாலை சீக்கிரமே வீட்டுக்கு வந்து விடு. வேலை இருந்தால் மறுநாள் போய்ச் செய்து கொள்ளலாம்!" என்றாள் அவள் தாயார் ராஜம்.

"அதுதான் வருகிறேன் என்று சொன்னேனே? எத்தனை தரம் தொண தொணவென்று சொல்லுவாய்?" என்று துக்கம் நெஞ்சையடைக்கப் பேசினாள் சுலோசனா.

"நன்றாயிருக்கிறது போ, நீ அழுகிறது! கல்யாணம் என்றால் இப்படிக் கண்ணீர் விடும் பெண்ணை நான் எங்கேயும் பார்த்ததில்லை. நம்முடைய பவிஷுக்கு இதைவிட நல்ல வரன் கிடைத்து விடுமாக்கும்......!" என்று மகளைக் கடிந்து கொண்டாள் ராஜம்.

படுக்கையை விரித்துப் படுத்துக் கண்களை இறுக மூடிக் கொண்டாள் சுலோசனா. அவள் கண் முன்னே மானேஜர் நாகராஜனின் அழகிய முகமே திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தது. இந்த வரன் நிச்சயமாகி விட்டால் நாகராஜனை அவள் மறந்து விட வேண்டியதுதானா? அவனிடம் அவளுக்கு இருந்த அன்பையும், பாசத்தையும், பழக்கத்தையும் கனவு என்று எண்ணி ஒதுக்கிவிட வேண்டியதுதானா? அது எப்படி முடியும்? ஏன் முடியாது? அடி, அசட்டுப் பெண்ணே! நீ இப்படி உள்ளம் உருகித் தவிப்பதைப் போல் நாகராஜனின் நெஞ்சமும் உன்னையே நினைத்துக் கலங்கினால் அல்லவா நீ அவனுக்காகக் கண்ணீரைப் பெருக்க வேண்டும்? அன்று நீ மனம் விட்டு அவனிடம் பேசிய வார்த்தைகளுக்கு அவன் அளித்த மறுமொழி என்ன? அதைக் கேட்ட பின்புமா அவனிடம் உனக்கு அன்பு!

இதயத்துள் புகுந்து குடைச்சலை உண்டாக்கிய சிந்தனை அளித்த வேதனை தாளாமல் படுக்கையில் புரண்டாள் சுலோசனா.

❖ ❖ ❖

சுலோசனாவின் தந்தை மூர்த்தி இறந்து மாதங்கள் பல கடந்து விட்டன. உயிருடன் இருந்தபோது நல்ல சம்பாத்தியம் கிடைத்தும், அவர் வரவுக்கு மிஞ்சிய செலவு செய்ததனால் பெருங் கடனாளியானார். வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கக் கெடு தாண்டி விடவே, கடன்காரர்கள் பென்னியை நெறித்தனர். எனவே மனைவியின் தாய் வீட்டு நகைகளை விற்றுச் சில கடன்காரர்களின் வாயை அடைத்தார். அப்புறம்தான் அவருக்கு ஞானோதயம் பிறந்தது. கட்டிய மனைவிக்குத் தாம் செய்த துரோகத்தை எண்ணி எண்ணிக் கலங்கி, அதே துயரத்தில் ஒருநாள் உயிரை விட்டார். இவ்வளவுக்கும் இடையில் மூர்த்தி ஒரே ஒரு நற்காரியம் செய்திருந்தார். அதாவது தம் பெண் சுலோசனாவை எப்படியோ கல்லூரிப் படிப்பு படிக்க வைத்திருந்தார். சுருக்கெழுத்து முதலியன கற்கவும் அனுமதி அளித்திருந்தார். தந்தையின் மரணத்துக்குப் பின் தவித்து நின்ற தாய்க்குத் தான் வேலை பார்த்துக் காப்பாற்றுவதாய்த் தேறுதல் கூறினாள் சுலோசனா. ஆனால் தாய்க்கு மனம் கேட்கவில்லை.

மூர்த்தியின் மறைவுக்காக வந்து துக்கம் விசாரித்து விட்டுச் சென்ற அவருடைய நண்பர்களில் நாராயணனும் ஒருவர். அவரிடம் மூர்த்தி வாங்கின கடன் ரூபாய் முந்நூறு மட்டும் அப்படியே தீர்க்கப்படாமலிருந்தது. எல்லோரையும் போல் பொதுப்படையாகத் துக்கம் விசாரித்த பின் அவர், "சில மனிதர்கள் இப்படி வாழ்நாள் முழுவதும் விழித்த குருடர்களாக இருந்து விட்டு, தமக்குப் பின் தம் மனைவி, மக்களைப் பரிதாபகரமான நிலையில் நிறுத்தி விட்டுச் சென்று விடுகின்றனர். அதுவும், கொடுத்த கடனைத் திருப்பித் தரும்படியாகக் கழுத்தில் கத்தி வைத்துக் கடன்காரர்கள் நாளைக்குச் சூழ்ந்து கொண்டால், தன் குடும்பம் எப்படிப் பரிதவிக்கும் என்பதைக் கற்பனை செய்து உணரும் தீர்க்காலோசனை அவர்களுக்கு இருந்தால்தானே? மூர்த்தி என் அத்தியந்த சிநேகிதர்தான். அவர் என்னிடம் கடன் வாங்கும்போது நான் படித்துப் படித்துச் சொன்னேன். வயது வந்த பெண் ஒருத்தி கல்யாணத்துக்கு

நிற்கிறாளே! அவர் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருக்க வேண்டாமா?" என்றார்.

அவர் பேச ஆரம்பித்தவுடனேயே சுலோசனாவுக்கே உரித்தான படபடப்பு, ஆத்திரம், பிடிவாதம் எல்லா குணங்களும் ஒரேயடியாக எழும்பித் தலைதூக்கிக் கொந்தளித்தன. தாயை விடத் தந்தையிடம் அதிகப் பற்றுதல் அவளுக்கு. அவரை, 'கடன்காரர்' 'முன் யோசனை இல்லாதவர்' என்று அவர் குறிப்பிட்டது அவளுக்குப் பொறுக்கவில்லை. அயல் மனிதர் என்றுகூட யோசியாமல், "இதோ பாருங்கள், மாமா! தனக்கு எப்போது சாவு வரும் என்பதை எப்பேர்ப்பட்ட யோகியாலும் கூட நிர்மானிக்க முடியாது. தான் அல்பாயுசில் சாக வேண்டும் என்றோ, சாகப் போகிறோம் என்றோ, அல்லது தனக்குக் கடன் கொடுத்தவர்கள் வாயில் விரலை வைத்துக் கொள்ள வேண்டும் என்றோ, என் தந்தைக்கு ஒருநாளும் எண்ணம் கிடையாது. அவர் சாகும் போது என்னிடம், உங்கள்



கடன் தொகை பாக்கியாக நிற்பதையும், அதை என்னை வேலை பார்த்துச் சம்பாதித்துத் தீர்த்து விடும்படியும் சொல்லி விட்டுத்தான் இறந்தார். அதன்படி நான் நிச்சயம் செய்து விடுவேன். உங்கள் கடனை அவர் தீர்க்கவில்லையே என்பதற்காக அவரை இப்படி முன் யோசனை இல்லாதவர் என்றெல்லாம் தூஷித்துப் பேசினால் என் மனசு பொறுக்கவில்லை" என்று சொல்லி விட்டுத் தந்தையின் நினைவு வந்து 'ஓ' வென்று அழுது விட்டாள். ராஜம் தன் மகளின் துணிச்சல் பேச்சால் நடுங்கி அவளைப் பயத்துடன் ஒரு தடவை விழித்துப் பார்த்தாள்.

நாராயணனும் சிறிது நேரம் சிலையாய் உட்கார்ந்திருந்தவர், "அடாடா! என் பேச்சை நீ தவறாக எடுத்துக் கொண்டு விட்டாய், அம்மா! உன் தந்தை என் நண்பர் என்ற எண்ணத்தில் சற்று சுவாதீனத்துடன் பேசினேன். அவ்வளவுதான்" என்றார் சமாதானப்படுத்தும் நோக்கத்தோடு.

அவர் எழுந்து விடைபெற்றுக் கொள்ளும் போது சுலோசனா, "இன்னும் சில நாட்களுக்குள்ளேயே அவர் கடனை நாம் தீர்த்து விடுவோம் என்று சொல்லு, அம்மா!" என்று சொல்லி விட்டுச் சரேலென உள்ளே சென்று விட்டாள்.

நாராயணன் சென்றவுடன் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்த ராஜம், "சுலோ! வாழ்க்கையில் பெண்களுக்கு, அதுவும் நம்மைப் போல் திக்கற்றவர்களுக்கு ரொம்பப் பொறுமை வேண்டும். அந்தப் பெரியவரிடம் அப்படியா படபடவென்று பேசுவது? அவர் ஒருவேளை தம் கடனைத் திருப்பித் தர வேண்டாம் என்று கூடச் சொல்லியிருப்பார். அத்தனை சுவாதீனமாகப் பேசியவரிடம் பாம்பு போல் சீறி நீ காரியத்தைக் கெடுத்து விட்டாய்! தைரியமாகச் சொல்லி விட்டாயே! 'வாடியம்மா!' என்று எந்த ஆபீசில் உனக்கு வேலை வைத்திருக்கிறது?" என்று துயரமும் கோபமும் பொங்கக் கேட்டாள். பெண்ணை அதுவரை அத்தனை கோபித்துக் கொண்டதேயில்லை அவள். சுலோசனாவுக்கும் மெள்ள யோசித்துப் பார்த்த போதுதான் தன் தவறு புரிந்தது. ஆனால் அந்தத் தவறை ஒப்புக் கொள்ளவும் அவளுக்கு மனமில்லை.

சுலோசனா தினமும் 'தேவை' விளம்பரங்களைத் தினப் பத்திரிகையில் கவனமாய்ப் பார்த்துக் கொண்டு வந்தாள். ஒன்றும் அவளுக்கு ஒத்து வரவில்லை.

அன்று காலை, நாராயணன் வேலை விஷயமாக ஏதோ சொல்லச் சுலோசனாவை அழைப்பதாகச் சொன்னான், ஒரு வேலைக்காரப் பையன். "நீ அன்று அவரிடம் அவ்வளவு அலட்சியமாகப் பேசினாலும் அவ

ருக்கு என்னமோ நம்மிடம் ரொம்பப் பரிவு, விசுவாசம்'' என்றான் ராஜம்.

"ஆமாம்! தன் கடன் தொகை சீக்கிரம் கிடைக்குமே என்று அத்தனை கரிசனம்!'' என்று கழுத்தை நொடித்தாள் சுலோசனா.

சைக்கிள் கம்பெனி ஒன்றில் டைபிஸ்ட் தேவையிருப்பதையும் அந்தக் கம்பெனியின் இருப்பிடம், போகும் வழி முதலியவற்றையும் நாராயணனிடமிருந்து விவரமாகக் கேட்டுக் கொண்டு வந்தாள் சுலோசனா.

உள்ளே வரச் சொல்லி அனுமதி கிடைத்துச் சென்று மானேஜர் முன்னிலையில் நின்ற போது, மேலே மின்சார விசிறி சுழன்று கொண்டிருந்தாலும் சுலோசனாவுக்கு வியர்த்துக் கொட்டியது. அத்தனை இளம் வயதினர் அவர் என்பதை அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. முகத்தில் வந்து புரண்ட சுருண்ட தலைமயிரை ஒதுக்கும் நிமித்தம் தலையை அனுயாசமாக ஒரு முறை ஆட்டிப் பின்புறம் சாய்ந்து கொண்ட மானேஜர் தொண்டையைப் பலமாகக் கனைத்துக் கொண்டு "உட்காருங்கள்!'' என்று நாற்காலியைச் சுட்டிக் காட்டினார்.

அவர் என்ன கேள்விகள் கேட்பாரோ என்று நடுங்கி வறண்ட நெஞ்சுடன் உட்கார்ந்தாள் சுலோசனா. காரியாலய வேலை சம்பந்தமாக அவர் கேட்ட சில கேள்விகளுக்கு 'டக், டக்'கென்று பதிலளித்தாள்.

பிறகு, நாராயணன் என்பவருக்குத் தன் தந்தை தரவேண்டியிருந்த கடனைப் பற்றிக் கூறி, அதைத் தீர்ப்பதற்காகவே தான் வேலை தேடி வந்ததாகவும் கூறினாள்.

"உங்கள் கடமை உணர்ச்சியும், பொறுப்பும் ஆச்சரியம்தான்! இந்த மனோபாவம் உங்கள் வேலையிலும் இருக்க வேண்டும்!'' என்று தம் அழகிய வெண் பற்கள் ஒளி வீச, புன்முறுவல் பூத்தவாறே கூறி மானேஜர் மணியை அடித்தார்.

தலைமைக் குமாஸ்தா பயபக்தியுடன் வந்து நின்றார். "இவர்களுக்கு வேலை சம்பந்தமான விஷயங்களைக் காட்டுங்கள்!'' என்று உத்தரவளித்தார் மானேஜர்.

மானேஜர் அறைக்கு அடுத்த அறையில் டைப்ரைட்டருக்கு முன் உட்கார்ந்திருந்த சுலோசனாவுக்கு முகத்தில் அரும்பும் வியர்வையைத் துடைத்துக் கொள்ளத்தான் நேரம் சரியாக இருந்தது.

முதல் மாதச் சம்பளத் தொகையைக் கையில் பெருமையுடன் வாங்கிய போது சுலோசனாவின் கையிலிருந்த அழகிய மணிபர்ஸுடன் அவள் மென்மையான இதயமும் கனத்திருந்தது. மானேஜர் நாகராஜன் மீது அவள் கொண்டு விட்ட காதல் சுமைதான் இதற்குக் காரணம் என்று தனியாக ஒரு தடவை சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

"அம்மா, இந்த நாற்பது ரூபாய் பாதி குடும்பச் செலவுக்கும் பாதி கடனுக்கும்! என்ன சொல்கிறாய்?'' என்றாள் சுலோசனா, பெருமையுடன். அவள் பணத்துடன் நாராயணனின் இல்லம் தேடிச் சென்ற போது அவர், "மொத்தமாகச் சேர்த்தே கொடுக்கலாம். அவசரமில்லை. வேலை சௌகரியமாக இருக்கிறதோ?'' என்று விசாரித்தார்.

ஒரு காரியத்தை நாம் பூர்த்தி செய்து தீர்க்க வேண்டும் என்று பிரதிக்ஞை செய்து கொள்ளும்போது தான் அதற்கு எங்கிருந்தோ இடையூறுகளும் சங்கடங்களும் மலையாய் விழுந்து தடுத்துப் பொறுமையைச் சோதிப்பது வழக்கம். இரண்டாம், மூன்றாம் மாதங்களில் சுலோசனா மிகவும் சிரமப்பட்டு மிச்சம் பிடித்துச் சேர்த்த தொகையை எங்கிருந்தோ வந்த மூர்த்தியின் கடன்காரர் ஒருவர், மூர்த்தண்யமாக நின்று வாதாடி வாங்கிச் சென்று விட்டார். இதனிடையில் சுலோசனாவிடம் மிகவும் சகஜமாகப் பழகி விட்ட நாகராஜன், "கடன் தொகை தீர்ந்து விட்டதோ!'' என்று கேட்டபோதெல்லாம் அவளுக்கு அழுகையே வந்து விடும் போலிருந்தது. அதே சமயத்தில் ஆறுதலாகவும் இருந்தது.

தன் மன நிலையை இத்தனை புரிந்து கொண்டு நடக்கும் அவர் ஒரு நாள்

திடீரென்று, "உன்னை நான் காதலிக்கிறேன்!"—என்று சொல்ல மாட்டாரா என்று கூடச் சாதக பட்சியாக எதிர்பார்த்தாள். பெண்ணான அவள், தானே வலுவில் போய் எப்படிக் கேட்பது?

அன்று அவள் வீட்டுக்குள் சோர்வுடன் நுழைந்தபோது அவள் தாய் மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட்டாள். "சுலோசனா! நாம் யாரைப் பற்றித் தவறாக, அலட்சியமாக நினைக்கிறோமோ அவர்களால்தான் நமக்குப் பெரிய லாபம் சம்பவிப்பது வழக்கம். இன்று நாராயணன் மனைவியுடன் நம் வீட்டுக்கு வந்திருந்தார். உன்னை அவர் தம் நாட்டுப் பெண்ணாக்கிக் கொள்ள ரொம்ப விரும்புகிறாராம். சீர் செனத்தி விஷயங்களில் அவருக்கு அக்கறை யில்லையாம். நம் கடன் தொகையைக் கூட திருப்பித் தராமல் உனக்கு ஏதாவது நகை செய்து போட்டுவிடச் சொன்னார். வருகிற வெள்ளிக்கிழமை பெண் பார்க்கச் சம்பிரதாயப்படி வருகிறார்களாம்!" என்று மூச்சு விடாமல் கூறினாள்.

"என்ன...?" என்று திடுக்கிட்டு வினவிய சுலோசனாவுக்கு இருதய ஓட்டமே நின்று விடும் போலிருந்தது. "இதென்ன, அம்மா! என்னைக் கேட்காமல், எனக்கு விருப்பமில்லாமல் இந்த ஏற்பாடெல்லாம் எப்படியம்மா நீ செய்யலாம்?" என்று வெறி பிடித்தவள் போல் கூச்சலிட்டாள்.



திருநெல்வேலி, 'பாலஸ் டி வேல்ஸ்' தியேட்டர், 'லயன் ஆட்டோமோபைல்ஸ்' ஆகிய ஸ்தாபனங்களின் அதிபரான திரு எம். சோமசுந்தரம் பிள்ளை அவர்களின் புதல்வி செள. பொன்னம்மாளுக்கும், கிண்டி இஞ்ஜினியரிங் காலேஜில் உத்தியோகம் பார்க்கும் செல்வன் என். நடராஜன் B. E., க்கும், சிந்து பூந்துறையில் சென்ற ஜனவரி மாதம் 28-ந் தேதி திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. அதையொட்டி சென்னை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டலில் 6-2-55 தேதி நடந்த வரவேற்பில் நகரப் பிரமுகர்களும், தொழிலதிபர்களும் கலந்து கொண்டார்கள். ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை அவர்களும் அவர் மனைவியாரும் திருமணத்துக்கும், வரவேற்புக்கும் வந்திருந்தவர்களுக்கும், நல் ஆசிகள் அனுப்பி இருந்தவர்களுக்கும் தங்கள் வந்தனத்தைத் தெரிவிக்கிறார்கள்.

வாழ்க, பொன்னம்மாள் — நடராஜன்!

"விருப்பமில்லாமல் என்ன வந்துவிட்டது?" என்று அவளை மிரட்டினாள் ராஜம்.

திடீரென்றுதான் சுலோசனாவுக்கு அந்த எண்ணம் உதித்தது. பணம் காசு வாங்காமல் தன்னை மணந்து கொள்ள விரும்புகிறார்கள் என்பதனால்தானே இந்த சம்பந்தத்துக்கு அம்மா சம்மதிக்கிறாள்! அவள் காதலித்த நாகராஜனும் அதற்குச் சம்மதித்தால்......? சிந்தனையைச் சிறகச் செலவிட்ட அவள் மறு நாள் காலை மானேஜரிடம் சென்று, "உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!" என்று ஆரம்பித்து "எனக்கு அந்த வரனில் துளிக்கூட விருப்பமில்லை. பணம் காசின்றித் திருமணம் நடந்து விடுமே என்பதற்காக அந்த மனிதரின் புத்திர சிகாமணிக்கு மாலையிட எனக்கு மனமில்லை" என்று விவரமாகக் கூற வேண்டும் என்று திட்டமிட்டாள். அப்பொழுது "ஏன்?" என்று அவர் கேட்பார். "காரணம் உங்கள் மீது நான் கொண்டு விட்ட காதல்!" என்று பதிலளிக்க வேண்டும் என்றும் அவள் முடிவு செய்து கொண்டாள்.

ஆனால் அவள் எதிர்பார்த்ததற்கு நேர் மாறாக, "இந்தக் காலத்தில் இப்படிப்பட்ட நல்லெண்ணம் உள்ள ஆசாமிகள் கூடவா இருக்கிறார்கள்? அட, ஆச்சரியமாக இருக்கிறதே! நானானால் அவர்களுக்குக் கோவில் கட்டிக் கும்பிடுவேன்! இந்த விவாகத்துக்கு மட்டும் சம்மதித்து விட்டீர்களானால் இதை விட மகிழ்ச்சியும், நிம்மதியும் தரும் திருப்பம் உங்கள் வாழ்க்கையில் வேறு கிடைக்காது என்றுதான் நான் சொல்லுவேன்!" என்று அடித்துச் சொன்னான் நாகராஜன்.

எரிமலையே புரண்டு தலை மீது விழுந்து விட்டாற் போலிருந்தது சுலோசனாவுக்கு. பணம் காசு இல்லாத ஏழைப் பெண்ணை மணக்கத் தனக்குச் சம்மதமில்லை என்பதை அவன் பூடகமாகத் தெரிவித்ததாகவே அவளுக்குப் பட்டது.

வீட்டுக்கு வந்த அவள் வேறு வழியின்றி அம்மாவிடம் விவாகத்துக்கு 'உம்' கொட்டினாள். இருந்தாலும் நாகராஜனை வாழ்க்கைத் துணைவனாக அடையும் பாக்கியம் தனக்கில்லையே என்ற நப்பாசை அவள் மனத்தை வேதனையில் ஆழ்த்தத்தான் செய்தது.

* * *

அன்று வெள்ளிக்கிழமை. மாலை சற்றுச் சீக்கிரமே வீடு திரும்பி விட்ட சுலோசனா மனச் சோர்வுடனேயே தன்னை அலங்கரித்துக் கொண்டாள்.

காரில் வந்து இறங்கி, உள்ளே பிரவேசித்து உட்கார்ந்தனர் நாராயணன், அவர் மனைவி, பிள்ளை மூவரும். தலை குனிந்தவாறே வந்து, நமஸ்காரம் செய்துவிட்டு நிமிர்ந்த சுலோசனா, தன் கரம் பற்றப்




இருபத்திரண்டு ஆண்டுகளாகச் சிறந்த முறையில் தொண்டாற்றி வரும் சென்னை மாணவர் மன்றத்தின் இருபத்து மூன்றாவது ஆண்டு விழா மார்ச் 11-ல் சென்னை கோகலே மன்றத்தில் குதூகலமாகக் கூடியிருந்த மாபெரும் சபையின் முன்னிலையில் நடைபெற்றது. திரு எம். கே. தியாகராஜ பாகவதர் பிரார்த்தனை கீதம் பாடிய பிறகு விழாவுக்குச் சென்னை நகர சபைத்தலைவர் திரு எம். ஏ. சிதம்பரம் தலைமை தாங்கினார். மந்திரி பரமேசுவரன் மாணவர் மன்றத்தின் போட்டிப் பரீட்சைகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார். விழாவையொட்டி நடந்த ஓவியக் காட்சியை திரு பி. ஆர். சீனிவாசன் திறந்து வைத்தார். "கல்கி" திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் திருவுருவப் படத்தை கல்கி ஆசிரியர் திரு சோமு திறந்து வைத்தார். இந் நால்வருக்கும் மன்றத்தார் வாழ்த்துப் பத்திரம் வாசித்தளித்தார்கள். மன்றத்தின் சார்பில் மன்றத்தலைவி டாக்டர் எஸ். தருமாம்பாள், புலவர் மயிலை சிவமுத்து, திரு அழகுவேலனார், திரு கோ. வில்வபதி முதலியோர் சொற்பொழிவாற்றினர். திரு தணிகை உலகநாதன் நன்றிகூற விழா இனிது முடிந்தது.

விழாக் காட்சிகள் சிலவற்றை மேலே படத்தில் காணலாம். மேற்படி ஆண்டு விழாவை யொட்டி மாணவர் மன்றத்தார் ஒரு மலர் வெளியிட்டிருக்கின்றனர். கைக்கு அலங்காரமாகவும், கருத்துக்கு விருந்தாகவும் இருக்கும் சிறு கதைகள், கட்டுரைகளுடன் விளங்கும் அந்த மலரில் மன்றக் காப்பாளர், செயற்குழுவினர் ஆகியோரின் பெயர்கள், மன்ற நோக்கங்கள், இருபத்திரண்டு ஆண்டுகளாக மன்றம் செய்த சேவையின் விவரங்கள், சென்ற ஆண்டு விழாவின் காட்சிகள், 1954-ம் ஆண்டு மாணவர் மன்றத்தார் நிகழ்த்திய போட்டித் தேர்வுகளில் பரிசுபெற்ற மாணவ மாணவிகளின் புகைப்படங்கள், உறுப்பினர் பட்டியல் எல்லாம் இருக்கின்றன. மாணவர் மன்றத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொள்ளும் முறையில் மலரைத் தயாரித்திருக்கும் மன்றத்தாரைப் பாராட்டுகிறோம். மலர் கிடைக்குமிடம்: 17, இரத்தின முதலி தெரு, பெத்து நாயக்கன்பேட்டை, சென்னை.

---

போகும் யுவனைப் பார்த்தபோது ஸ்தம்பித்து நின்று விட்டான். உள்ளே விடுவிடு வென்று வந்து நின்றபோது அவன் கால்கள் துவண்டு நிற்க இயலாமல் தத்தளித்தன. என்ன இது? மானேஜர் நாகராஜனா அப்பாவின் சிநேகிதர் நாராயணனின் பிள்ளை!

அங்கு நிலவிய நீண்ட மௌனத்தை நாராயணன் தான் கலைத்தார். சுலோசனாவின் தாயைப் பார்த்து, "அன்று உங்கள் வீட்டுக்கு முதன்முதல் வந்தபோதே இந்த விவாகத்தைப் பற்றிப் பேசத்தான் நான் வந்தேன். என் ஆப்த நண்பர் மூர்த்தியின் மீது நான் வைத்த அன்புக்கு அடையாளம் காட்ட வேண்டுமல்லவா? ஆனால் அன்று நான் சற்றும் எதிர்பாராத வகையில் சுலோசனா ஒரு பெரிய சபதத்தைச் செய்து விடவே, என்ன செய்வது என்று யோசித்துக் கடைசியில் என் பிள்ளை மானேஜராக இருந்த கம்பெனியிலேயே 'டைபிஸ்ட்' வேலை காலியிருந்ததால் அதை அவளுக்கு ஏற்பாடு செய்தேன். என் பிள்ளைக்கு மட்டும் உண்மையை வெட்ட வெளிச்சமாக முன்பே விளக்கிச் சொல்லி ஆபீசில் ஒன்றுமறியாதது போலவே பழகச் சொன்னேன். அவனும் அப்படியே நடித்தான்!" என்றார்.

ராஜம் வியப்பினாலும் மகிழ்ச்சியாலும் அகல விரிந்த கண்களுடன் நின்று கொண்டிருந்தான். குறும்புச் சிரிப்புடன் அமர்ந்திருந்த நாகராஜனின் மோகன உருவத்தை ரகசியமாக எட்டிப் பார்த்துப் பெருமையால் பூரித்த சுலோசனாவுக்கு, 'எத்தனை பொல்லாத மனிதர் இவர்!' என்று தோன்றியது. அதே சமயத்தில் மட்டற்ற பெருந்தன்மை வாய்ந்த நாராயணனிடம் விறைப்பாக நடந்து கொண்டதற்கு அவள் உள்ளம் மட்டற்ற பச்சாத்தாபப் பட்டது.

எந்த சீதோஷ்ண நிலைக்கும்
ஏற்றது...





போனிக்ஸ் விசிறிகள்

- நீடித்த உழைப்பு
- இணையற்ற சேவை
- சிக்கனச் செலவு

**Phoenix** EWI LTD

**FANS**

RM.S. & CO., LTD.

H.O. 16. BROADWAY... MADRAS-1. | Branches Madura & Vijayawada

Chari

---

# வாழ்க்கையில் ஆனந்தம்






# லோத்ரா

**கர்ப்பாசய ரோகநிவாரணி**

வாழ்க்கைக்கு உத்சாக மூட்டுவது ஒரு துறுதுறுப்பான குழந்தை. லோத்ரா உட்கொண்டு இந்த தாய் அவ்வித ஆனந்தத்தை அடைய முடிகிறது.

**கேஸரீ குடீரம் லிமிடெட், மதராஸ்-14**

தமிழ்நாடு ஏஜண்டுகள்: சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், மேலக் கோபுர வீதி, மதுரை



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 12. திருநெல்வேலி

தேன் தமிழ் நாடு என்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே. இந் நாட்டிலே சிவனருள் சிறந்தது; திருவாய் மொழி பிறந்தது. எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய ஈசனை,

''தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே''

என்று திருவாசகம் ஓலமிட்டு அழைத்தது.

இத்தகைய தென்பாண்டி நாட்டின் தலைநகரம் நெல்லைமா நகரம். இந் நகரின் பழம் பெருமையைப் பாடினார் நல்லியற் கவிஞராகிய ஞானசம்பந்தர். அவர் திருநெல்வேலிக்கு எழுந்தருளிய போது தமிழ்த் தென்றல் வரவேற்றது. அப் பூங்காற்றின் இனிமையை நுகர்ந்த இளங் கவிஞர் ''தென்றல் வந்துலாவிய திருநெல்வேலி'' என்று உள்ளம் குளிர்ந்து பாடினார்.

நெல்லைமா நகரின் நல்லணியாகத் திகழ்வது நெல்லையப்பர் திருக்கோவிலேயாகும். அக்கோயிலைச் சுற்றி மாடவீதிகள் உண்டு. மாடம் என்னும் சொல் கோவிலைக் குறிக்கும். வஞ்சிமா நகரத்தில் திருமால் பள்ளி கொண்டிருந்த கோவில் ஆடகமாடம் என்று சிலப்பதிகாரத்திலே குறிக்கப்படுகின்றது. தான் தோன்றி மாடமும், தூங்கானை மாடமும் பாடல் பெற்ற சிவாலயங்களாகும். நெல்லைமா நகரின் மாட வீதிகளைச் சுற்றி நான்கு ரத வீதிகள் நன்று அமைந்துள்ளன.

நெல்லையில் உள்ள சில தெருக்களின் பெயர்கள் நல்ல தமிழுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். கூழைக் கடைத்தெரு என்பது ஒரு தெருவின் பெயர். குறுகிய தெருவாய் இருத்தலால் அப்பெயர் அதற்கு அமைந்தது என்று பொது மக்கள் கருதுகின்றார்கள். உண்மையில் அத் தெருவின் பெயர் கூலக் கடைத்தெரு என்பதாகும். 'கூலம்' என்பது ஒரு பழைய தமிழ்ச் சொல். உணவுப் பொருள்களாகிய நெல், புல் முதலிய பதினெட்டு வகைத் தானியங்களை விற்கும் கடை கூலக்கடை என்று முன்னாளில் வழங்கிற்று. மதுரையம்பதியில் கூலக்கடை வைத்து வாணிகம் செய்த புலவராகிய சாத்தனார் கூல வாணிகன் சாத்தனார் என்று சங்க நூல்களிலே குறிக்கப்படுகின்றார். இவரே ஐம்பெருந் தமிழ்க் காவியங்களில் ஒன்றாகிய மணிமேகலையின் ஆசிரியர். சோழ நாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் 'கூலம் குவித்த கூல வீதி'' ஒன்று இருந்ததென்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. கூல வீதி என்பதற்குக் கூலக்கடைத்தெரு என்றே பொருள் கூறிப் போந்தார் சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார். எனவே பழங் காலத்தில் பழகு தமிழில் வழங்கிய கூலக்கடைத் தெரு என்ற பெயரை இன்றளவும் பாதுகாத்து வைத்திருப்பது நெல்லை மா நகரமே யாகும்.

பாண்டிய மன்னர்கள் தென்னாட்டை ஆண்ட காலத்தில் அரசாங்கத்துக்குரிய வரிப் பணத்தைக் காலத்தில் செலுத்தத் தவறிய குடிகள் காவற்புரையில் அடைக்கப் பட்டார்கள். வரிப் பணத்தைக் கொடுத்துத் தீர்க்கும் வரை அவர்களை அங்கே வைத்துக் காவல் செய்வது வழக்கம். இத்தகைய காவல் புரை யொன்று நெல்லையம் பதியில் இருந்தது. காவற் புரை யிருந்த தெரு 'காவற் புரைத் தெரு' என்று பேர் பெற்றது. நாயக்க மன்னரின் காரிய கர்த்தராகிய காவை வடமலையப்பன் என்பவர் நெல்லை நாட்டில் ஆட்சி புரிந்த காலத்தில் தென்திருப்பேரை யென்னும் ஊரைச் சேர்ந்த பரம வைணவர் இருவர் அக் காவற் புரையில் அடைக்கப் பட்டார்கள். அவ்விருவரும் சிறந்த தமிழறிஞர். கவிபாடும் திறமையும் பெற்றவர். ஒரு மாத காலம் காவற்புரையில் சிறையிருந்த இருவரும் கவிபாடிக் காலம் கழித்தனர். 'இக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்று நம்பி, தென்திருப்பேரையில் கோயில் கொண்ட இறைவனை நினைந்து மனங் கசிந்து பாடினர்.

''திங்கள்ஒன் றாகச் சிறையிருந் தோம்இச் சிறையகற்றி
எங்கள்தம் பால்இரங் காததென் னே? இசை நான் மறையின்
சங்கமும் கீதத் தமிழ்ப்பாட லும்சத்த சாகரம்போல்
பொங்குதென் பேரைப் புனிதா! கருணைப் புராதனனே!''

என்று முறை யிட்டனர் நாள் தோறும் இவர்கள் காவற்புரையில் இருந்து கவிபாடும் செய்தியைக் காவலாளர் வாயிலாகக் கேள்வியுற்ற வடமலையப்பன் காவற்புரைக்கு வந்து அன்னார் கல்வித் திறமையை அறிந்து சிறை

மீட்சி செய்தார் என்று ஒரு வரலாறு கூறுகின்றது. சிறைக் கோட்டத்தில் அவ்விருவரும் பாடிய பாடல்கள் மகர நெடுங்குழைக் காதர் பாமாலை என்று வழங்கி வருகின்றன.

குற்றவாளிகளை அடைத்து வைக்கும் வன் சிறைக் கோட்டமும் நெல்லைமா நகரில் இருந்ததாகத் தெரிகிறது. தண்டனை பெற்ற குற்றவாளிகளின் காலிலும் கையிலும் விலங்கிட்டு அடைத்து வைத்திருக்கும் சிறைச்சாலை 'விலங்கடி' என்று பேர் பெற்றிருந்தது. நெல்லையம்பதியில் மேல ரத வீதியை அடுத்து 'விலங்கடி முடுக்கு' என்னும் பேருடைய சிறிய தெரு வொன்றுள்ளது. அதுவே பழைய சிறைக் கோட்டம் இருந்த இடம் ஆகும்.

நெல்லை மாநகரின் தீர்த்தத் துறையாகிய சிந்துபூந்துறை சாலப் பழமை வாய்ந்தது. பூந்துறை என்பதே அதன் பழம் பெயராகும். அத்துறையில் நீராடப் போந்த திருஞான சம்பந்தர் அதன் இருமருங்கும் அமைந்த செழுஞ் சோலையைக் கண்ணுற்றார். அச் சோலையில் மகிழ்ந்து விளையாடிய மந்திகளை நோக்கி வியந்து நின்றார். அணி அணியாக மந்திகள் கிளைக்குக் கிளை தாவியபோது மரக் கொம்புகளில் உள்ள மலர்கள் குலுங்கிச் செந்தேன் துளிக்கக் கண்டார். அக் காட்சியை ஓர் அழகிய பாட்டாகப் பாடினார்.

கந்தமார் தருபொழில் மந்திகள்
பாய்தர மதுத்திவலை
சிந்துபூந் துறைகமழ் திருநெல்வேலி
உறை செல்வர் தாமே !

என்று பூந்துறை யுடைய பெருமானைப் புகழ்ந்து போற்றினார். அவர் வாக்கின் திறத்தால் பூந்துறை சிந்து பூந்துறையாயிற்று.

இத்தகைய சிந்து பூந்துறையில் முன்னாளில் வாழ்ந்தார் ஒரு செந்தமிழ்ச் செல்வர். அவர் காசியிற் போந்து குமரகுருபர முனிவரிடம் கல்வி கற்றவர். கற்பனைக் களஞ்சியம் என்று கற்றறிந்தோர் பாராட்டும் சிவப்பிரகாச முனிவரின் செந்தமிழ் ஆசிரியர். வெள்ளியம்பலவாணர் என்னும் பெயருடையவர். தேவாரம் முதலிய திருமுறைகளில் நிரம்பிய அறிவு வாய்ந்திருந்த இக்கவிஞர் பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும் என்று கருதித் தாம் இயற்றிய சில பாடல்களைத் தெய்வப் பாடல்களின் இடையே செருகிச் சேர்த்து விட்டார் என்று சொல்லப்படுகின்றது. இவர் செருகிய பாடல்களை 'வெள்ளி பாடல்' என்று வெளியேற்றுவர் தென்னறிவுடையோர்.

நெல்லையம்பதியில் எண்ணிலும் எழுத்திலும் வல்லார் பலர் வாழ்ந்தார்கள்; பண்ணிலும் பாட்டிலும் சிறந்தார் பலர் திகழ்ந்தார்கள். அவர்களுள் ஒருவர் அழகிய சொக்கநாதர். அறுபது ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அவர் வாக்கிலே ஒளியுண்டு; பாட்டிலே சுவையுண்டு. நெல்லையம் பதியில் கோயில் கொண்டருளும் காந்திமதி அம்மையைப் பிள்ளைத் தமிழ் மாலை அணிந்து போற்றினார் அக்கவிஞர். அப் பிள்ளைத் தமிழில் கவிச் சுவையும், பக்திச் சுவையும் களிநடம் புரியக் காணலாம். பொதியமா மலையிலே பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த பசுந் தமிழ்ச் சொற்களைச் செவி குளிரக் கேட்டுக் காந்திமதியம்மை மனமகிழ்கின்றாள் என்று பாடுகின்றார் கவிஞர்.

"மலையத் தமிழ்கேட்டு உளமகிழும்
வாழ்வே! வருக! வருகவே!
வரைமால் வளத்துத் திருநெல்லை
வடிவே! வருக! வருகவே!"

என்று ஆர்வமுறப் பாடிய கவிஞர் தாய்மை உள்ளத்தோடு மேலும் கூறுகின்றார். 'குழந்தாய்! நீ வாராது இருந்தால் உன் கண்ணுக்கு மையெழுதேன்; நெற்றிக்குத் திலகமிடேன்; அழகான நகை அணியேன்; அடுத்தடுத்துக் கதை சொல்லேன்; இனிப்பான பாலூட்டேன்; ஒக்கலையில் வைத்துத் தேரோடும் வீதியைக் காட்டேன்; தொட்டிலில் வைத்துத் தாலாட்டேன். ஆதலால் தவழும் குழந்தாய்! காந்திமதித் தாயே! வருக! வருக!' என்று அழைக்கும் முறை சால அழகியதாகும்.

"வாரா திருந்தால் இனிநானுன்
வடிவேல் விழிக்கு மையெழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகமிடேன்
மணியால் இழைத்த பணிபுனையேன்
பேரா தரத்தி னெடுபழக்கம் பேசேன்
சிற்றும் முகம் பாரேன்
பிறங்கு சுவைப்பால் இனிதூட்டேன்
பிரிய முடனொக் கலையில் வைத்துத்
தேரார் வீதி வலங்காட்டேன்; செய்ய
கனிவாய் முத்தமிடேன்
திகழுமணித் தொட்டிலில் ஏற்றித்
திருக்கண் வளரச் சீராட்டேன்
தாரார் இமவான் தடமார்பிற் றவழுங்
குழந்தாய் வருகவே!
சாலிப் பதிவாழ் காந்திமதித் தாயே
வருக! வருகவே!"

என்று ஆதரித்து அழைக்கின்றார். இப் பிள்ளைத் தமிழ் திருநெல்வேலிக் கோயிலில் அரங்கேற்றப் பெற்றது. அக்காலத்தில் இருந்த முருகதாசர் முதலிய அருளுடைக் கவிஞர்கள் பிள்ளைத் தமிழின் அழகினைப் பாராட்டினார்கள். காந்திமதியின் கருணையால் சிறந்தோங்கி வளரும் நெல்லை மாநகரம் "இக்கெல்லாம் புகழுறும் திருநெல்வேலி" யென்று திருஞானசம்பந்தர் வழங்கிய வாய்மொழியை மெய்ப்பித்துப் பல்லாற்றானும் சிறந்து ஓங்கி விளங்குகின்றது.

# இந்த அழகான, நால்வர் செல்லும் வண்டியில்
# மேலும் ஒருவருக்கு
# இடமிருக்கிறது



புதிய பியட் "1100" மோட்டார் அமைப்பிலும் உருப்பிலும் மட்டுமல்ல, வசதியிலும் புதியது. விசாலமான சௌகரியங்களுடன், உள்ளே நிறைய இடமிருக்கிறது - ஐவர் சௌகரியமாகப் பிரயாணம் செய்யலாம். வேறு பல சிறப்புக்களுடன், ஸ்டியரிங் வீல் அமைப்பு; உல்லாசமான குஷன் யாத்திரைக்கான விசேஷ, அதிர்ச்சியைத் தவிர்க்கும், ஸ்பிரிங்குகள்; பாதையில் நேர்த்தியாக ஓடுவதற்கான பிரத்யேக அமைப்பு; பொங்கிவரும் வேக சக்தி; காலனுக்கு அதிகப்படியான மைல் தூரம். புதிய பியட் "1100" மோட்டார் உங்களுக்குப் பெருமிதம், திருப்தி, வசதி, இன்பம் அளிக்கிறது.

முன்னேற்றத்தோடு தயாரிப்பவர்கள்

**தி பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிட்.**



## பியட் புதிய 1100

விலை : ரூ. 9730/- (எக்ஸ் - பாக்டரி, வரிகள் வேறு)

விற்பனையாளர்:—

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிட்.
"டி. வி. எஸ். பில்டிங்", மேற்கு வெளி தெரு, மதுரை
சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மவுண்ட் ரோட், மதராஸ்




திருக்குற்றாலம்
2—9—44

நமஸ்காரம்.

உலகம் எங்குமே சங்கீதம் இருக்கிறது. அது மாத்திரம் அல்ல. அந்த சங்கீதத்தில் **பாவமுள்ள சங்கீதம்** என்றும், **பாவமற்ற சங்கீதம்** என்றும் இருக்கின்றன.

மேல் நாட்டில் நடைபெறுகிற சங்கீதம் எல்லாம் அநேகமாய் ஜெர்மன் சங்கீதத்தைத் தழுவியதுதான். மேலான ஜெர்மன் சங்கீதகர்த்தாக்கள் சங்கீதத்தை ஜெர்மன் சாகித்தியத்தோடு சேர்த்து மிக்க உணர்ச்சி பாவம் விளையும்படி செய்தார்கள். அந்த சாகித்தியங்களுக்கு மேல் நாட்டு முறைப்படி சுரம் அமைத்து வைத்தார்கள். பியானோவில் அந்த சுரத்தை அழுத்தி ஏதோ பாடியும் விட்டார்கள். ஜெர்மன் பிராந்தியத்தையும் இங்கிலீஷ் 'சானலை'யும் கடந்து போனபோது சுரமும் பியானோவும்தான் மிஞ்சின. ஜெர்மன் பாஷையின் உணர்ச்சி, ஊக்கம், பக்தி முதலிய உயிரான அம்சங்கள் எல்லாம் ஜெர்மன் பூமியிலேயே தங்கி விட்டன.

ஆங்கில நாட்டின் சங்கீதம் அது காரணமாக உணர்ச்சி யற்றுப் போய் விட்டது. கேலிக் கூத்தாகவே போய் விட்டது. **கார்லைல்** ஆசிரியருக்கு வெகு கோபம் வந்து விட்டது.

பல்லைக் கடித்தார் — தலை ரோமத்தைப் பிய்த்தார்.

Music has, for a long time past, been avowedly mad, divorced from sense and reality of things.

(இதய ஒலி - பக்கம் 171)

—இப்படியெல்லாம் கதறுகிறார் - ஆங்கிலேயரது சங்கீதத்தைப் பற்றியும் சங்கீதக் கொள்கையைப் பற்றியும்.

தமிழ் நாட்டுக்கு வருவோமானால் இங்கேயும் சங்கீதத்தை இரண்டு விதமாகப் பிரிக்க வேண்டும். பாவமான சங்கீதம், பாவமற்ற சங்கீதம் என்பதாக. தெலுங்கு சங்கீதத்திலும் அப்படியேதான். தெலுங்கு சாகித்தியத்தை உணர்ச்சியோடும், பக்தியோடும் பாடும்போது அது பாவசங்கீதம். வெறும் விளையாட்டாக, உணர்ச்சியில்லாமல் பாடும் போது சாமான்யம் என்று சொல்லி விட வேண்டியது தான். ஏதோ காதின் சவ்வுக்கு சுகமாயிருக்கலாம்; அவ்வளவுதான். Tympanic என்று பெயர் இட்டழைக்கலாம்.

தெலுங்குக்குச் சொன்னது தமிழுக்கும் அப்படியே பொருந்தும்.

ராகம் பாடும் போது தமிழருக்கும், தெலுங்கருக்கும் பொதுத்தான். இருவரும் அனுபவிக்கலாம். அதில் பாஷை கலப்பில்லாததால் இருவருக்கும் பொது என்கிறோம். தெலுங்கர்களும் — சில பேராவது கேட்டு வந்திருக்கிற காரணத்தால்—அவர்கள் ராகங்களை அனுபவிக்கிறார்கள்.

ஆனால் ஆங்கிலேயர் அனுபவிக்க மாட்டார்கள். ஏதோ சுரங்கள் அப்படி ஏறுகின்றன, இப்படி ஏறுகின்றன என்று அறியலாம். ஆனால் அனுபவிக்க முடியாது. அனுபவிக்கிறோம் என்று அவர்கள் சொல்லும்போது ஏதோ முதுகைத் தட்டிக் கொடுக்கிற காரியந்தான் என்று நம் மனசில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ராகம் பாடுவது என்பது கெண்டியை வைத்துக் கொண்டு சுண்ணாம்புக் கோலம் போடுவது போன்றது. கை லாகவத்தைக் கண்டு அனுபவிக்கிறோம். வளைவும், நெளிவும் அந்த லாகவத்தைக் காட்டுகின்றன. அதுபோல சாரீரத்தின் லாகவத்தைக் கண்டு ராகத்தின் நயத்தை அனுபவிக்கிறோம்.

ஆனால் சாகித்தியத்துக்கு வரும் போது பாவத்தை எதிர்பார்க்கிறோம். உள்ளிருக்கும் உணர்ச்சி வேகம் சங்கீதத்துக்கு ரூபம் கொடுக்கிறது.

கவியைப் பற்றி

metre forging argument

[argument - emotional reality]

என்று **மில்டன்** சொன்னதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் சங்கீதத்தில் பாவரூபம் என்று ஒன்று இருக்கிறதென்றும், அதுவே சங்கீதத்துக்கு லக்ஷியம் என்றும் தெரிய வரும்.

நான் சொல்லுவதெல்லாம்: சங்கீதம் பாவ சங்கீதமாகவே இருக்க வேண்டும். தெலுங்கர்கள் பாவத்தை உணர வேண்டும் என்றால் தெலுங்கு பாஷையில்தான் சாகித்தியமும்

> 1938-39ல் 192 கோடி கெஜம் கைத்தறித் துணி உற்பத்தியாகியது. 1949-50-ல் மேற்படி உற்பத்தி 75 கோடியாகக் குறைந்து விட்டது. அந்தத் துணியும் மில்களின் போட்டி காரணமாக விற்பனையாகாமல் தேங்கும் நிலைமை ஏற்பட்டு விட்டது. அதன் விளைவாகவே கைத்தறி நெசவாளர்கள் பஞ்சத்துக்கும் பட்டினிக்கும் இலக்காகி அலைந்து திரியும்படி நேர்ந்தது. எனவே, இந்தியா முழுவதும் உள்ள பல லட்சம் கைத்தறி நெசவாளர்களின் ஜீவனத்துக்கு ஆபத்து ஏற்படாமல் இருக்க வேண்டுமாயின், மில் துணி உற்பத்தியைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம்.
>
> —கனுங்கா கமிட்டி அறிக்கை.

இருக்க வேண்டும்; தமிழில் இருந்தால் விஷயம் புரியாது. உணர்ச்சியை உணர முடியாது. பாவத்தைக் காண முடியாது.

மேற்படி மேற்படிதான் காமட்சகட்காவில் உள்ளவர்களுக்கும், தமிழ் நாட்டில் உள்ளவர்களுக்கும்.

ஆனால் என்னவெல்லாமோ என்னைப் பற்றி எழுதப்படுகின்றன. டி. கே. சி. கவியும், சங்கீதமும் ஒன்றென்று எண்ணிக் கொண்டிருக்கிறார் – என்று எழுதுவார்கள். உடனே கவிக்கும் சங்கீதத்துக்கும் சம்பந்தமே கூடாது என்று கூசாமல் எழுதுவார்கள். எனக்கோ, சர்க்கரைக்கும், கடலை மாவுக்கும் வித்தியாசம் தெரியும். கடலை மாவை மாத்திரம் சாப்பிட்டுக் கொண்டிருக்க முடியாது. சர்க்கரையைத் தனியாய்ச் சாப்பிடவும் முடியாது. ஆனால் லட்டு செய்து கொடுத்தால்ச் சாப்பிட முடியும்.

பதங்களை உயர்ந்த பாவ உருவத்துக்காக–தெய்வத் தன்மை வாய்ந்தது என்று அனுபவிக்கிறேன். பக்தி உணர்ச்சியோடு, ஒளிக் கண்ணி, சித்தர் பாடல், காவடிச் சிந்து முதலியவைகளைப் பாடினாலும் பரவசம் அடையத்தான் செய்கிறேன். ஆனால், சங்கதி சங்கதி என்று சுரங்களைக் கொண்டு கீச்சுக் கீச்சுத் தாம்பலம் விளையாடுகிறதை ரொம்ப அனுபவித்துவிட முடியாது. அதோடு அபசுரமும் சுருதி இன்மையும் சேர்ந்து விட்டால்க் கேட்கவா வேண்டும்? அமிர்தாஞ்சனத்துக்கு ஆர்டர் பண்ண வேண்டியதுதான்!

கல்வி, கலை விஷயங்களில் தாகூர் தெளிவான உண்மை ஒன்றை வெளியிட்டிருக்கிறார். அதாவது, பள்ளிக்கூடங்களிலும், யுனிவர்ஸிட்டிகளிலும் மூளையை வளர்க்கிற காரியமாகத்தான் இருக்கிறது. அதற்குப் பதிலாக இதயத்தை வளர்த்தால் அளவில்லாதபடி கல்வி கலை எல்லாம் வளரும் என்பதாக. இதில் சந்தேகமே இல்லை. ஆனால் நம்முடைய கல்வி இலாகாவுக்கு அதில் நம்பிக்கையே இல்லை. நாம் என்ன செய்ய?

அன்புள்ள

டி. கே. சிதம்பரநாதன்

# சிறுவர்கள் சித்திரப் போட்டி

## பரிசு ரூபாய் 20

- சிறுவர்களுக்கு இயற்கையிலேயே சித்திரங்கள் வரைவதற்கு ஆவல் இருப்பது இயல்பல்லவா? அந்த ஆவலைத் தூண்டி அவர்களை ஊக்குவிப்பதற்காகவே இந்தச் "சிறுவர்கள் சித்திரப் போட்டி"யை ஆரம்பித்திருக்கிறோம்.
- இந்தப் போட்டியில் பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட எல்லாச் சிறுவர்களும் சிறுமிகளும் கலந்து கொள்ளலாம்.
- தங்களுக்குத் தோன்றிய எந்த உருவத்தையும், எறும்பில் இருந்து ஏரோப்ளேன் வரை, குருவியில் இருந்து கோபுரம் வரை, எதை வேண்டுமானாலும் வரைந்து அனுப்பலாம். வரையும் படங்களுக்கு அடியில் தங்கள் பெயரையும் வயதையும் மறந்து விடாமல் குறிப்பிட வேண்டும். படங்களைக் கறுப்பு மையில் வரைந்து அனுப்ப வேண்டும்.
- பிரசுரத்துக்கு உரிய படங்கள் ஏப்ரல் 17௳ கல்கி இதழில் இருந்து ஒவ்வொரு இதழிலும் தொடர்ச்சியாகப் பிரசுரிக்கப்படும்.
- ஒவ்வொரு மாதம் முடிவிலும் அந்த மாதத்தில் வெளியான மூன்று சிறந்த படங்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும். முதற் பரிசு பத்து ரூபாய். அடுத்த இரண்டு பரிசுகள் ஒவ்வொன்றும் ஐந்து ரூபாய்.
- படங்கள் அனுப்பும் உறையின்மீது "சிறுவர் சித்திரப் போட்டி" என்று குறிப்பிட்டு, "ஆசிரியர், கல்கி, சென்னை — 10" என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும்.




# கைத்தறி துணிகளை

## வாங்குங்கள்

"......கைத்தறி தொழிலின் தயாரிப்புகளையே வாங்கும்படி இந்திய மக்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் அவர்களுடைய பூரண ஒத்துழைப்பும், ஆதரவும் இல்லாவிட்டால் கைத்தறி தொழிலின் பிரயாசையும் அரசாங்கத்தாரின் நல்லெண்ணமும் எதிர்பார்த்த பயனை அளிக்காமற் போய்விடும்."

—ராஜேந்திர பிரஸாத்.

அகில இந்திய கைத்தறி வாரக் கொண்டாட்டங்கள், லக்ஷக்கணக்கான மக்களுக்கு வேலைதரும் இந்த முக்கியமான தொழில் விஷயத்தில் நாட்டு மக்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளன.

இந்தியாவின் கைத்தறி நெசவாளர்கள் கலைச் சிறப்புடன் நெசவு செய்வதிலும், விதவிதமான புதிய மோஸ்தர்களை சிருஷ்டிப்பதிலும் அவர்களது பரம்பரைத் திறமைக்கு புகழ்பெற்றவர்கள். நெசவு நேர்த்தி, பூர்த்தியழகு, மோஸ்தர் மற்றும் நீடித்த உழைப்பிற்கு இந்தியக் கைத்தறி ஜவுளிகள் எப்பொழுதுமே தனிச் சிறப்புவாய்ந்தவை.

சமுதாயத்தின் ஒத்துழைப்பு நிச்சயமாகக் கிடைக்கிறதென்ற உற்சாகத்துடன் கைத்தறி நெசவாளர்கள் வருங்காலத்தில் அதிக சிறப்புடன் சேவை புரிவதில் முன்னேறி வருகின்றனர்.

**ஒவ்வொரு உபயோகத்திற்கும் ஏற்ற**
**கைத்தறி ஜவுளி தினுசுகள்**

**நீடித்துழைப்பவை ● அலங்காரமானவை ● தனிச்சிறப்புடையவை**

வெளியிட்டவர்கள்

அகில இந்திய கைத்தறி போர்டு, மத்திய விற்பனை ஸ்தாபனம், 1/155, மவுண்டு ரோடு, சென்னை - 2.

AC-683.




அத்தியாயம் 50

## துன்பம் தொடர்ந்தது

உலகத்தில் துன்பம் வரும் போது ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அதிலிருந்துதான் 'பட்ட காலிலேயேபடும்.கெட்ட குடியே கெடும்' என்ற பழமொழியின் உண்மையைத் தெரிந்து கொள்கிறோம். காலில் ஒரு காயம் பட்டதென்றால், அதில் மறுபடியும் இலேசாகப் பட்டால் கூடத் தாங்க முடியாமல் வலிப்பது போல் தோன்றுகிறது. ஆனால் அதைத்தாங்கிக் கொள்ளாமலா இருக்கிறோம்? எந்தக்காரியம் நிகழ்ந்து விட்டால் உயிர் வாழ்வதே அசாத்தியம் என்று கருதுகிறோமோ அதே காரியம் நடந்து விட்டால் அதையும் தாங்கிக் கொள்ளத்தான் செய்கிறோம். இறைவன் எப்படியோ அந்தச் சக்தியை மனிதனுக்குக் கொடுத்திருக்கிறார். அது அவருடைய சிருஷ்டியின் ரகசியம் போல் இருக்கிறது.

ஒருவருடைய வாழ்க்கையில் அப்படி ஒன்றன்மீது ஒன்றாகத் துன்பம் இடி விழுவது போல் விழுவதைப் பார்க்கும்போது, இரக்கப்படுகிறோம். அதையே எங்கேனும் கதையாக எழுதிப் படித்தால் 'இப்படிக் கூட நடக்குமா?' என்று அவநம்பிக்கைப் படுகிறோம். என் வாழ்க்கையைப் பற்றிக் கூடச் சிலருக்கு அவநம்பிக்கை ஏற்பட்டால் அதிசயப்படுவதற்கில்லை. துன்பம் என்னை விடாமல் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. இது நான் பிறந்த வேளையின் குற்றமோ? அல்லது விதியின் குற்றமோ? அல்லது நான் பூர்வ ஜன்மத்தில் செய்த பாபத்தின் விளைவோ, வேறு என்ன காரணமோ அதைப்பற்றி நான் ஒன்றும் அறியேன்.

என் தந்தை, என் மேல் அன்பைச் சொரிந்திருந்த புண்ணியமூர்த்தி, எனக்காகவே உயிர் வாழ்ந்த அந்த உத்தமர் இறந்து போனதைப் பற்றி நான் இப்படித் தான் எழுத வேண்டியிருக்கிறது. அவர் மாத்திரம் இருந்திருந்தால், என் வாழ்க்கையில் ஏற்பட்ட விநோதமான விபரீதமான அனுபவங்களுக்கு இடமே இல்லாமல் போயிருந்திருக்கும். ரங்கதுரையை மணந்து கொண்டு ஆனந்தமயமான வாழ்க்கை நடத்தியிருப்பேன். ஆனால் என் வாழ்க்கைப் பாதையில் யமன் பல தடவைகள் குறுக்கிட்டு அதன் போக்கை அடியோடு மாற்றி அமைத்திருக்கிறான். அதை நினைத்தால் எனக்கு நிஜம் என்றே தோன்றவில்லை. ஏதோ கனவு மாதிரிதான் தோன்றுகிறது. ஆம்! வாழ்க்கை என்பதே ஒரு நீண்ட கனவுதானே?

தந்தி வந்த அன்று என்னை யாராலும் சமாதானம் செய்யவே முடியவில்லை. ரொம்ப நேரமாகி விட்டிருந்தபடியால், அன்றிரவு புறப்படவும் இயலவில்லை. காலையில்தான் புறப்பட்டோம். குங்குமத்துறைக்கு வந்து சேரும் வரையில் நான்என் வசத்தில் இல்லை. வழி முழுதும் கண்ணீர் பெருகிக் கொண்டே இருந்தது. என் அருமைத் தந்தையை விட்டு விட்டு வந்ததற்காக என் முட்டாள்தனத்தை எவ்வளவோ சபித்துக் கொண்டேன். என்னையே என்னால் மன்னித்துக் கொள்ள முடியவில்லை.

அப்பாவைப் பார்த்ததும் என்னால் பேசவே முடியவில்லை. விம்மிக்கொண்டே அருகில் நின்றேன். "அவர் என் கையைத் தம் கையால் பிடித்துக் கொண்டு,

"இந்து! ஏனம்மா இப்படி அழுகிருய்? தைரியமாக இரு. இன்றுஎனக்கு உடம்பு நன்ருகத் தேவலே" என்று சொன்னர்.

அய்யாக் குட்டியைப் பார்த்த போது, எனக்கு ஆத்திரம் வந்தது. "இவ்வளவு மோசமான பிறகு தான் தெரிவிப்பார்களா? உடம்புக்கு வந்த உடனேயே எனக்கு எழுதுவதற்கென்ன?" என்று அவரிடம் கோபமாக எரிந்து விழுந்தேன்.

அவர் சாந்தமாகப் பதில் சொன்னர். "நான் செய்திருக்க வேண்டியதுதான்,



இந்து! ஆனல் தோன்றவில்லே. இப்போது கூட அப்பா உனக்குத் தெரிவிக்க வேண்டாமென்று தான் சொன்னர். ஆனல் நான் தந்தி யடித்து விட்டுப் பிறகுதான் அவரிடம் சொன்னேன். அப்படி ஒன்றும் பிரமாதமாக முதலில் தெரியவில்லே, இந்து."

"கொஞ்சம் தயவு செய்து விவரமாக என்ன ஆயிற்று என்று சொல்லுங்கள்!"

"இன்று சனிக்கிழமை அல்லவா? சென்ற வெள்ளிக் கிழமை யன்று அவர் எப்போதும்போல் வயலுக்குப் போய் விட்டு வந்தார். வந்த போது காலில் துணியால் கட்டிக் கொண்டிருந்தார். நான் என்ன வென்று கேட்டேன். 'ஒன்றுமில்லே. வரப்பு மேல் நடந்து கொண்டிருந்த போது கால் சறுக்கி மடையில் இறங்கிற்று. அங்கே ஒரு லாட ஆணி நன்ருகக் காலில் ஏறி




விட்டது. ஆணியை உடனே கண்ணுசாமி எடுத்து விட்டான்' என்றார். நானும் காலைப் பார்த்தேன். ஒரு சிறிய காயம்தான் இருந்தது. ரத்தம் கூட வரவில்லை. அதனால் 'டிஞ்சர்' போட்டு விட்டுக் கட்டிவிட்டேன். ஆனால் இரண்டு நாட்கள் கழித்துக் காலில் வீக்கமும், இலேசாக ஜுரமும் வந்தது. உடனே நம்முடைய டாக்டரை அழைத்து வந்தேன்!"

"டாக்டர் என்ன செய்தார்?"

"அவர் முதலில் அதிகமாக ஒன்றும் இல்லை என்று கூறி மருந்து போட்டார். ஆனால் மறு நாள் ஜுரமும் அதிகமாகி விட்டது. வலியும் வீக்கமும் அதிகமாகி விட்டன. பிறகு டாக்டர் ஊசி போட்டார். அன்றும் ஜுரம் குறைய வில்லை.

பிறகு ரண சிகிச்சைதான் செய்ய வேண்டும் என்று கூறி விட்டார். பிறகுதான் நான் உனக்குத் தந்தி அடித்தேன். ஆனால் நீ நேற்று இங்கு இல்லாததே நல்லதாய்ப் போயிற்று. இருந்திருந்தால் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிருப்பாய். ரண சிகிச்சை செய்த போது அவர் என்ன பொறுமையாய் இருந்தார் தெரியுமா? துளி அலுத்துக் கொள்ள வில்லை. முனகக் கூட இல்லை. 'ஆபரேஷன்' முடிந்ததும் டாக்டரிடம், 'டாக்டர் அபாய மொன்றும் இல்லையே?' என்று மாத்திரம் கேட்டார். என்ன பொறுமை? இந்த மாதிரி உலகத்தில் யாரையுமே பார்க்க முடியாது!" என்றார்.

எனக்கு நெஞ்சை அடைத்தது. அம்மா இருந்திருந்தால் எப்படி அவரைக் கவனித்துக் கொண்டிருந்திருப்பாள்? 'நான் மகா பாவி. இப்படி அவர் கஷ்டப்படும் சமயத்தில் அருகில் இல்லாமல் போனேனே. என்ன அசட்டுத்தனம்?' என்று என்னையே நொந்து கொண்டேன்.



நான் வீட்டுக் காரியங்களைக் கவனிக்க ஆரம்பித்தேன். அய்யாக் குட்டி ரொம்ப கெட்டிக்காரர் என்றுதான் சொல்ல வேண்டும். சமையல் கூட நன்றாகச் செய்திருந்தார். அறையும் சுத்தமாகவே இருந்தது. பத்மநாபன் அப்பாவுடன் பேசிக் கொண்டிருந்தார். டாக்டர் ராவ் வந்து பார்த்து விட்டு, "கவலைக்கு இடமில்லை. சரியாகி விட்டது. ஆனால் இன்னும் குறைந்தது மூன்று மாதம் நடமாடக் கூடாது. பூரணமாக ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறி விட்டுச் சென்றார். போகும் போது பத்மநாபனிடம் டாக்டர் ராவ் ஏதோ கூறியதைக் கவனித்தேன். அவரிடம் டாக்டர் என்ன கூறினார் என்று நான் கேட்ட போது, "உடம்பு கொஞ்சம் சரியானதும் ஓய்வுக்குச் சென்னைக்கு அழைத்துப் போனால் நல்லது என்று சொன்னார்" என்றார்.

மூன்று நாட்கள் பத்மநாபன் எங்கள் வீட்டில் இருந்தார். அப்பாவும் அவரும் அடிக்கடி ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பத்மநாபன் கடைசியில் சென்னை சென்றார். போவதற்கு முன்பாக என்னிடம், "உனக்கு எந்த நிமிஷம் நான் வரவேண்டுமென்றாலும் ஒரு தந்தி அடித்தால் வந்து விடுகிறேன். தயங்கவே வேண்டாம். நீ என் குழந்தை மாதிரி. சுலோசனா வேறு, நீ வேறு என்று நான் நினைக்கவில்லை" என்று கூறிச் சென்றார். என் நெஞ்சம் நன்றியால் நிறைந்தது.

அதன் பிறகு ஒரு வாரம் அமைதியாகச் சென்றது. என் தந்தை கலகலப்பாகப் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தபடியால் அவருக்கு உடம்பு சரியாக இல்லை என்றே தோன்றாமல் இருந்தது. என்னிடம் எப்போதும் இருந்ததைவிட இன்னும் கனிவாகவும், அன்பாகவும் இருந்தார். அய்யாக் குட்டியிடமும் மிக அன்பாக இருந்தார்.

ஒரு வாரம் சென்ற பிறகு மறுபடியும் ஜுரம் வர ஆரம்பித்தது. இரண்டு நாளில் விஷம் போல் ஜுரம் ஏறியது. நான் உடனே அய்யாக் குட்டியிடம் சொல்லிப் பத்மநாபனுக்குத் தந்தி யடிக்கச் செய்தேன். அவரும் சொன்னபடியே வந்து விட்டார். அவரும் டாக்டரும் கவலையோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

அன்று அய்யாக்குட்டி மருந்து வாங்கி வரத் திருநந்திபுரம் போயிருந்த போது அப்பாவும், பத்மநாபனும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் அந்தப் பக்கம் சென்ற போதெல்லாம் அப்பா பேச்சை நிறுத்தினார். வக்கீலும் ஏதேனும் காரியங்கள் சொல்லிக் கொண்டே இருந்தார். எனக்கு என்னவென்று தெரியாத ஒரு பயம் உள்ளத்தை அரித்தது. அப்பாவுக்கு மருந்து கொடுப்பதற்காக நான் அந்த அறைக்குச் சென்றபோது, அப்பா ஏதோ ஒரு காகிதத்தில் கையெழுத்துப் போட்டு அதைப் பத்மநாபனிடம் கொடுத்ததைப் பார்த்தேன். மறுநாள் யாரோ இரண்டு மூன்று பேர் வந்து அப்பாவுடனும், பத்மநாபனுடனும் பேசி விட்டுப் போனார்கள். பத்மநாபன் மறுபடியும் சென்னைக்குப் போய் விட்டார்.

இந்த அமர்க்களமெல்லாம் ஒருவாறு ஆனபிறகு அப்பாவிடம் நான் தனியாக உட்கார்ந்திருந்தபோது, "அப்பா! பத்ம

நாபனிடம் ஏதோ எழுதிக் கொடுத்திர்களே! என்ன எழுதிக் கொடுத்திர்கள்?" என்று கேட்டேன்.

அவர் சற்று நேரம் பேசாமல் இருந்தார். அவருடைய முகம் மிகவும் தெளிவாக இருந்தது. கண்கள் பிரகாசமாக இருந்தன. ஆனால் உடல் மிகவும் மெலிந்து போயிருந்தது. அன்புடன் என் கையைப் பிடித்துக் கொண்டே, "இந்துக் கண்ணு! உன்னிடம் சொல்ல வேண்டும் என்பதுதான் என் எண்ணம். ஆனால் எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. நீ சிறு குழந்தை. உனக்குக் கவலையாக இருந்தால் என்ன செய்வது என்றுதான் யோசிக்கிறேன்" என்றார்.

"நான் கவலைப் படவில்லை. சொல்லுங்கள், அப்பா."

"சொல்லுகிறேன், அம்மா. ஆனால் நீ தைரியமாகக் கேட்க வேண்டும். நான் இனிமேல் அதிக நாட்கள் இருக்க மாட்டேனென்று தோன்றுகிறது" என்று சொல்லிச் சற்று நிறுத்தினார்.

"அப்பா! அப்படிச் சொல்லாதீர்கள்" என்று கதற வேண்டுமென்று தோன்றியது. உதட்டைக் கடித்துக் கொண்டு பேசாமலிருந்தேன். என் தந்தை சற்றுப் பிரயாசையுடன் தொடர்ந்து கூறினார்.

"இந்துமதி! இதுவரையில் நீ குழந்தையாக இருந்து விட்டாய். இனிமேல் நீ உலகம் என்னவென்று தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் உன் கதி என்ன ஆகும் என்பதை எண்ணிப் பார்க்கும் போது எனக்கு ரொம்பக் கவலையாக இருக்கிறது. நீ ரொம்பப் பொறுமையாகவும், புத்திசாலித்தனத்தோடும் நடந்து கொள்ள வேண்டும், அம்மா. நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடப்பாயா?"

"கட்டாயம் கேட்பேன், அப்பா."

"வக்கீல் பத்மநாபன் தங்கமான மனிதரென்று எனக்குப் படுகிறது. அவரிடம் நான் பல விஷயங்களைப் பற்றிப் பேசினேன். சொக்கையா விஷயத்தையும், தந்தப் பிள்ளையார் விஷயத்தையும் பற்றிக்கூடச் சொல்லி, 'அதனால் ஏதேனும் கெடுதல் வருமா?' என்று கேட்டேன். அதைப் பற்றிக் கவலையே இல்லை என்று கூறினார். ஆகவே நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். என்னுடைய கடன் முதலியவற்றை யெல்லாம் தீர்த்து விட்டேன். ஒன்றும் பாக்கி இல்லை. ரொக்கமாக ஆறாயிரம் ரூபாய் உன் பேரில் எழுதி வைத்திருக்கிறேன். உன் தந்தை காசிலிங்கம் கொடுத்த மூவாயிரம் ரூபாயும், என்னுடைய மூவாயிரம் ரூபாயும் அதில் இருக்கிறது. அந்த உயிலும் பத்மநாபனிடம் தான் இருக்கிறது. நீ இன்னும் மேஜராகாத படியால் உனக்கு கார்டியனாகப் பத்மநாபனை நியமித் திருக்கிறேன். திடீரென்று எனக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால் உனக்கு வயது வரும் வரை உன்னை யாரேனும் பாதுகாக்க வேண்டுமல்லவா? ரங்கதுரையின் சமாசாரம் தான் தெரியவில்லை. அவர் மாத்திரம் இங்கு இருந்திருந்தால் நான் சிறிதும் கவலைப்படவே மாட்டேன். எல்லாம் இறைவனின் சோதனை" என்றார். அவருக்கு மூச்சு வாங்கிற்று.

அதுவரை பல்லைக் கடித்துக் கொண்டிருந்த எனக்கு அதற்குமேல் பொறுக்க முடியவில்லை. "உங்களை விட்டு எப்படி அப்பா இருப்பேன்?" என்று கதறி அழுது விட்டேன்.

"இந்துக் கண்ணு. இப்போது தானே தைரியமாக இருக்கிறேன் என்று நீ சொன்னாய். கொஞ்சம் கண்ணைத் துடைத்துக் கொண்டு என்னைப் பார்த்து முழுவதையும் கேட்டுக் கொள், அம்மா."

நான் கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தேன். அப்பா மெதுவாக எழுந்து உட்கார்ந்தார். என் தலையைத் தொட்டு ஆசிர்வதித்தார்.

"இந்துக் கண்ணு! நீ சகல சௌபாக்கியங்களுடன் வாழ வேண்டும் என்று இறைவனை எப்போதும் பிரார்த்தித்து வந்திருக்கிறேன். ஆனால் உலகில் நாம் பிரார்த்திப்பதெல்லாம் நடப்பதில்லை. ஏதோ ஒரு சக்தி நம்மை யெல்லாம் ஆட்டி வைக்கிறது. அதன்படி நாம் ஆடி வருகிறோம். இதை உணராமல் துன்பப் படுகிறோம். ஆனந்தப் படுகிறோம். ஆகவே எது வந்தாலும் நீ கலங்காத உள்ளத்துடன் தைரியமாக இருக்க வேண்டும். இருக்கிறாயா?" என்று கேட்டார் என் அருமைத் தந்தை.

"கட்டாயம் கலங்காமல் இருக்கிறேன், அப்பா!" என்றேன்.



ஆகா! அவருடைய அந்த மொழிகள் எனக்கு எத்தனை தடவை பாதுகாப்பாக இருந்திருக்கின்றன, தெரியுமா? சீதா தேவியைச் சுற்றி லக்ஷ்மணன் அம்பினால் கோடு போட்டு இதைத் தாண்டி வர வேண்டாம் என்று கேட்டுக் கொண்டா ராம். அதைப் போல் அவருடைய வார்த்தைகள் எனக்குப் பல தடவை பக்க பலமாக இருந்து வந்திருக்கின்றன. வாழ்வையும் தாழ்வையும் ஒன்றாக எண்ணும் மனோபாவத்தைத் தந்திருக்கின்றன. இருளடைந்த உள்ளத்தில் விளக்காகத் திகழ்ந்து வந்திருக்கின்றன.

"இன்னொன்று, இந்து. உன்னிடம் சொல்லவே தயக்கமாக இருக்கிறது. நான் சொல்வது நியாயமில்லை என்று தெரியும். இருந்தாலும் என் கடமையாக நினைத்துச் சொல்லி விடுகிறேன். பிறகு ஈசன் திருவுள்ளப்படி நடக்கட்டும்."

"சொல்லுங்கள், அப்பா!"

"உனக்கு இவ்வளவு சொன்னேனே தவிர, என் உள்ளத்தில் ஒரே ஒரு கவலை பாக்கியிருக்கிறது. உனக்குக் கல்யாணம் செய்து வைக்காமல் போகிறேனே, அது தான் வருத்தமாக இருக்கிறது. என்ன தான் பத்மநாபனை கார்டியனாக நியமித்த போதிலும், உன்னைக் கல்யாணம் செய்து புருஷனிடத்தில் ஒப்புவித்திருந்தால் மனம் நிறைந்து போயிருக்கும்" என்று சொல்லி நிறுத்தினார்.

"அவர் இங்கு இருக்கக் கூடாதா? அப்பாவின் குறை தீர்ந்து விடுமே" என்று ஏங்கியது என் நெஞ்சம்.

என் தந்தை தொடர்ந்து, "இந்துமதி! ரங்கதுரையைப் பற்றித் தகவலே இல்லை. என்ன ஆகுமோ? அவர் மனம் எப்படி மாறியிருக்கிறதோ, நமக்குத் தெரியாது. அவர் திரும்பக் குறைந்தது இன்னும் ஒரு வருஷம் ஆகும். அப்படி வந்தாலும் உன்னைத் தேடி மணந்து கொள்வார் என்பது என்ன நிச்சயம்? உனக்குச் சம்மதமானால் சொல்லு. அய்யாக்குட்டி என்னிடம் உன்னை மணந்து கொள்வதாகக் கூறுகிறான்" என்றார்.

நான் சடாரென்று எழுந்து நின்றேன். "அப்பா நீங்கள் கூடவா என்னைப் புரிந்து கொள்ளவில்லை? மணந்துகொண்டால் அவரைத்தான் மணந்து கொள்வேன்; இல்லாவிட்டால் என்ன வந்தாலும் நான் கன்னியாகவே காலங் கழித்து விடுவேன். அதைப் பற்றி நீங்கள் கவலைப் படாதீர்கள். ஒருநாளும் இன்னொருவரை என்னால் மணந்து கொள்ள முடியாது. இது நிச்சயம்" என்று மிகுந்த ஆவேசத்துடன் கூறினேன்.

என் அருமைத் தந்தை புன்னகையுடன், "இந்து! உன் தைரியத்தைக் கண்டு சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் இந்த உலகம் ரொம்பப் பொல்லாத உலகம். கிராதகர்கள் நிறைந்த உலகம். பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் வாழ்க்கை நடத்துவது முடியாத காரியம். உன் தைரியமும், கடவுள் அருளும் சேர்ந்து உன்னைக் காப்பாற்ற வேண்டும்" என்றார். உணர்ச்சி மிகுதியால் அவருக்குக் கண்ணீர் பெருகிற்று.

அதன் பிறகு என் தந்தை மூன்று நாட்கள் தான் இருந்தார். ஒரு அசாதாரணமான தைரியம் என்னை வந்து அடைந்தது. நான் சிறிது கூடக் கலங்கவில்லை, அழவும் இல்லை. கண்களில் கண்ணீரே வற்றிப் போயிற்று. நான்காம் நாள் காலை அவர் ஆவி பிரிந்தபோது யாரும் அருகில் இல்லை.

"இந்துக் கண்ணு! காப்பி கொஞ்சம் தருகிறாயா?" என்று விடியற் காலையில் கேட்டார். நான் உள்ளே சென்று காப்பி போட்டு எடுத்துக் கொண்டு வந்து, "அப்பா!" என்று கூப்பிட்டேன். கண்கள் மூடியிருந்தன. அருகில் வந்து தொட்டுப் பார்த்தேன். என்னமோ திக் கென்றது. அய்யாக்குட்டியைக் கூப்பிட்டேன். டாக்டர் வந்து ஆவி பிரிந்து விட்ட தென்று கூறினார். அய்யாக்குட்டி கதறி அழுதார். நான் அவரை அழ வேண்டாமென்று ஜாடை காட்டி விட்டு டாக்டரிடம், "வக்கீல் பத்மநாபனுக்குத் தந்தி கொடுத்து விடுங்கள்" என்று சொன்னேன். ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வரவில்லை. நெஞ்சு கல்லாகிவிட்டதுபோன்ற ஒரு உணர்ச்சிதான் ஏற்பட்டது.

## அத்தியாயம் 51

# வாழ்க்கையில் திருப்பம்

என் அருமைத் தந்தையைப் பிரிந்து என்னால் இருக்கவே முடியாது என்று நான் எண்ணியதுண்டு. 'அப்பாவுக்கு ஏதாவது நேர்ந்து விட்டால்?' என்று எண்ணினாலே எனக்குத் திகிலாக இருக்கும். ஆனால் அவர் உண்மையிலேயே இறந்த பிறகு நான் எப்படி இருந்தேன் என்பதை எண்ணிப் பார்த்தால் ஆச்சரிய

மாக இருக்கிறது. நான் சிறிதும் கலங்கவேயில்லை. அவருடைய தமக்கைமார்களும், மற்றும் சில உறவினர்களும் வந்து நான் ஒழுங்காக வைத்திருந்த வீட்டை நாசம் செய்தார்கள். எனக்கு யாருடனும் பேசவே பிடிக்கவில்லை. அவர்கள் எல்லாம் அழுவதைப் பார்த்த போது எனக்குச் சிரிப்பாக இருந்தது. ஒருவருக்கும் உண்மையான அன்பே இருந்ததாகத் தெரியவில்லை.

இரண்டாவது நாளே பெரிய தமக்கையார் அய்யாக்குட்டியிடம், "மந்திரமூர்த்தி என்ன ஏற்பாடு செய்து விட்டுப் போயிருக்கிறான்? ஏதாவது சரியாகச் செய்தானோ!" என்று கேட்டாராம். "உங்களுக்கு ஒன்றும் எழுதி வைத்திருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்றாராம் அய்யாக்குட்டி. இதை அவர் என்னிடம் கூறியபோது நான் வியப்படையவில்லை. அவர்களைப் பற்றி நான் முன்பே நன்றாக அறிந்து கொண்டிருந்தேன்.

சிறிய தமக்கையார், "முன்னாடியே உடம்பு சரியில்லை என்று தெரிவித்திருந்தால் நாங்கள் வந்து விடுவோமே. எங்களுக்கு ஏதாவது கொடுத்து விடப்போகிறாரே என்று பயந்து கொண்டு எழுதவில்லை போலிருக்கிறது. அவள் ரொம்பக் கெட்டிக்காரி. ஊர் பேர் தெரியாதவனுடைய பெண்ணுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பார்" என்று என்னைப் பற்றிக் கேவலமாகப் பேசினாராம். இதற்கும் நான் கவலைப்படவில்லை. அப்பா இருந்தபோது எப்படியெல்லாம் பரிவாகப் பேசினார்கள்? அவர் இல்லையென்றவுடன் என் பெற்றோரைப் பற்றிக் கேவலமாகப் பேசினார்கள். என் அன்னை சந்திரமணியைத் தூற்றினார்கள். "ஒரு சொட்டுக் கண்ணீர் விட்டாளா பாத்தியா? தனக்குப் பிறந்ததானால் இப்படி இருக்குமா?" என்று நான் என் தந்தையிடம் வைத்திருந்த அன்பை என் கண்ணீரால் மதிப்பிட்டார்கள். ஆனால் நான் எதையும் லட்சியம் செய்யவேயில்லை. "என்ன செய்வது? எங்கே போவது?" என்று யோசித்து யோசித்து மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தேன்.

நல்ல வேளையாக ஒரு வாரம் ஆனதும் சுலோசனா வந்து என்னை இந்தத் தொல்லைகளிலிருந்து காப்பாற்றினாள். யாருக்கும் அவளைப் பிடிக்கவில்லை. ஆனால் அவளிடம் ரொம்ப மரியாதையாக நடந்து கொண்டார்கள்.

யோக்கியப் பொறுப்பும் உழைப்பும் சுறுசுறுப்பும் படைத்தவர்கள் கைத்தறி நெசவாளர்கள். தேசம் அடைந்த சுதந்திரத்தை அவர்கள் நன்கு அனுபவிக்கும்படி செய்ய வேண்டியது நமது கடமையாகும். ஆகையால், மில் வேஷ்டிகளையோ அல்லது மில் புடவைகளையோ வாங்காதீர்கள். இதுவரை வாங்கியிருப்பவைகளையும் அப்பால் வைத்து விடுங்கள். லட்சக் கணக்கான கைத்தறி நெசவாளர்கள் பெரும் கஷ்டத்துக்கு ஆளாகியிருக்கும்போது. மில் வேஷ்டிகளையோ. மில் சேலைகளையோ உடுத்துவது வெட்கக் கேடான காரியம். அந்தக் காரியத்தை நீங்கள் செய்ய வேண்டாம். — ராஜாஜி

சுலோசனாவிடம், "நான் இனிமேல் என்ன செய்வது, சுலோ? அதுதான் புரிய மாட்டேனென்கிறது" என்றேன்.

"இதில் புரிவதற்கு என்ன இருக்கிறது, இந்து? பேசாமல் என்னோடு வந்து விடு. நீ என்னுடைய சொந்தத் தங்கை என்றுதான் இப்போது நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்."

"இப்போது என்று சொல்கிறாயே. அப்படியானால் பின்னால் மாறி விடுவாயாக்கும்!" என்றேன்.

"சே! அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. நமது உறவு முறை மாறலாம் என்று நினைத்துக் கொண்டு சொன்னேன்" என்றாள் சுலோசனா.

"இதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. இந்தமாதிரி நீயே பேசலாமா? நான் நிச்சயமாக உன்னோடு வரக் கூடாது என்று ஆகிறது."

"இனிமேல் சொல்லவில்லை. ரமேஷும் நானும் உனக்கு உடன்பிறந்தவர்கள் என்று நினைத்துக்கொள். இங்கே ஒருநாளும் நீ நிம்மதியாக இருக்க முடியாது."

"எதையும் யோசிக்காமல் செய்யக் கூடாது. கொஞ்சம் அவகாசம் கொடு. இரண்டு நாட்களில் சொல்லுகிறேன்."

"சரி நான் திருநந்தி புரத்துக்குப் போய் விட்டு நாளை வருகிறேன். இந்தக் கூட்டத்தில் என்னால் மூச்சே விட முடியவில்லை" என்றாள் சுலோசனா.

வக்கீல் பத்மநாபன் திருநந்திபுரத்தில் தங்கியிருந்தார். என்னை வந்து பார்த்துத் தைரியமாக இருக்கும்படியும், தான் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்வதாகவும் சொல்லிவிட்டுப்போனார். பிறகு ரகசியமாக, "அய்யாக்குட்டியிடம் கூட உனக்குத் தெரிந்த எந்த விஷயத்தைப் பற்றியும் பேச வேண்டாம்" என்று எச்சரித்து விட்டுச் சென்றார்.

அதன் பிறகுதான் அய்யாக்குட்டி என்னிடம், "அவர்கள் சொன்னார்கள், இவர்கள் சொன்னார்கள்" என்றெல்லாம் சொத்து விவகாரங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தது, எனக்கு ஏதேனும் தெரியுமா என்று பார்ப்பதற்காகத்தானே? என்று தோன்றிற்று. 'சே! என்ன உலகம். பொய்யும், வஞ்சனையும் நிறைந்த உலகம். அப்பா சொன்னது போல் கிராதகர்கள் நிறைந்த உலகம். இதில் எப்படி வாழ்வது?' என்று உலகத்தின் மேல் ஒரு வெறுப்பு ஏற்பட்டது.

'நீ இங்கே இருக்க முடியாது' என்று சுலோசனா கூறியது உண்மையாயிற்று. அன்று மாலை நான் கிணற்றடியில் நின்று கொண்டு ஏதோ யோசித்துக் கொண்டிருந்தேன். "யாரை என் உயிருக்கும் மேலாக நேசிக்கிறேனோ அவர் இந்த சமயத்தில் என் அருகில் இல்லையே? அம்மா இறந்து போன பொழுது எத்தனை விதமாக ஆறுதல் கூறினார். இப்போது இதைத் தெரிவிக்கக் கூட முடியவில்லையே. அவரிடமிருந்து ஒரு கடிதம் வருவதற்குக் கூட அல்லவா வழியில்லாமல் போய் விட்டது. என்ன ஆகியிருக்கும்? ஏன் அவர் எழுதவில்லை?" என்று ஏங்கிற்று என் நெஞ்சம். எனக்கென்னமோ அவர் மனம் மாறிப் போயிருக்கும், என்னை அலட்சியம் செய்யக்கூடும் என்றே தோன்றவில்லை. அவர் எழுதாததற்கு ஏதோ காரணம் இருக்கத்தான் வேண்டும். ஆனால் அது எனக்குப் புலப்படவில்லை.

"இந்து! இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்று அய்யாக்குட்டியின் குரல் கேட்டது.

"விசித்திரமான இந்த உலகத்தைப் பற்றி எண்ணி வியந்து கொண்டிருக்கிறேன். மனிதர்கள் ஆசைக்கு எப்படி அடிமையாக இருக்கிறார்கள் என்று தோன்றிற்று."

"அடேயப்பா! பெரிய தத்துவ ஞானி போல் பேசுகிறாயே? ஆசைக்கு அடிமைப் படாதவர் யார் இந்து? இப்படிச் சொல்கிறாயே. உனக்கு ஒன்றும் ஆசையே கிடையாதா?"

"நான் உங்களிடம் பெருமை யடித்துக் கொள்ள விரும்பவில்லை. நான்

ஆசைகளைத் துறந்த ஞானியாக ஆகாவிட்டாலும் கீழ்த்தரமான ஆசைகளுக்கு உள்ளத்தில் இடம் கொடுப்பதில்லை."

"ஆமாம்! இப்படித்தான் எல்லோரும் சொல்லிக் கொள்வார்கள். அது கிடக்கட்டும். உன்னைப் பற்றி எனக்குக் கவலையாக இருக்கிறது. நீ என்ன செய்யப் போவதாக உத்தேசம்?"

"உங்களைப் பற்றி நீங்கள் கவலைப் பட்டுக் கொண்டால் போதும். என்னைப் பற்றி நான் கவலைப்பட்டுக் கொள்கிறேன். எனக்கு யாருடைய உதவியும் வேண்டியதில்லை."

"இப்படி யெல்லாம் தூக்கி எறிந்து பேசாதே, இந்து!"

"உங்களைத் தூக்கி எறிய பெரிய மல்யுத்த வீரரால்கூட முடியாதே!"

"விளையாடாதே, இந்து. நான் உண்மையாகவே கேட்கிறேன். நீ என்ன செய்யப் போகிறாய்?"

"உண்மையாகவே சொல்கிறேன். எனக்கே தெரியவில்லை."

"உனக்காகத் தெரியாவிட்டால் யாரிடமாவது கேட்க வேண்டாமா? நான் சொல்வதைக் கேள். இப்போது உன்னிடம் அக்கறை உள்ளவர்கள் என்னைத் தவிர யாரும் கிடையாது."

"ஓ! அப்படியா? இத்தனை நாட்கள் தெரியவில்லை."

"இந்து! நான் நினைத்தால் உன்னைப் பெரிய சங்கடத்தில் மாட்டி வைக்க முடியும். நான் ஒன்றும் செய்யாமலிருப்பதே என்னுடைய அன்புக்கு அடையாளம் என்பதை நீ இன்னும் தெரிந்து கொள்ளாமலிருப்பது எனக்கு வியப்பாக இருக்கிறது."

"உங்கள் பேச்சைக் கேட்பது எனக்கு மிகவும் வெறுப்பாக இருக்கிறது. ஒரு அபலைப் பெண்ணை இவ்வாறு பயமுறுத்தப் பார்க்கிறீர்களே? உங்களுக்கு வெட்கமாக இல்லை?"

"இந்து! நீ என்னைப் புரிந்து கொள்ளவே மறுக்கிறாய். உன்னைப் பயமுறுத்தும் எண்ணமே எனக்குச் சிறிதும் இல்லை. நான் சொல்ல வந்ததை இன்னும் நீ கேட்கவில்லை."

"இன்னும் என்ன இருக்கிறது?"

"நீயோ இப்போது தனியாக இருக்கிறாய். உனக்காகக் கவலைப்பட யாரும் இல்லை. அப்பாவும் ஒன்றும் சொத்து வைத்துப் போகவில்லை என்பது எனக்குத் தெரியும். இந்த வீட்டை மாத்திரம் வைத்துக் கொண்டு நீ என்ன செய்ய முடியும்? சின்னக் கறுப்பன் செட்டி

யாருக்கு இன்னும் அப்பா தரவேண்டிய பணம் பாக்கி யிருக்கிறது. இந்த வீட்டை விற்கும்படி நேரிடலாம்."

"என்ன! என்ன?" எனக்கு ஒன்றுமே புரியவில்லே. அப்பா என்னிடம் கடனே இல்லே என்று சொன்னரே. ஓகோ! இப்படிப் பேசி என்னிடமிருந்து ஏதேனும் கிரகித்துக் கொள்ள நினைக்கிருர் போலிருக்கிறது. நான் ஒன்றும் அவ்வளவு முட்டாள் இல்லே.

"ஆமாம். இந்து! பிறகு நீ என்ன செய்வாய்? அதனுல்தான் நான் சொல்வதைக் கேள் என்று சொல்கிறேன். என்னைக் கல்யாணம் செய்து கொண்டு விடு. நீ சௌக்கியமாக இருக்கலாம்."

நான் என்ன சொல்வது? என்ன காரணத்தாலோ எனக்குச் சிரிப்பு வந்தது. நான் சிரிப்பதைக் கண்டதும் அய்யாக் குட்டிக்குச் சற்று உற்சாகம் ஏற்பட்டது.

"அப்பாவிடம் கூடச் சொல்லிச் சம்மதம் பெற்று விட்டேன், இந்து. அவர் மாத்திரம் இருந்து பார்க்க நாம் கொடுத்து வைக்க வில்லே" என்று கண்ணைத் துடைத்துக் கொண்டார்.

"கொஞ்சம் பொறுங்கள். நான் ஒன்றும் சொல்ல வில்லேயே? அதற்குள் அப்பா இல்லேயே என்று நீங்கள் வருத்தப்பட வேண்டாம்!"

"நீ வாயைத் திறந்து சொல்ல வேண்டுமா? எனக்குத் தெரியாதா? உனக்குத் தான் வேறே கதி என்ன இருக்கிறது?"

"சே! உம்மை நம்பித்தான் என்னை இறைவன் படைத்தாராக்கும், ஏன் இப்படிப் பிதற்றுகிறீர்கள்? மூளை கொதித்து விட்டதோ?" என்று கேட்டேன்.

"இந்து! என்னை நீ அளவுக்கு மீறிச் சோதிக்கிருய். போகட்டும். நான் சீக்கிரத்தில் பெரிய சினிமா டைரக்டராகி விடப் போகிறேன். உன்னை நடிக்கச் செய்து ஒரு சினிமா எடுக்கப் போகிறேன். அதற்கு நானே கதை எழுதப் போகிறேன். பார்த்துக் கொண்டே இரு. உன் மடியில் தங்கக் காசாகக் கொண்டு வந்து கொட்டப் போகிறேன். நீ மாத்திரம் சினிமாவில் நடித்தால் எப்படிப் பெயரெடுப்பாய், தெரியுமா?"

"ஐயோ! போறுமே! உம்மோடு நான் இத்தனை நேரம் பேசியதே தவறு. தயவு செய்து என்னைத் துன்புறுத்த வேண்டாம். ஒருகாலும் உமது எண்ணம் நிறைவேறப் போவதில்லே. வானமே பிளந்தாலும் இந்தக் காரியம் மாத்திரம் நடக்காது" என்று சொல்லி விட்டு உள்ளே ஓடி விட்டேன்.

சுலோசனவை மறுபடியும் பார்த்த போது இந்த விவரங்களைக் கூறினேன்.

"இந்து! நீ மெட்ராஸுக்கு வரவேண்டியது அவசியம். இப்போது என்னேடு புறப்பட்டு வந்து விடு. பின்னர் மற்ற விஷயங்கள் எல்லாவற்றையும் யோசித்துக் கொள்ளலாம். சமர்த்தோன்னே! நாளைக்கு நானும் அப்பாவும் புறப்படுகிருேம். உன் சாமான்கள் எல்லாவற்றையும் அதற்குள் எடுத்து வைத்துக் கொண்டு தயாராக இரு" என்ருள்.

"எனக்கு என்ன பிரமாத சாமான்கள் இருக்கிறது?"

"அப்படிச் சொல்லாதே, இந்து! உனக்கு என்று உள்ள சாமான்களை எடுத்து வைத்துக் கொள். நான் இருக்கும் போது நீ அப்படிச் சொல்லக் கூடாது. நாளைக்குத் தயாராக இருக்க வேண்டும்" என்று சுலோசன கூறி விட்டுச் சென்ருள்.

அய்யாக்குட்டிக்கு விஷயம் தெரிந்ததும் ஒரேயடியாக ஆத்திரப் பட்டார். என்னைப் போகவே கூடாது என்று சொன்னர். பத்மநாபனும், சுலோசனவும் என்னை அழைத்துச் சென்ருர்கள்.

என் வாழ்க்கையிலேயே அது ஒரு திருப்பமாக அமையப் போகிறது என்பதை நான் உணர்ந்திருக்க வில்லே. மிகவும் மனத் துணிவுடன் நான் வாழ்க்கைச் சமுத்திரத்தில் இறங்கினேன். அதில் எத்தனை சுருமீன்களுடனும், திமிங்கிலங்களுடனும் போராட வேண்டியிருக்கும் என்று நான் சரியாக உணர்ந்திருக்க வில்லே. ஆனல் அங்கங்கே சில ஒளி வீசும் முத்துக்களையும், ரத்தினங்களையும் கண்டிருக்கிறேன். என்ன இருந்தாலும் இப்படி ஒரு காலத்தில் ஒரு சிறையில் வந்து நான் என் கதையை எழுதுவேன் என்று சிறிதுகூட நினைக்க வில்லே என்பது நிச்சயம். அப்போது அளவிலாத தன்னம்பிக்கையுடனும், சோர்ந்த சமயத்தில் ரங்கதுரை கை கொடுப்பார் என்ற பூரண நம்பிக்கையுடனும் வாழ்க்கைக் கடலில் குதித்தேன்.

அமரதாரா முதல் பாகம் முடிவுற்றது. இரண்டாம் பாகம் அடுத்த இதழில் தொடரும்



லிவர் சரிவர வேலை செய்து வந்தால் நல்ல முக மலர்ச்சியான தோற்றத்துடன் விளங்குகிறீர்கள். லிவர் ஒழுங்காக வேலை செய்யாமலிருந்தால் அதற்கு அறிகுறிகள் கடுகடுப்பான முகத் தோற்றமும், மங்கிய கண் பார்வையும். அம்மாதிரி கோளாறுகளை நிவர்த்தி செய்து குணமளிக்க லிவர்ஜென் ஓர் சிறந்த நண்பன்.

அதைப்பற்றி உங்கள் டாக்டரை விசாரியுங்கள்

# லிவர்ஜென்

சகலவித லிவர் கோளாறுகளுக்கு



ஸ்டாண்டர்ட் பார்மஸூடிகல் ஒர்க்ஸ் லிமிடெட்
கல்கத்தா - 14

நாலு பையன்கள், நாலு பெண்கள்! சுந்தரராவ் வீட்டில் குழந்தைகளுக்குக் குறைவில்லை. மூத்த பெண் சுனந்தா பிறந்தகத்துக்கு வந்திருந்தாள். அவளுக்குப் பிரசவம் ஆக வேண்டும். அவளுடைய தாயார் மந்தாகினியும் பூரண கர்ப்பவதியாக இருந்தாள்.

வீட்டில் இந்த இரண்டு பிரசவங்களையும் சமாளிக்க வேண்டிய பொறுப்பு ஜானகியின்

# இயற்கையின் வஞ்சம்

## டி.பி.குல்கர்னி



தலையில் சுமந்தது. யார் முதலில் பிரசவிக்கப் போகிறாளோ! அக்காவா அல்லது அம்மாவா? ஜானகியின் மனம் குழம்பியது. அவள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு வாசிக்க வேண்டும். வீட்டு வேலைகளையும் கவனித்துக் கொள்ள வேண்டும். பாவம்! அவள் மனம் குழம்பாமல் என்ன செய்யும்?

ஜானகிக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. கல்யாணம் ஆகியிருந்தால் சகோதரிக்கும் தாயாருக்கும் போட்டியாக ஒருவேளை அவளும் பிரசவத்துக்கு வந்திருப்பாள்!

ஜானகியை மணம் செய்துகொள்ள எந்த இளைஞனும் முன்வரவில்லை. மூத்த பெண்ணுக்கு வரன் நிச்சயமானதும், ஜானகிக்கும் வரன் தேட அவளது தந்தை எங்கெல்லாமோ நடையாக நடந்தார். ஆனால், காக்கையைப் போல் கறுப்பு நிறமுள்ள ஜானகியைக் கல்யாணம் செய்துகொள்ள எந்த இளைஞனும் இஷ்டப் படவில்லை. இரண்டு பெண்க

✧ கன்னடக் கதை ✧ மொழிபெயர்ப்பு ✧ ஜெயமணி ✧

ளுடைய கல்யாணத்தையும் ஒரே செலவில் முடித்துவிட வேண்டுமென நினைத்த சுந்தரராவ் தம்பதிகள் ஏமாற்றம் அடைந்தனர்.

இந்த நிலைமையில் அவர்களுக்கு ஒன்பதாவது குழந்தையும், அதே சமயத்தில் பேரக் குழந்தையும் ஏக காலத்தில் பிறக்கப் போவதை நினைத்தபோது அவர்களுடைய மனம் கவலையில் ஆழ்ந்தது.

மந்தாகினிக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. மூத்த பெண்ணின் முதல் பிரசவத்துக்குத் தான் உதவி அளிக்க முடியாமல் போய் விட்டதே என்று வருந்தினுள். ஜானகிக்குக் கல்யாணம் ஆகாததுடன், அவள் தனக்கும் சுனந்தாவுக்கும் ஊழியம் செய்ய நேர்ந்திருக்கிறதே என்றுவேதனைப்பட்டாள்.

அதே சமயம் மந்தாகினிக்குப் பழைய ஞாபகம் வந்தது. அப்போது அவளுக்குப் பதினைந்து வயது இருக்கும். தன்னுடைய தாயாரின் ஆருவது பிரசவத்துக்காக மந்தாகினி தன் பள்ளிக்கூடப் படிப்புக்கே முற்றுப் புள்ளி வைக்க நேர்ந்தது! அவளைச் சேர்த்து அவளது பெற்றோருக்கு ஐந்து பெண்கள்.

அவளது வீட்டைக் குறிப்பிடும்போது ஊரார் சகலரும் "அது பெண்கள் ராஜ்யம்" என்று கேலி செய்தனர். ஏன், அவளது தந்தைகூட, "நம் வீட்டில் உள்ள ஐந்து கன்னிப் பெண்களும் தினந்தோறும் கடவுளைத் தோத்திரம் செய்தால், நாம் செய்த பாவங்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் தொலைந்து விடும்" என்று குத்தலாகக் கூறுவது உண்டு.

எனவே, அக் குடும்பத்தில் மூத்த பெண்ணுன மந்தாகினியே அவளது அன்னையின் ஆருவது பிரசவத்துக்கு உதவி செய்ய வேண்டியிருந்தது. அந் நிலைமையில், மந்தாகினியின் தாயாருக்கு இறைவன் அருளால் பிள்ளைக் குழந்தை பிறந்தது. அடாடா! அப்போது அக் குடும்பத்தினர் அடைந்த ஆனந்தத்துக்கும் குதூகலத்துக்கும் எல்லையே இல்லை. காணுது கண்ட புதையல் போல் எல்லோருக்கும் மகிழ்ச்சி பொங்கியது. தம்பி வசந்தன் பிறந்த சந்தோஷத்திலுல் மந்தாகினியும் தாய்க்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையும் வீட்டு வேலைகளையும் வெகு உற்சாகத்துடன் செய்தாள்.

வசந்தன் பிறந்த ஒரு வருஷத்துக்குப் பின் மந்தாகினிக்குக் கல்யாணம் ஆயிற்று. அவள் கணவன் வீட்டுக்குச் சென்றபோது, அவளால் அருமைத் தம்பியை விட்டுப் பிரிந்து செல்ல முடியவே இல்லை.

புக்ககத்துக்குச் சென்ற மந்தாகினி ஒரு வருஷத்துக்குள் பூரண கர்ப்பவதியாகப் பிறந்தகத்துக்குத் திரும்பி வந்தாள். அப்போது தான் மந்தாகினியின் தாயாருக்கு ஏழாவது குழந்தை பிறந்து மூன்று மாதங்கள் ஆகியிருந்தன. அதுவும் பிள்ளைக் குழந்தைதான். ஆனல், அது பிறகு தவறி விட்டது.

மந்தாகினிக்கு முதல் பெண் சுனந்தா பிறந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு, அவளது தாயார் கண்ணை மூடி விட்டாள். அவள் இறக்கும்போது வசந்தனை மந்தாகினியின் கையில் ஒப்புவித்து விட்டுச் சென்முள்.

வசந்தனும் சுனந்தாவும் சுந்தரராவ் வீட்டிலேயே வளர்ந்து வந்தனர். மந்தாகினி தன் இளைய சகோதரி குந்தாவைத் தன் கணவர் சுந்தரராவின் இளைய சகோதரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டாள். அதன் பலன் கைமேல் கிடைத்தது. மந்தாகினி பிரசவித்த போதெல்லாம் குந்தா தான் அவளுக்கு உதவியாக இருந்தாள்.

குந்தாவுக்குக் குழந்தைகள் இல்லை. அவளது கணவன் ஸ்ரீபதி அந்த ஊர் சர்க்கார் ஆஸ்பத்திரியில் கம்பவுண்டராக இருந்தார். சுந்தரராவுக்கு ஐந்தாவது குழந்தை பிறந்தபோது திடீரென்று ஸ்ரீபதியைப் புனுவுக்கு மாற்றி விட்டார்கள்.

* * *

சுனந்தாவை வசந்தனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்பது மந்தாகினியின் விருப்பம். அவள் தனது உத்தேசத்தை அவளது தந்தைக்கு அறிவித்தபோது அவர் சிரித்துக் கொண்டார். "ஏன், அம்மா! என்னை எதற்கா



க் கேட்க வேண்டும்? உன் இஷ்டத்துக்கு விரோதமாக நான் ஏதாவது சொல்லுவேனா?'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார். ஏனெனில், வசந்தனுக்காகவும் தனக்காகவும் அவள் எவ்வளவு பாடுபட்டிருக்கிறாள் என்பதை அவர் நன்கு அறிவார்.

ஆனால் மந்தாகினியின் கணவர் சுந்தரராவ் ஜானகியை வசந்தனுக்குக் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். அழகி சுனந்தாவை எந்த இளைஞனும் விவாகம் செய்து கொள்ள விரும்புவான். ஆனால், ஜானகியின் விஷயம் அப்படியல்ல. அவளுக்குக் கல்யாணம் ஆவதுதான் கஷ்டம். எனவே, அந்தப் பிரச்னையைக் கஷ்டமின்றித் தீர்க்க ஜானகியை வசந்தனுக்கு விவாகம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை.

எனினும், சுந்தரராவின் விருப்பத்துக்கு மந்தாகினி இணங்கவில்லை. ''சுனந்தாவையே வசந்தனுக்குக் கொடுக்க வேண்டும் என்று என் தாயார் சொல்லி விட்டுப் போனாள். இறக்கும்போது அவள் சொன்ன வார்த்தையை நான் நிறைவேற்றியே தீருவேன்'' என்று மந்தாகினி ஒரே போடாகப் போட்டு விட்டாள். இதற்குமேல் சுந்தரராவ் மறு பேச்சு என்ன பேச முடியும்?

ஜானகியைப் பெண் பார்க்கப் பல இளைஞர்கள் வந்தனர். ஆனால், ஜானகி வெளி வரவே மறுத்து விட்டாள். இவ்வளவு பிடிவாதக் குணம் உள்ள பெண்ணை மணந்து கொள்ள யார்தான் முன் வருவார்கள்?

ஒரு சமயம் பிடிவாத குணத்தில் ஜானகிக்குச் சளைக்காத ஓர் இளைஞன் உள்ளே வந்து அவளிடம் சில கேள்விகள் கேட்க விரும்பினான். முதல் கேள்விக்குமேல் அவனால் கேட்க முடியவில்லை. அவன் கேட்ட கேள்விக்கு அவள் பதிலளிக்காமல், ''கறுப்பு நிறம் உள்ள என் முகத்தைப் பார்க்க உங்களுக்கு இவ்வளவு ஆசையா?'' என்று மடக்கிக் கேட்டு விட்டாள். அவ்வளவுதான்! பையன் மறு வார்த்தை எதுவும் பேசாமல் ஊருக்குத் திரும்பிப் போய் விட்டான்.



கோழிக்கோடு கணபதி ஹைஸ்கூல் உபாத்தியாயர் ஸ்ரீ ஆர். விஸ்வநாதய்யர் அவர்களின் குமாரி ஸௌ. ஸீதாலக்ஷ்மிக்கும், பம்பாய் ஸ்ரீ என். என். சுப்ரமணியன் (alias) என். எஸ். ராஜுவுக்கும் சென்ற மாதம் கோழிக்கோட்டில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்தன்று ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமண்யம் அவர்களின் இன்னிசை நடைபெற்றது.—வாழ்க, மணமக்கள்!

இந்தக் காட்சியை நேரில் பார்த்த சுந்தரராவின் மனம் உடைந்தது.

* * *

ஒரு நாள் ஜானகியின் பள்ளித் தோழி சசி அவள் வீட்டுக்கு வந்தாள். அவள் ஜானகியுடனும் அவளுடைய தாயாருடனும் பேசிக் கொண்டிருந்த போது, தர்ம சங்கடமான ஒரு கேள்வி கேட்டு வைத்தாள்.

''உங்கள் வீட்டில் எல்லோரும் சிவப்பு நிறமாக இருக்கிறீர்கள். ஜானகி மாத்திரம் இவ்வளவு கறுப்பாகப் பிறப்பானேன்?''

இந்தக் கேள்வி மந்தாகினியின் முகத்தில் பெரும் மாறுதலை உண்டாக்கியது. ''அவள் மாத்திரம் கறுப்பாகப் பிறந்தது என் கர்மம்'' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள்.

இந்தப் பதிலைக் கேட்டுக் கொண்டிருந்த ஜானகியின் மனத்தில் பெரும் புயல் எழும்பியது. அதிலிருந்து அவள் தன் வீட்டில் உள்ள மற்றவர் முகங்களையும் தன் முகத்தையும் அடிக்கடி ஒப்பிட்டுப் பார்க்கத் தொடங்கினாள்.

அந்தக் குடும்பத்தில் அவள் மாத்திரம் ஏன் அப்படிக் கறுப்பாகப் பிறக்க வேண்டும்? கறுப்பு நிறம் இழிவான நிறமா? அப்படியாயின், பள்ளிக்கூடத்தில் நடக்கும் நாடகங்களில் கதாநாயகி பாத்திரத்துக்கு அவளை எதற்காகத் தேர்ந்தெடுக்கிறார்கள்? 'ஜானகி கறுப்பாக இருந்தாலும் அவளது மூக்கு, விழிகள், நெற்றி, பற்கள் எல்லாம் எவ்வளவு அழகாக இருக்கின்றன' என்று அவளது உபாத்தியாயினி அடிக்கடி புகழ்வது உண்டு. அப்படியிருந்தும் அவள் கறுப்பு நிறம் என்பதற்காக அவளுக்குக் கல்யாணம் ஆகவில்லை!—இதையெல்லாம் எண்ணியபோது ஜானகிக்கு உண்டான மன வேதனை சொல்லி முடியாது. அவளுக்குத் தன் தாயார் மீதும் தகப்பனார் மீதும்கூட வெறுப்பும் ஆத்திரமும் உண்டாயின.

அந்த ஊரில் இருக்கவே அவளுக்குப் பிடிக்கவில்லை. தான் புனாவுக்கு வர விரும்புவதாக அவள் தன் மாமனுக்குக் கடிதம் எழுதினாள். இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் அவருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை.

''நமக்குப் பிள்ளையா, குட்டியா? ஜானகி இங்கு வரட்டுமே. அவள் வந்தால் உனக்கும் துணையாக இருக்கும்'' என்றார் அவர், மிகுந்த உற்சாகத்துடன்.

அவருடைய மனைவி சிறிது தயங்கினாள். ''ஜானகி பிடிவாதக்காரி ஆயிற்றே. இருந்தாலும் யோசித்து உங்கள் உசிதப்படி செய்யுங்கள். உங்களுக்கு அவள் உங்கள் சகோதரரின் பெண்; எனக்கு அவள் என் சகோதரியின் பெண். ஆட்சேபிப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்றாள் மனைவி குந்தா.

ஜானகி எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் தேறியதும், தன்னைக் கலாசாலையில் சேர்க்க வேண்டும் என்று தந்தையை வற்புறுத்தினாள்.

"ஜானகி! நீ கலாசாலையில் சேருவது முடியாத காரியம். கல்லூரிப் படிப்புச் செலவுக்கு என்னிடம் பணமில்லை" என்றார் தந்தை கண்டிப்பாக.

"அப்பா, என் கல்யாணத்துக்காக நீங்கள் எதுவும் செலவு செய்ய வேண்டாம். அந்தத் தொகையைக் கொண்டு என்னைக் கலாசாலையில் படிக்க வைத்து விடுங்கள். நான் டாக்டருக்கு வாசிக்கப் போகிறேன்" என்றாள் ஜானகி.

அவளது தந்தையின் மனம் நெகிழ்ந்தது. பாவம், அவளுக்குக் கல்யாணம் ஆவது கஷ்டமாக இருக்கிறது. அவள் இஷ்டப்படி வாசிக்கட்டுமே.

ஜானகி புனா சென்று வாசிப்பதற்கு சுந்தரராவ் இணங்கினார். அவர் இணங்கியதற்கு மற்றொரு காரணமும் உண்டு.

சிற்சில சமயங்களில் ஜானகியின் துடுக்கான பதில்கள் அவள் தந்தையைத் திகைக்க வைத்தன. அவள் கூறுவதில் உண்மையிருப்பினும், ஒரு பெண் அடக்கமின்றிப் பேசுவது அவருக்குப் பிடிக்கவில்லை.

** ** **

ஜானகி புனாவில் தன் மாமன் வீட்டில் இருந்து கொண்டு இண்டர்மீடியட் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினாள். அவள் பிறகு வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து வாசித்தாள். எல்லாப் பாடங்களிலும் அவள் முதன்மையாக இருப்பதைக் கண்டு ஆசிரியர்களான டாக்டர்கள் ஆச்சரியப்பட்டனர். அவள் யாரிடத்திலும் எவ்விஷயத்திலும் தன் விருப்பையோ, வெறுப்பையோ மறைப்பதில்லை. அவளது தைரியமும் திறமையும் கல்லூரிகளில் உள்ள அவளது சகாக்களுக்கு வியப்பை அளித்தன. கல்லூரியில் இலவசச் சம்பளமும் அவளுக்கு அளிக்கப்பட்டது.




ரஸிக மணி டி. கே. சி. தினம் மார்ச்சு மாதம் ஏழாந் தேதி திருக்குற்றாலத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. டி. கே. சி. அவர்களின் திரு உருவப் படத்தை யானைமீது வைத்துப் பல தமிழ் அன்பர்கள் புடைசூழ விழாமேடைக்கு ஊர்வலமாகச் சென்றனர். விழாவுக்கு இலஞ்சி திரு ஐ. டி. சிதம்பரம் தலைமை தாங்கினார். வித்வான் கு. அருணாசலக் கவுண்டர், மன்னார் கோயில் கம்பர் கழகக் காரியதரிசி திரு எம். கே. ராமய்யங்கார், வித்வான் ல. சண்முகசுந்தரம், தென்காசி திரு சண்முகம் பிள்ளை, ஸ்ரீவில்லிபுத்தூர் திரு டி. டி. திருமலை, திரு லக்ஷ்மணன் செட்டியார், திரு பி. ரஞ்சித் சிங் முதலானோர் ரஸிக மணி டி. கே. சி. அவர்கள் தமிழுக்குச் செய்த அரிய சேவையைப் பற்றியும் உயர்ந்த குணங்களைப் பற்றியும் எடுத்துரைத்தார்கள். டி. கே. சி. தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடிய டி. கே. சி. நினைவுக் கழகத்தாரைப் பெரிதும் பாராட்டினார்கள். வித்வான் ல. சண்முகசுந்தரம் பேசுகையில், "பல்லான்ற கேள்விப் பயனுணர்வார்" என்ற நாலடியார் பாடலைச் சொல்லித் திறமைசாலிகளையே நமன் கொண்டு போகிறான், மற்றவர்களை அவன் சீண்டுவதில்லை என்பதை உருக்கத்தோடு குறிப்பிட்டார்.

டி. கே. சி. தின விழாக் காட்சிகள் சிலவற்றை மேலே காணலாம்.

ஜானகி கல்லூரிப் படிப்புக்காகப் புனா சென்ற பின் இரண்டே தடவைதான் தன் ஊருக்கு வந்தாள். அவளைக் கண்டதும் அவளது தாயாருக்கு ஏற்பட்ட சந்தோஷத்துக்கு எல்லையே இல்லை. தனக்கு விவாகம் ஆகவில்லை என்பது பற்றி ஜானகி என்னளவும் கவலையற்றிருந்தது அவளது தாயாருக்கு

ஆச்சரியமாக இருந்தது. அதே சமயம் ஏதோ ஒரு விஷயம் ஜானகியின் மனத்தை வாட்டி வருகிறது என்பதை அவளது பேச்சிலிருந்து தெரிந்து கொண்டாள்.

சுனந்தா தன் மனத்தில் உள்ள சகல விஷயங்களையும் ஒளிவு மறைவின்றித் தாயாரிடம் கூறுவாள். ஆனால், ஜானகியோ அதற்கு நேர்மாறானவள்.

ஒரு நாள் ஜானகி தீவிர சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் உலகத்தையே மறந்து உட்கார்ந்திருந்தாள். அதைக் கண்ட மந்தாகினி அவள் அருகில் சென்று அவளை அணைத்தவாறு, "என்ன, ஒரேயடியாய் யோசனையில் ஆழ்ந்திருக்கிறாய், ஜானகி?" என்று கேட்டாள்.

"உன்னைப் பற்றித்தான் கவலையாக உட்கார்ந்திருக்கிறேன், அம்மா!"

"என்னைப் பற்றி நீ கவலைப்பட என்ன இருக்கிறது?"

"ஒன்றன் பின் ஒன்றாகப் பல குழந்தைகள் பெற்றதாலேயே உன் உடம்பு இப்படித் துரும்பாய்ப் போய் விட்டது."

"இது என்ன பைத்தியக்கார எண்ணம்? குழந்தை பிறப்பதும் பிறக்காததும் நம் கையிலா இருக்கிறது?"

"ஏன், உன் கையில்தான் இருக்கிறது."

"ஜானி, உனக்கு இதெல்லாம் தெரிவதற்கு இடமில்லை. ஒரு பெண்ணுக்குத் தன் உயிரைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் சுதந்திரம் இல்லை. அவளது கட்டுப்பாட்டில் வேறு எதுவும் இல்லை."

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய், அம்மா?"

"உன்னைப் போன்ற உலக விவரம் தெரியாதவர்களிடம் நான் வேறு என்ன சொல்லுவதற்கு இருக்கிறது?"

"அது உண்மைதான். இருந்தாலும் நான் டாக்டர் அல்லவா? அத்தகைய விஷயங்களைப் பற்றி வாசித்திருக்கிறேன், அம்மா!"

"நீ வாசித்ததெல்லாம் இதுதானா?"

"ஆமாம். பிறப்பின் இரகசியங்கள்—இதுதான் எனக்கு முக்கிய பாடம்."

மந்தாகினி கிலி பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள்.

"பிள்ளை பெறும் நரக வாழ்விலிருந்து பெண்கள் விடுதலை பெற முடியாதா?"

"ஜானகி! இப்படி யெல்லாம் நீ பேசக் கூடாது. உனக்கு இன்னும் கல்யாணம் ஆக வில்லையல்லவா?"

"ஏன், கல்யாணமின்றி நான் உயிர் வாழ முடியாதா?"

"இந்தக் கேள்விக்கு நான் என்ன பதில் சொல்லுவது? நீ படித்த பெண்."

"நான் படித்திரா விடில்......"

"படிக்காத பெண்கள் கல்யாணத்தைக் கண்டு பயப்பட மாட்டார்கள்."

"நான் கல்யாணத்தைக் கண்டு பயப்பட வில்லையே!"

"பின்னர், எதைக் கண்டு பயப்படுகிறாய்? பிரசவ வேதனையைக் கண்டும் தாயாக ஆவதைக் கண்டும் பயப்படுகிறாயா?"

"இல்லை, நான் தாயாவதைத் தடுக்கும் வழி எனக்குத் தெரியும்!"

"கண்ணே, அப்படிச் சொல்லாதே."

"உண்மையைச் சொன்னால் என்ன அம்மா? ஒரு பெண் பல குழந்தைகளுக்குத் தாயாவதைத் தடுத்துவிட வேண்டும்."

"எப்படித் தடுப்பது என்பது உனக்குத் தெரியுமா?"

"அவ்விதம் தடுக்கப் பல வழிகள் இருக்கின்றன."

"அந்த வழிகளால் பலன் ஏற்படாது, ஜானகி. அத்தகைய முறைகளால் குழந்தை பெறுவதைத் தடுக்க முடியாது."

"அவற்றைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? எந்த ஆதாரத்தைக் கொண்டு நீ அப்படிச் சொல்லுகிறாய், அம்மா?"

"அதை யெல்லாம் உனக்குச் சொல்ல முடியாது. உனக்குக் கல்யாணமான பிறகு தான் அந்த இரகசியங்களை யெல்லாம் நீ அறிந்து கொள்ள முடியும்."

வைத்தியக் கல்லூரியில் பேராசிரியர்களாலும் போற்றப்படும் ஜானகிக்கு, தான் தன் தாயாரிடம் தோல்வியடைந்து விட்டது போல் தோன்றியது.

** ** **

உலகத்தில் ஜனத் தொகையைக் கட்டுப் படுத்த முடியுமா? இந்தக் கேள்விக்குத் தான் விடையளிக்க முடியும் என்று இதுவரையில் ஜானகி எண்ணியிருந்தாள். ஆனால், அவளுடைய தாயாரின் பதில்கள் அவள் மனத்தில் பெரும் புயலையும் சந்தேகத்தையும் கிளப்பி விட்டன.

"கல்யாணம் செய்து கொண்டாலன்றி நீ அந்த இரகசியங்களை யெல்லாம் அறிந்து கொள்ள முடியாது" என்று அவள் தாயார் சொன்னதில் உண்மை இருக்கிறது என்றே அவளுக்குத் தோன்றியது. நேரடியான அனுபவமின்றிப் புத்தகப் படிப்பினாலும் விஞ்ஞான அறிவினாலும் மாத்திரம் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டுவிட முடியாது என்பதை அவள் உணர்ந்தாள்.

ஜானகிக்குத் தன் மனத்தை எவ்வளவோ சமாதானப் படுத்திக் கொண்டும்கூட, தன் பிறப்பில் ஏதோ இரகசியம் இருக்கிறது என்ற எண்ணத்தை அவளால் மறக்க முடியவில்லை. இல்லாவிடில் அந்தக் குடும்பத்தில் உள்ள மற்றக் குழந்தைகளைப் போலில்லாமல் அவள் மாத்திரம் ஏன் அப்படிக் கறுப்பாக இருக்க வேண்டும்?

ஒரு சமயம் சுந்தர ராவ் தமது குமாரர்களுடன் வெளியூருக்குச் சென்றிருந்தார். ஜானகியும் அவளது தாயாரும் மாத்திரமே வீட்டில் இருந்தனர்.

ஒரு நாள் இரவு ஜானகி தூக்கமின்றிப் புரண்டு புரண்டு படுப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த அவளது தாயார், "ஜானி! நீ ஏன் தூங்காமல் இப்படி அவஸ்தைப் படுகிறாய்?" என்று கேட்டாள்.

கடினமான
வேலைக்குப்
பிறகு....



மற்றவைகளை விட
புத்துணர்ச்சியளிப்பதும்
ஆனாலும் மிகக் குறைந்த
விலையுமான பானம்

டீ



நமது தேசிய பானம்




PST 131

"அம்மா, உன்னை ஒன்று கேட்கிறேன். ஒளிக்காமல் சொல்லுவாயா?"

அவள் என்ன கேட்கப் போகிறாள் என்பதை மந்தாகினி ஊகித்துக் கொண்டாள்.

"உன் மனத்தை ஏன் அலட்டிக் கொள்கிறாய் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் உன்னிடம் அதையெல்லாம் எப்படி விவரித்துக் கூறுவது?" என்றாள் மந்தாகினி.

"அம்மா..." என்று தயங்கினாள் ஜானகி.

"ஏன் நிறுத்தி விட்டாய்? எதாயிருந்தாலும் என்னிடம் சொல்லி விடு, கண்ணே."

"அம்மா. என்னுடைய தந்தை யார்?"

அவ்வளவுதான்! மந்தாகினி திடுக்கிட்டாள். அவளுக்கு ஏக காலத்தில் நூறு தேள்கள் கொட்டுவது போலிருந்தது.

"இது என்ன கொடூரமான கேள்வி?"

"அம்மா கோபித்துக் கொள்ளாதே. என்னை மன்னித்து விடு."

ஜானகியின் கண்களில் நீர் ததும்பியது.

"ஜானகி, இனி உன்னிடம் ஒளித்து வைப்பதில் பலனில்லை. எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன், கேள்."

இந்தப் பீடிகையுடன் மந்தாகினி ஜானகியின் பிறப்பு பற்றிய இரகசியத்தைச் சொல்லத் தொடங்கினாள்:

"சுனந்தா பிறந்த ஒரு வருஷத்துக்குள் நான் உன்னைக் கர்ப்பம் தரித்தேன். இதைக் கேட்டதும் உன் அப்பா நடுங்கி விட்டார். அடுத்தடுத்துப் பிரசவித்தால் எனக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்பது தான் அவரது கவலை. கருவைக் கரைக்கக் கூடாது, பாவம், என்றெல்லாம் நான் எவ்வளவோ சொல்லியும் அவர் கேட்கவில்லை. கன்னங் கரேலென்றிருந்த ஒரு மருந்தை என்னிடம் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார்.

"அது என் வயிற்றில் போனதும் எனக்கு நெருப்புத் தணலை விழுங்கியது போல் இருந்தது. அடி வயிறு பற்றி எரிந்தது. நான் வலியால் துடிதுடித்தேன். அதை இப்போது நினைத்தாலும் என் நெஞ்சம் பதறுகின்றது. உன் தந்தை மீது எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆனால். கர்ப்பம் கரையவில்லை. நீ பிறக்க வேண்டும் என்பது ஆண்டவனின் கட்டளையாக இருக்கும் போது, எந்த மருந்தினால்தான் அதைக் கரைக்க முடியும்? அந்த மருந்தின் வேகமே உன் உடலை இப்படிக் கறுப்பாகச் செய்திருக்க வேண்டும்.

"அந்தச் சூழ்நிலையில் நீ உருவாகியதால் தான் உன் குணமே அலாதியாக இருக்கிறது என்று நினைக்கிறேன். அதனால்தான் உனக்கு உன் தந்தையைக் கண்டால் பிடிக்கவில்லை. அவருக்கும் உன்னைக்கண்டால் பிடிக்கவில்லை. அச்சம்பவத்திலிருந்து உன் தந்தையின் கண்கள் திறந்தன. பிறகு நான் பல தடவை கர்ப்பம் தரித்த போதும், அவர் மருந்தைப் பற்றிக் கனவிலும் நினைக்கவில்லை. என் தாயாருக்குப் பல குழந்தைகள் பிறந்தன. நானும் பல குழந்தைகளுக்குத் தாயானேன். பல குழந்தைகளைப் பெறுவது குற்றமா? குழந்தைகள் வேண்டாம் என்றால், கர்ப்பமே தரிக்காமல் இருக்க ஏதாவது மருந்தைக் கண்டு பிடிக்க வேண்டும். அப்படிக் கண்டு பிடித்தாலும் அது இயற்கை நியதிக்கு முரணாகவே முடியும். பிள்ளைப் பேற்றை வெறுப்பவர்கள் உலகில் உண்டா? தன் வயிற்றில் உண்டாகும் குழந்தைச் செல்வத்தைக் கரைக்கும் பாதகத்துக்கு எந்தப் பெண்ணாவது இசைவாளா? அவ்விதம் இசைவது கடவுள் கட்டளைக்கு விரோதம்; இயற்கை நியதிக்கு விரோதம்; இன்ப வாழ்க்கைக்குக் கேடு; உலக வளர்ச்சிக்கே உலை வைப்பதாகும். நான் உன் தந்தையின் கோரிக்கைக்கு இணங்கியதால் தான் உன் மூலம் இயற்கை என்மீது இப்படி வஞ்சம் தீர்த்துக் கொள்ள முற்பட்டது போலும்."

அறிவு ததும்பும் தன் தாயின் இந்த வார்த்தைகளைக் கேட்ட ஜானகி விம்மி விம்மி அழுதாள். தன் தாயாருடைய அனுபவ பூர்வமான வார்த்தைகளுக்கு எதிரில் தன்னுடைய புத்தகப் படிப்பு யாதொரு பலனுமற்றதாக அவளுக்குத் தோன்றியது. மந்தாகினி தன் மனத்தில் பொங்கும் உணர்ச்சிகளை அடக்கியவாறு ஜானகியை மிக்க அன்புடன் அணைத்துக் கொண்டாள்.

ஜானகிக்கு, மனித வாழ்க்கை யாரும் அவிழ்க்க முடியாத, எந்த நூல்களிலிருந்தும் அறிந்து கொள்ள முடியாத சிக்கல்கள் நிறைந்த புதிராகத் தோன்றியது!

கரூர் தாலூகா, வெள்ளியணை கிராமம் S. M. V. மகாலிங்கம் அவர்களின் சகோதரன் திரு இராமநாதனுக்கும் நாமக்கல் தாலூகா பரளி கிராமம் சிங்கய்ய கவுண்டர் அவர்களின் பேத்தியும் P. S. சின்னுசாமி கவுண்டரின் புதல்வியுமான திருமதி லலிதாவுக்கும் 25-2-55 அன்று மணமகன் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்தன்று தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அநேக பிரமுகர்கள் விஜயம் செய்து திருமணத்தைச் சிறப்புறச் செய்தனர். திரு பழையகோட்டை பட்டக்காரர் போன்றவர்களிடமிருந்தும், இலங்கையிலிருந்தும் ஆசிச் செய்திகளும் பரிசுகளும் தம்பதிகளுக்கு அளிக்கப்பட்டன. வாழ்க இராமநாதன்—லலிதா.






## 12. ஆஸ்துமாவுக்கு நான்காவது பயிற்சி

விபரீதகரணி செய்யும்போது வளைக்கப்படும் முதுகெலும்புக்குச் சிரமபரிகாரமளிப்பது மத்ஸ்யாசனம். விபரீதகரணி சற்று அதிக நேரம் செய்பவர்களுக்கு, விபரீதகரணி ஆசனத்தைக் கலைத்ததும் சற்று முதுகெலும்பு வலிப்பதாகத் தோன்றும். சிலருக்கு இடுப்பு வலிப்பதாகத் தெரியும். அவ்வாறெல்லாம் ஏற்படாமல் இருப்பதற்காகக் கட்டாயம் இந்த மத்ஸ்யாசனம் செய்ய வேண்டுவது அவசியம். சிலர் இந்த ஆசனத்தை விபரீதகரணிக்குப் பின் செய்ய வேண்டுமென்பது தெரியாமல் 'விபரீதகரணி செய்தேன்; அதனால் முதுகு வலித்தது; இடுப்பு வலித்தது' என்று விபரீதகரணியையும் செய்யாமல் விட்டு விடுவார்கள்.

விபரீதகரணி செய்பவர்கள் ஒரு சில நிமிஷ நேரம் இருந்தால் வலி அவ்வளவாகத் தெரியாது. பத்து நிமிஷம் முதல் முப்பது நிமிஷம் வரை செய்பவர்களுக்குத்தான் சற்று வலி தெரியும். இவ்வாறு எல்லோருக்கும் வலிக்கும் என்றும் சொல்ல முடியாது. சிலருக்கு வலிக்கலாம். சிலருக்கு வலியே ஏற்படாது. அவ்வாறு வலியே இல்லாமல் இருந்தால் இந்த மத்ஸ்யாசனத்தைச் செய்ய வேண்டாமல்லவா என்று நினைக்கக் கூடும். இந்த மத்ஸ்யாசனத்தின் மகிமையை அறிந்தால் அவ்வாறெல்லாம் எண்ணத் தோன்றாது.

விபரீதகரணி செய்யும்போது முதுகெலும்பு மேல் நோக்கி வளைக்கப்பட்டுச் சற்று அதிக நேரம் இருக்கும்போது முதுகெலும்புகள், நரம்புகள், எல்லாம் இழுக்கப்பட்டு, வளைக்கப்பட்டு அவ்வாறே நாம் பழகும் அளவும் இருப்பதால், ஆசனத்தைக் கலைத்ததும் நம்மை யறியாமலே சற்று முதுகைப் பின்னுக்கு வளைப்போம். காரணம் இயற்கையாய் ஏற்பட்ட ஒரு உணர்ச்சி அவ்வாறு செய்யத் தூண்டுகிறது. அதையே மத்ஸ்யாசனத்தில் இன்னமும் சரியாய் வளைத்து நல்ல சிரம பரிகாரத்தைச் செய்து கொள்ளுகிறோம்.

மத்ஸ்யாசனம் செய்வதால் வெறும் சிரம பரிகாரம்மட்டுமல்ல, நுரை ஈரலுக்கும், அதைச் சேர்ந்த பாகத்துக்கும் அபரிமிதமான பலன் ஏற்படுகின்றது. அந்தப் பலன்களை விளக்கிச் சொல்லுமுன் அதைச் செய்யும் விதத்தைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்வது, நல்லதல்லவா!

மத்ஸ்யாசனம் செய்யும்விதம் :—இந்த ஆசனத்துக்கு முதலில் பத்மாசனம் போட வரவேண்டும்.

பத்மாசனம் செய்யும் விதம் :—விரிப்பில் உட்கார்ந்து இரண்டு கால்களையும் நீட்டிக் கொள்ளவும். கைகளின் உதவியால் பாதத்தைத் தூக்கி வலது காலை மடித்துக் குதிங்கால் வயிற்றில் அடிபாகம் இடது பக்கம் படும்படி இடது தொடையின் மேல் வைத்துக் கொள்ளவும். உள்ளங்கால் மேல் நோக்கி இருக்கும். மடித்த முழங்கால் தரையை ஒட்டியிருக்க வேண்டும். பின் இடது காலை மடித்துக் கைகளால் பாதத்தைத் தூக்கி வலது தொடையின் மேல், குதிங்கால் வயிற்றின் அடிபாகத்தின் வலது பக்கம் ஒட்டும்படி வைத்துக் கொள்ளவும். முதுகை நேராய் நிமிர்த்தி, மார்பை விரித்து முதல் படத்தில் உள்ளது போல் நிமிர்ந்து உட்காரவும்.

இந்தப் பத்மாசனம் பலருக்கு முதலில் சரியாய் வராது. வலது காலைத் தொடையின் மேல் தூக்கிப் போட்ட பின், இடது காலை மற்றொரு தொடையின் மேல் தூக்கிப் போட வராது. இதற்குள் வலது காலின் மணிக்கட்டு வலிக்கத் துவங்கும். இரண்டு காலையும் தொடையின் பேரில் வைத்தாலும் குதிங்கால்கள் அடிவயிற்றை ஒட்டினாற் போல் அமராது. சிலருக்கு இரண்டு முழங்கால்களும் தரையை ஒட்டி வைக்க முடியாமல் தூக்கிக் கொள்ளும். சிலருக்கு ஒரு முழங்கால் தரையில் படியும். ஒன்று படியாமல் தூக்கிக் கொள்ளும். அவ்வாறு முழங்கால் படிவதற்காக முழங்காலை அழுத்தித் தரையில் படிய வைக்கப் பார்த்தால் இடுப்பு ஒருவாறாய்க் கோணலாகும். இவைகளெல்லாம் ஆரம்பத்தில் உண்டாவது இயற்கையே. விடாப் பிடியாய்த் தினசரி பழகி வந்தாலே ஆரம்பக் குறைகள் தன்னால் மறையும்.

ஆஸ்துமா நோய்க்கு எவ்வளவு தூரம் மருந்தால் குணமுண்டு என்பதை முன்பு பல அத்தியாயங்களில் அலசி முடிவாகியிருக்கிறது.

தேகப்பயிற்சியினால் அதிலும் யோக ஆசனங்களால் மிகச் சுலபமாய் ஆஸ்துமாவைப் போக்கடித்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தாகி விட்டது. எனவே ஆஸ்துமாக்காரர்கள் அவர்கள் எவ்வளவு சொகுசானவர்களாய் இருந்தாலும், சுகவாசிகளாய் இருந்தாலும் அவர்களும் கட்டாயம் இந்த ஆசனங்களைச் செய்தால்தான் ஆஸ்துமா எனும் கொடிய அரக்கனிடமிருந்து விடுதலை அடையலாம். இல்லையானால் பணம் இருக்கவே இருக்கிறது. மருந்துகளும், வைத்தியர்களும் இருக்கவே இருக்கிறார்கள். இவர்களுக்கு ஆஸ்துமா என்றும் இருந்து விட்டுப் போகிறது.




சீதாலக்ஷ்மி குமாரசாமி

பத்மாசனப் பலன்: பத்மாசனத்தில் முதுகெலும்பு நேராய் நிமிர முடிகின்றது. கூன் விழாது. அதனால் நுரை ஈரலும் தன் வேலையைத் தடங்கலின்றிச் செய்ய முடிகின்றது. பிராண வாயுவைத் தாராளமாய் இழுக்கவும், விடவும் சௌகரியம் ஏற்படுகின்றது. ஆஸ்துமாக்காரர்களுக்கு இதனால் சிறிது சௌகரியம் ஏற்படலாம். பத்மாசனத்தை மற்ற நேரங்களில் பழகலாம். உட்காரும் போதெல்லாம் பத்மாசனத்தில் உட்காரலாம். படிக்கும் போது, எழுதும் போது, பேசும்போது பத்மாசனத்தில் உட்காரலாம். அதனால் சுத்த பிராண வாயு தாராளமாய் நுரையீரல்களில் புகவும், கரியமில வாயு எளிதாய் வெளியே வரவும் முடியும். நாம் இழுக்கும் பிராண வாயுவை அனுசரித்துத்தான், நுரை ஈரலில் கெட்ட இரத்தம் சுத்தமாகும் வேலை நடைபெறும். சாதாரணமாய் நாம் இருக்கும்போது நம்மை அறியாமல் கூன் விழுந்து விடும். ஆனால் பத்மாசனத்தில் கூனியிருக்க முடியாது. எனவே இரத்த சுத்தி நன்கு நடைபெறும். இரத்தம் சுத்தமடைந்தால் நரம்புத் தளர்ச்சி, சோர்வு, மயக்கம், பசியின்மை, தலைவலி, அசதி முதலியன போகும். முக்கியமாய் ஆஸ்துமாக்காரர்களுக்கு நுரையீரல் தாராளமாய் இயங்கச் செய்ய வேண்டியது அவசியம். இது ஒருவாறு இந்த ஆசனத்தில் முடிகிறது.

இதைத் தவிர கால், தொடை நரம்புகள் இழுக்கப்பட்டுப் பயிற்சி அடைவதால் கால், இடுப்பு முதலியன நல்ல பலம் பெறுகின்றன. இந்த பத்மாசனம் போடுவதினாலேயே வயிற்று வலி கூட மறைந்து விடுகின்றது. முதுகெலும்பின் அடி பாக நரம்புக் கூட்டங்கள் இந்த ஆசனத்தினால் விழிப்படைவதால் வயிற்றுச் சம்பந்தமான நோய்கள் விலக மார்க்கமுண்டு.

இந்த பத்மாசனத்தைப் பற்றி இவ்வளவும் சொல்லிவிட்டுக் கடைசியில், பத்மாசனத்தைச் சரியாய்ச் செய்ய வந்தபின்தானே, இரண்டாவது படிக்குப் போகவேண்டு மென்று நினைக்கலாம். பத்மாசனம் சரியாய்ப் போட வந்தபின் தான் மத்ஸ்யாசனத்தைப் போடவேண்டு மென்பதில்லை. பத்மாசனம் சரியாய் வருமளவும் காத்திருக்க வேண்டியதில்லை. அதனால் பத்மாசனத்தையும் அசட்டை செய்துவிடக் கூடாது. பத்மாசனத்தைச் சரிவரத் தினசரி பலமுறை முயற்சியுடன் பழகிக் கொள்ள வேண்டும். சரியாய் வரும்போது வரட்டு மென்று சாதாரணமாய் சம்மணம் கூட்டியே உட்கார்ந்தும் செய்யலாம். இரண்டாவது சித்திரத்திலுள்ளபடி பின்னால் மெதுவாய் சாய்த்துப் படுத்துக் கொள்ள வேண்டும். பின் மூன்றாவது சித்திரத்திலுள்ளபடி கைகளைத் தலைக்கு மேல் கொண்டு சென்று தரையில் ஊன்றிக் கொண்டு தலையைப் பின்புறம் திருப்பி, உச்சி தரையில் படும்படி வைத்துக் கொள்ள வேண்டும். பின் நான்காவது சித்திரத்திலுள்ளபடி கைகளால் பாதங்களின் பெரு விரலைப் பிடித்துக் கொள்ள வேண்டும். முழங்கால்கள் இரண்டும் தரையில் நன்றாகப் பதியும்படி வைக்க வேண்டும்.

இந்த ஆசனம் செய்யும் போதும் சிலருக்குச் சில தவறுகள் உண்டாவது இயற்கையே. சிலருக்குத் தலையைத் திருப்பும்போது வாய் திறந்து கொள்ளும். வாய் மூட வேண்டுமென்றால் பற்களால் உதடுகளைக் கடித்துக் கொண்டு மூடிக் கொள்வார்கள். இரண்டும் கூடாது. சாதாரணமாய் வாயை மூடிக் கொண்டால் போதும். சிலருக்குக் கைகளைத் தலைக்குமேல் கொண்டு சென்று சித்திரத்திலுள்ளபடி திருப்ப வராது. சிலர் பக்கத்தில் முழங்கைகளை ஊன்றியே தலையைத் திருப்பி விட்டு, பிறகு கைகளால் பெருவிரலைப் பிடித்துக் கொள்வார்கள். இவ்வாறு செய்வதனால் பாதகமொன்றுமில்லை. சிலர் தொடைகளைக் கைகளால் இழுத்துப் பிடித்துக் கொண்டு அந்த விசையால் தலையைத் திருப்புவார்கள். இவ்வாறும் செய்து மத்ஸ்யாசன நிலைமைக்கு வரலாம்.

இதில் முக்கிய நிலை என்னவென்றால் மார்பு பாகம் மேல் நன்கு எழுப்பப்பட்டு நுரை ஈரல் நன்கு விரிவடையச் செய்வதேயாகும். இது ஏற்பட எப்படிச் செய்தாலும்தான் என்ன! பத்மாசனம் போட்டு மத்ஸ்யாசனம் செய்ய வராதவர்கள் கைகளால் கால் பெருவிரலைப் பிடிப்பதற்கில்லை. ஆனால் அவர்கள் கைகளை நீட்டித் தொடையின் மேல் வைத்துக் கொள்ளலாம்.

சிலருக்கு உச்சந் தலை தரையில் படும்படி சரியாய்த் தலையைத் திருப்ப வராது. அவர்கள் ஒரே நாளில் சித்திரத்திலுள்ளபடி செய்து விட வேண்டுமென்று கஷ்டப்பட்டுத் தலையைத் திருப்பக் கூடாது. எங்காகிலும் கழுத்து சுளுக்கிக் கொள்ளலாம். எந்த ஒரு பயிற்சியும் அவசரப்பட்டு, அதிக கஷ்டப்பட்டு சரியாய்ச் செய்து விட வேண்டுமென்று முயற்சி செய்யக் கூடாது. ஆனால் விடாமல் பழகுவது என்ற பிடிவாதம் மட்டும் இருந்தால் போதும்.

மத்ஸ்யாசனத்தில் தலையை முடிந்த மட்டும் திருப்பலாம். ஆனால் உச்சந் தலை தரையில் படும் வரை திருப்பிய பின்தான் சில நிமிஷங்களாவது சரியாய்ச் செய்ய வரும். அப்பொழுதுதான் தொடையும் முழங்காலும் தரையில் படியும். மற்றப்படி தலையும் வழுக்கிக் கொண்டே போகும். முழங்காலும், தொடையும் சிலருக்குத் தூக்கியே நிற்கும். இருந்தாலும் பரவாயில்லை. நாளுக்கு நாள் முன்னேறலாம். பலன் என்னவோ சிறிதளவு செய்தாலும் பூரணமாய் உண்டு. (தொடரும்)

# எங்களை நம்புங்கள்

நாங்கள் உங்களுக்கான சகலவித பாங்கிங் அலுவல்களையும் உங்கள் சார்பில் ஏற்றுக்கொண்டு திறமையாகவும் துரிதமாகவும் நடத்திக் கொடுக்கிறோம்.

★

## தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

தலைமை ஆபீஸ்:

2, ராயல் எக்ஸ்சேஞ் பிளேஸ், கல்கத்தா

செலுத்தப்பட்ட
மூலதனம்
ரூ. 2 கோடி



ரிசர்வ் நிதி
ரூ. 86½ லக்ஷம்

ஜி. டி. பிர்லா
சேர்மன்

::

பி. டி. தாகூர்
ஜெனரல் மானேஜர்

---

SPECIAL Thick SANDAL BATHI
GOKUL
MADE by T.S.R & Co., KUMBAKONAM, S. INDIA.

GOKUL SPECIAL Thick MALA BATHI
12 STICKS.
MADE by T.S.R & Co., KUMBAKONAM, S. INDIA.

SPECIAL Thick AMBAR BATHI
GOKUL
MADE by T.S.R & Co., KUMBAKONAM, S. INDIA.
12 STICKS

## T.S.R

உங்கள் உபயோகத்திற்கு எங்கள் புதிய தயாரிப்பு

# கோகுல்

மாலா
அம்பர்
சந்தணம்

ஸ்பெஷல் திக் பத்திகள்

சுமார் 2 மணி நேரம் எரியக் கூடியவை

## T.S.R & CO.
KUMBAKONAM.

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு
கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி செட்டியார், கோயமுத்தூர்.




காப்பியைச் சாப்பிட்ட சுந்தரத்தின் முகம் சுளித்தது. "சே, சே! வாயில் வைக்க வழங்க வில்லையே!" என்று முணுமுணுத்தான் அவன்.

அடுத்த நிமிஷம் காப்பி டம்ளரும் கையுமாய்ச் சமையலறையை நோக்கி நடந்தான்.

அங்கே, சுசிலா பானைத் தண்ணீரை மொண்டு குடித்துக் கொண்டிருந்தாள்.

சுந்தரம் மலைத்துப் போய் நின்றவன் அரை நொடியில் சமாளித்துக் கொண்டு அவள் கைகளைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டான். "என்ன சுசிலா இது! காப்பியைக் குடித்து விட்டு யாராவது தண்ணீரைக் குடிப்பார்களா!" என்றான்.

சுசிலா மிரள மிரள விழித்தாள். "இல்லை! காப்பியில் இருந்து ஏதோ தொண்டையில் அகப்பட்டுக் கொண்டது....அதற்காகத்தான் தண்ணீரைக் குடித்தேன்..."

சின்னக் கண்ணன் குறுக்கிட்டான். "இல்லேப்பா! அம்மா காப்பியே குடிக்கில்லே. எனக்கும் உனக்கும் மட்டும் தான் கொடுத்தாங்க" என்று சொன்னான்.

சுந்தரம் மனைவியை அதட்டினான். "என்ன! அவன் சொல்வது நிஜந்தானா......!"

சுசிலா மெள்ளத் தலையை அசைத்தாள். "இருக்கிற 'பொடி' நாலைந்து நாளுக்குத்தான் காணும். ஆனால், மாசம் முடியப் பத்து நாள் கிடக்கிறதே! உங்களுக்கு மட்டுமாவது கடைசி வரை வரட்டுமே......என்றுதான்."

சுந்தரம் பதில் பேசவில்லை. காப்பி நன்றாக இல்லையே என்பதற்காகக் கோபித்துக் கொள்ள வந்த அவன் கோபத்தைச் சிதற அடித்ததோடு அவனை நிலை கலங்கவும் செய்தது சுசிலாவின் பொறுப்பும் அக்கறையும்.

டம்ளரில் இருந்த காப்பியைக் குடிக்கும் நினைவு கூடத் தோன்றாமல் தரையிலே மெள்ள உட்கார்ந்தான் அவன்.

சின்னக் கண்ணன் இந்தச் சமயம் பார்த்துத் தந்தையின் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

சுசிலா அவனை இலேசாக அதட்டினாள்.

கண்ணனை விளையாட அனுப்பிவிட்டுச் சுந்தரம், "தீபாவளி வருகிறது என்பதை நான் மறந்தே போய் விட்டேன். நமக்கும் கல்யாணம் ஆகி, ஐந்து வருஷங்கள் ஆகி விட்டன. ஐந்து தீபாவளிகள் வந்து போயிற்று. இதுவரை நூல் புடவையைத் தவிர நீ எதையும் காணவில்லை. இந்த வருஷம் அதற்கும் கூட வகை இருக்காது போல இருக்கிறது. இருந்திருந்து என் கையைப் பிடித்ததற்கு நீ கண்ட பலன் பூஜ்யம்தான்..." என்று அங்கலாய்த்தான்.

சுசிலா மெள்ளக் கண்களை மூடிக் கொண்டாள். "பட்டுப் புடவைதான் வேண்டும் என்று ஒன்று உண்டா என்ன! உங்கள் அபரிமிதமான அன்பு இருக்கிறதே அது மட்டுமே எனக்குப் போதும்! ஏழேழு பிறவிகளுக்கும் உங்கள் கைப்பிடிக்க நான் தயாராய் இருக்கிறேன்."

புகைந்து கொண்டிருந்த அடுப்பு அறை முழுதையும் இருட்டாக்கிக் காண்பித்தது. ஆனால் அவர்கள் நெஞ்சில் அன்பு ஒளி வீசிக்கொண்டிருந்தது. துன்பத்தையும், இன்பத்தையும் மாற்றி மாற்றிக் காட்டும் தன் விளையாட்டுத் தோற்றத்தின் மூலம் காலதேவன் அங்கே எந்த வகையில் வெற்றியைக் காண முடியும்!

***

காலை மணி ஒன்பது.

வழக்கம் போலச் சுந்தரம் சைக்கிளில் காரியாலயத்துக்குச் சென்று கொண்டிருந்தான். அவன் கால்கள் 'பெடலை'ச் சுழற்றிய அதே வேகத்தில் அவன் இதயம் வரப்போகும் தீபாவளியை எப்படிச் சமாளிப்பது என்ற பிரச்னையைச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது.

ஆயிரம் ஆயிரம் சாதாரணமான குமாஸ்தாக்களில் அவனும் ஒருவன். அவனுக்குக் கிடைத்த குறைந்த சம்பளத்தை வைத்துக் கொண்டு அவன் இத்தனை நாட்களும் காலம் கடத்தியதே அதிசயம். சுசிலாவின் அநுசரணையும், உயர்ந்த மனமும்தான் இதற்கு அடிப்படையாக இருந்து உதவின.

சுந்தரத்தின் நெஞ்சில் மறுபடியும் சுசீலாவின் மீது நன்றி ததும்பியது.

நிமிரென்று சைக்கிளில் இருந்தபடியே அவன் ஒரு அனுத் துள்ளினான். "இந்தச் சைக்கிளை விற்று விட்டால் என்ன! நூற்றிருபது ரூபாய் மொத்தமாகக் கிடைக்குமே! சுசீலாவுக்கு ஒரு பட்டுப் புடவை, நமக்கு இரண்டு வேஷ்டி, கண்ணனுக்குப் பட்டாசுக் கட்டு எல்லாம் வாங்கலாமே! காரியாலயத்துக்குப் போக வரக் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும். அதனால் என்ன! கடற்கரைச் சாலையோடு நடந்து போனால் அரை மணியில் போய் விடலாம். வீட்டை விட்டுக் கொஞ்ச நேரம் முன்னதாகக் கிளம்ப வேண்டி இருக்கும், அவ்வளவுதானே!"

சைக்கிளை விற்கலாம் என்ற தீர்மானம் ஏற்பட்டவுடன் சுந்தரத்துக்குத் தன் காரியாலய நண்பன் ராகவனின் நினைவுதான் வந்தது. ஏற்கெனவே சில சமயங்களில் அவன் தனக்கு ஒரு சைக்கிள் வேண்டும் என்று சொல்லி இருந்தான்.

காரியாலயத்தை அடைந்ததும் முதல் காரியமாகச் சுந்தரம் ராகவனிடம் தன் எண்ணத்தைச் சொன்னான். அவனுக்குப் பூரண திருப்தி. விலை நிர்ணயமானவுடன் பணத்தை எண்ணிச் சுந்தரத்தினிடம் கொடுத்து விட்டான் அவன்.

சுந்தரம், அன்றைக்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே வீட்டுக்குப் புறப்பட்டான். சுசீலாவுக்கு எழுபது ரூபாயில் ஒரு பட்டுப் புடவை, தனக்கு ஒரு ஜதை வேஷ்டி, சின்னக் கண்ணனுக்குக் கால் சட்டை, மேல் சட்டை, பட்டாசுகள் சகிதம் வீட்டுக்குத் திரும்பினான். அவன் மனம் இப்போது நிறைந்து இருந்தது.

* * *

கண்ணன் ஒத்தை வெடி ஒன்றை வெடித்துக் கொண்டிருந்தான். சுந்தரம் நுழைந்த சமயம் பார்த்து அது வெடித்து வைத்தது. இதற்குள் தந்தையைக் கண்டுவிட்ட கண்ணன் துள்ளினான். குழந்தைகளுக்கே இயல்பான குதூகலத்தோடு, "அப்பா! நம் வீட்டுக்கும் தீபாவளி வந்தாயிற்று. பட்டாசு, துணி, வேஷ்டி எல்லாம் அம்மா வாங்கி விட்டாங்க. மத்தியானமே பிடித்துப் பட்சணம் பண்ணிக் கொண்டிருக்காங்க" என்றான்.

சுந்தரம் தனக்கு ஏற்பட்ட திகைப்பினின்றும் சமாளித்துக் கொள்வதற்குள் சுசீலா வாசலுக்கு வந்தாள். ஊதி ஊதிச் சிவந்த கண்களும், எண்ணெய்ப்படிந்த காரணத்தால் பளபளக்கும் மேனியும் தன் போக்கில் விடப்பட்டிருந்த கூந்தலும் அவள் அழகுக்கு அழகு செய்தன. சுந்தரம் அவளைக் கண் கொட்டாமல் பார்த்தான்.

இதைத் தொடர்ந்து இரண்டொரு நிமிடங்கள் மௌனம் நிலவிற்று......சுசீலா இந்த மௌனத்தைக் கலைத்தாள். "உங்கள் கையில் இருப்பதெல்லாம் என்ன மூட்டைகள்! நீங்கள் நடந்தா வந்தீர்கள்! சைக்கிள் எங்கே......!"

அவள் கேள்விக்குச் சுந்தரம் பதில் பேசவில்லை. "உள்ளே போவோமே......!" என்றான்.

சுசீலா சுந்தரத்தின் கைப் பொட்டலங்களைச் சுற்றிப் பார்வையை ஓட்டினாள். "இதெல்லாம் என்ன!" என்று கேட்டாள்.

"தீபாவளி......! அது கிடக்கட்டும். நீ அடுப்படியில் என்ன செய்கிறாய்! கண்ணனுக்குப் பட்டாசு ஏது! துணி வாங்கினாயாமே!"

"எல்லாக் கேள்விகளுக்கும் ஒரே பதிலாகச் சொல்லி விடட்டுமா! எதிர் வீட்டுக் கமலா பணம் கொடுத்தாள்......வாங்கினேன்!"

"நேற்று வரை காலணா கொடுக்க முன் வராதவள் இன்றைக்கு இவ்வளவுக்கும் ஏன் பணம் தந்தாள்! நீ அவளுக்கு அப்படி என்னத்தைக் கொடுத்தாய் சொல்லு......"

"என்னுடைய தோட்டை......!"

சுந்தரம் இப்போதுதான் அவள் காதைக் கவனித்தான். பளீரென்று ஒளி வீசும் புஷ்பராகத் தோட்டுக்குப் பதில் சிவப்புத் தோடு ஒன்று பெயருக்குத் தொங்கிக் கொண்டிருந்தது. "சுசீலா! விவரமாகச் சொல்லு. இதற்கெல்லாம் என்ன அர்த்தம்! ஏன் இப்படிச் செய்தாய்!" என்று கேட்டான்.

"நிரம்பப் பணம் படைத்தவர்களுக்குப் பல சமயங்களில் சாதாரணப் பண்டங்களில் நாட்டம் ஏற்படுவது உண்டல்லவா! வைரங்களாலேயே இழைந்து கிடக்கும் கமலாவுக்கு ஏனோ என் தோட்டில் ஆசை. ரொம்ப நாட்களாகவே அதற்காக முந்நூறு ரூபாய் தருவதாகச் சொல்லித் தொண தொணத்தாள். நேற்று ராத்திரி உங்கள் மனம் தவித்த தவிப்பை உணர்ந்தது முதல் எனக்கு நிலை கொள்ளவில்லை. மத்தியானம் அவளிடம் தோட்டைக் கொடுத்துப் பணத்தை வாங்கிக் கொண்டேன்."

சுந்தரம் மெள்ளச் சிரித்தான். "கதைகளில் மட்டுமே நடக்கக் கூடியதெல்லாம் நம் வீட்டிலேயும் நடக்கிறதே......!"

சுசீலா தான் வாங்கினவற்றை எல்லாம் காட்டினாள். அவளுக்கு ஒரு நூல் புடவை; அவனுக்கு வேஷ்டி. குழந்தைக்கு நல்ல சட்டை......

***

மூன்று மணிக்கெல்லாம் 'கிணு கிணு' என்ற அலார மணி ஓசை அவர்களை எழுப்பியது. சுசீலா அடுப்பை மூட்டி எண்ணெயைக் காய்ச்சினாள். கூடத்துக்கு வந்தாள். குத்து விளக்கேற்றிக் கோடித் துணிக்குக் கும்பிடும் போட்டு விட்டுத் தலையில் எண்ணெய் வைத்துக் கொண்ட சுந்தரத்துக்கு, குழந்தை கண்ணனைக் கண்டதும் ஆனந்தமாகவே இருந்தது.

"சைக்கிளும், தோடும் போனாலும் தீபாவளி தான் எத்தனை குதூகலமாகக் கழிகிறது!"

ஸ்நானம் எல்லாம் முடிந்து வாசலுக்கு வந்தான் சுந்தரம். பெட்டி கொள்ளாமல் இருந்த பட்டாசை வெடிக்கத் தெரியாமல் திணறிய கண்ணனோடு சேர்ந்து அவனும் வாசல் ஆளோடியில் உட்கார்ந்து கொண்டான்.

பட்டாசு எல்லாம் வெடித்து முடிவதற்குள் பொழுது 'பொல' 'பொல' வென்று விடிந்தது.

முதல் நாளைப் போல அல்லாமல் நல்ல காப்பியாகக் கலந்து கொடுத்தாள் சுசீலா. "நீ காப்பி குடிக்கப் போகிறாயா! இல்லை தண்ணீர்தானா...!" என்று கேட்டான் கேலியாக.

சுசீலா 'கலகல' வென்று சிரித்தாள்.

***

வாசலில் 'கண கண' வென்று சைக்கிள் மணி அடித்த சத்தம் கேட்டது. சுந்தரம் விழுந்தடித்துக் கொண்டு ஓடினான்.

"ராகவன்!"

"........."

"என்னடா தீபாவளி ரொம்ப பலமோ! ஆள் உன்னையே அமுங்கி விட்டாயே! பட்சணம் ஏதாவது கிடைக்குமா!"

சுந்தரம் அவன் தோளில் கையைப் போட்டுக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றான். அரை நொடியில் பட்சணம் நிரம்பிய தட்டு வந்தது.



"இந்த ஆயிர ரூபாய் மோதிரத்தைக் கடைக்காரர் விரலில் போட்டார். அப்புறம் அதைக் கழட்டவே முடியவில்லை. என்ன பண்ணுகிறது? அப்படியே வந்து விட்டேன்!"

'மைசூர் பாகை'க் கடித்துக் கொண்டே ராகவன் மெள்ளச் சொன்னான். "டேய். உன் சைக்கிளை நீயே எடுத்துக் கொண்டு விடு. என் மாமனார் எனக்கு ஒரு புது சைக்கிளை வாங்கி அனுப்பி விட்டார். உனக்கும் உன் சைக்கிளுக்கும் நல்ல ராசி போல இருக்கிறது."

சுந்தரத்தின் முகம் தொங்கிப் போயிற்று.

ராகவன் அவன் முதுகில் ஓங்கி ஒரு அறை கொடுத்தான். "இடிந்து போகாதடா, மண்டு. பணத்தைத் திருப்பித் தர வேண்டுமே, செலவழிந்து விட்டதே என்று அங்கலாய்க்காதே! மாதம் கொஞ்சமாய்க் கொடு போதும்!"

சுந்தரத்துக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

சுமார் அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு ராகவன் வீட்டுக்குப் புறப்பட்டான், சைக்கிளைச் சுந்தரத்திடமே விட்டு விட்டு.

சுந்தரத்துக்குப் புதிய தெம்பு ஒன்று கிடைத்தது. ஆர்வத்தோடு சமையலறையை அடைந்தான் அவன். ஆனால், அங்கே சுசீலாவைக் காணவில்லை. அவசர அவசரமாகக் கொல்லைப்புறம் போனான். அங்கே அவள் எதிர் வீட்டுக் கமலாவோடு பேசிக் கொண்டிருந்தாள்.

"என்ன கமலா இது! இப்படிச் சொன்னால் எப்படி! நீ கொடுத்ததில் முக்கால்வாசியைச் செலவழித்து விட்டேனே! அவர் வேறு சைக்கிளை விற்று விட்டுப் பட்டுப் புடவையை வாங்கிக் கொண்டு வந்து நிற்கிறார்" என்றாள் சுசீலா.

கமலா குறுக்கிட்டாள். "இல்லை சுசீலா! பார்க்கப் போனால் எனக்கு இந்தத் தோட்டை விடுவதில் மனசே இல்லை. வைரத்தோடுகளில் இல்லாத ஒரு மோகத்தை இதில் எனக்கு ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது என் ஆசை. ஆனால் நான் என்ன செய்ய! இயல்பாகவே பிடிவாத குணம் படைத்த அவர், பழைய நகையை வாங்கவே கூடாது, வாங்கினால் தன் கௌரவத்துக்கு இழுக்கு, முதலில் அதைக் கொண்டு போய்க் கொடு என்று கூத்தடிக்கிறாரே, அம்மா!" என்றாள் அழமாட்டாக் குறையாக.

"........."

"நீ ஒன்று செய்யேன், பேசாமல் இதை வாங்கிக் கொள். பணத்தை மாசம் கொஞ்சமாகத் தந்தால் போதும். நான் என்னுடைய சொந்தப் பணத்திலிருந்து போட்டு அவரைச் சமாதானப் படுத்திக் கொள்கிறேன்!"

சுசீலா பதில் பேசாமல் அதை வாங்கிக் கொண்டாள். கமலாவை வழியனுப்பி விட்டு அவள் திரும்பிய போது சுந்தரம் ஒரு மாதிரி நமட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு இடுப்பில் கை வைத்தவண்ணம் அங்கே கம்பீரமாய் நின்று கொண்டிருந்ததைக் கண்டாள்.

***

சுந்தரத்துக்கும் சுசீலாவுக்கும் அழுவதா சிரிப்பதா என்றே விளங்கவில்லை. பணமோ ஒட்டிக்கு ரெட்டியாக இரண்டு வழிகளிலும் செலவழிந்து விட்டது. எதைக் கொண்டு இந்தப் பணத்தைத் தேட முடிந்ததோ அந்தப் பண்டங்கள் திரும்ப வந்து விட்டன. இப்போது சுமையாக ஏறிப் போய் விட்ட கடனை எந்த வகையில் அடைப்பது! மாதந்தோறும் சாப்பாட்டுக்கே பற்றாமல் இருக்கும் நிலையில் கடனுக்கென எப்படி ஒதுக்கி வைக்க முடியும்! என்று திகைத்தான் சுந்தரம்.

மூன்றாவது தடவையாக வாசற் கதவை யாரோ தடதடவென்று தட்டினர். சுந்தரமும் சுசீலாவும் பாதி எரிச்சலும், பாதி திகைப்பும் நிரம்பிய உள்ளத்தோடு வாசலுக்கு வந்தனர்.

காரியாலய வேலைக்காரப் பையன் தங்கவேலு நின்று கொண்டிருந்தான்.

"சார்! முதலில் எனக்கென்று ஐந்து ரூபாய் இனாம் கொடுங்கள் சார். தீபாவளியும் அதுவுமாக வீடு தேடி வந்தவனை வெறும் கையோடு அனுப்பக் கூடாது" என்றான்.

சுந்தரம் பொறுமை இழந்து துடித்தான். "நல்ல சமயம் பார்த்தான், இவன் இனாம் கேட்க! அதிலும் ஐந்து ரூபாய் வேண்டுமாமே..." என்று முணுமுணுத்தான் அவன்.

ஆனால், தங்கவேலு வெறும் கையோடு வரவில்லை. எதிர்பாராத செய்தியோடுதான் வந்திருக்கிறான் என்பதை இரண்டொரு நிமிடங்களில் உணர்ந்தான் அவன்.

சாதாரணமாக எல்லா விடுமுறை நாட்களையும் போலவே தங்கவேலு வந்த தபால்களை எல்லாம் எடுத்துக் கொண்டு மானேஜர் வீட்டுக்குக் கொண்டு போனானும். அந்தக் கடுதாசியில் இருந்த ஒரு மகிழ்ச்சிகரமான சேதியைத் தெரிந்து கொண்டு வந்திருக்கிறான். "பம்பாய் ஆபீஸிலே இருந்து 'உத்தரவு' வந்திருக்கு, சார். நாளைக்கு ஆபீஸுக்குப் போனதும் முதல் காரியமா கையெழுத்துப் போட்டு மூணுமாசச் சம்பளம் போனஸாக வாங்க வேண்டியது......! இந்த சந்தோஷ சமாசாரத்தைச் சொன்னதற்காக எனக்கு நீங்கள் ஐந்து ரூபாய் தரக் கூடாதா!" என்று கேட்டான் அவன்.

கொடுக்கும் தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும் என்பார்களே, அந்த வசனம் சுசீலாவின் நினைவுக்கு வந்தது. அவள் மெல்ல முணுமுணுத்தாள்: "இன்பமும் துன்பமும் ரயில் வண்டித் தொடரைப் போல......அது வந்தால் தனியாக வருவதில்லை. ஒன்றன் பின் ஒன்றாக இடு இடென்று தொடர்ந்து வருகிறது."

# தெம்பூட்டுகிறது, மணமூட்டுகிறது!

மலரின் பனித்துளிகள் போல புதுமையையும், ரம்மிய மணத்தையும் உங்கள் மேனியில் பெய்கிறது எக்லா டால்க். குளித்தபின், உடையணியுமுன் உடம்பில் எக்லா டால்கம் பவுடரைப் பூசுங்கள்.



வெப்ப நாளிலும் குளுமை, இதம் அளிப்பது எக்லா. அது வியர்வையை உறிஞ்சும். மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட.

கால்கேட்

## எக்லா

டால்க்பவுடர்




**இந்தியா விரும்பும் நறுமண டால்க்**

EC/G/I

# சக்கரவர்த்தித் திருமகன்



## 59. தாரையின் துயரம்

ராஜாஜி

வில்லேந்திய ஒருவனால் வாலி கொன்று வீழ்த்தப் பட்டான் என்கிற சமாசாரம் கிஷ்கிந்தையிலுள்ள வானரர்களுக்குத் தெரிந்ததும் அவர்கள் இங்குமங்கும் பயந்து ஓடினதைப் பார்த்தாள் தாரை.

“யுத்தம் என்றால் எப்போதும் அரசன் வாலிக்கும் முன்னதாக இதுவரையில் புறப்பட்டுப் போய் வந்தீர்களே! ஏன் இப்போது இப்படி பயந்து ஓடுகிறீர்கள்? உங்களுக்கு ஒன்றும் ஆபத்து இல்லை. சுக்ரீவனை அரசனாக்குவதற்காக வாலியைக் கொன்றான் ராமன். அவ்வளவே. நீங்கள் அனாவசியமாகப் பயந்து ஓடாதீர்கள்! உங்களுக்கு ஒரு ஆபத்தும் இல்லை” என்று அரசிக்குரிய முறையில் தன் துக்கத்தைத் தள்ளி விட்டு வானரர்களுக்குத் தைரியம் ஊட்டினாள்.

* * *

பிறகு தன் புருஷன் இறந்து கிடக்கும் இடத்துக்குப் போகப் புறப்பட்டாள். வானரர்கள் தடுத்தார்கள்.

“அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வோம். கோட்டையைப் பத்திரப்படுத்துவோம். நம்முடைய பகைவன் சுக்ரீவனும் அவனுடைய துணைவர்களும் வராமல் ஊரைக் காப்போம்!” என்று தாரையைப் போக விடாமல் தடுக்கப் பார்த்தார்கள்.

அவளோ, “என் வீர புருஷன் இறந்த பிறகு எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை!” என்று சொல்லி நிர்ப்பயமாக ராமலக்ஷ்மணர்கள் இருந்த இடத்துக்கு நேராகச் சென்றாள்.

* * *

தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும் துக்கத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. கதறி அழுதாள்.

“ஹா என் வீரனே! எத்தனை சூரர்களை நீ வீழ்த்தினாய், இப்போது மாண்டு கிடக்கிறாயே! என்னை விட்டுப் போய் விட்டாயே!” என்று குத்து பட்டுக் கிடந்த வாலியை ஆலிங்கனம் செய்து கொண்டு அழுதாள்.

வாலியின் குமாரன் அங்கதனும் அங்கே வந்து சேர்ந்தான். இந்தக் காட்சியைக் கண்டபின் சுக்ரீவன் தன் பொருட்டு இவ்வளவு துயரம் ஏற்பட்டதே என்று துக்கப்பட ஆரம்பித்தான்.

இது வேஷமல்ல. இவ்வாறே உலகத்தில் துவேஷமும் பழி தீர்க்கும் காரியங்களும் ஆசைகளும் முடிவில் ஒரு நற்பயனும் சந்தோஷமுமின்றித் துக்கத்தில் முடிகின்றன. நேரில் கண்டு அனுபவித்த பின்னரே துவேஷத்தின் அற்பத்தனம் விளக்கமாகிறது. அறிவு அடைகிறோம். அதுவரையில் மோகத்தில் மூழ்கி உண்மையைக் காண்பதில்லை.

* * *

“அன்புக்குரிய அங்கதனை அநாதையாக விட்டு விட்டு என்னையும் திக்கின்றிவிட்டு விட்டுத் திரும்பி வராத பிரயாணத்தில் போய் விட்டாயே! என் வீரனே!” என்று தாரை அழுது புரண்டு அங்கேயே உயிர் நீப்பேன் என்றாள்.

ஹநுமான் ஆறுதல் சொல்லிப் பார்த்தான். “இறந்தவர்கள் தங்களுக்குரிய மேல் உலகங்களை அடைவார்கள். வாலியைப் பற்றி துக்கப்பட வேண்டாம். அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் ஆகும். அதைக் கண்டு மகிழ்

வோம். இப்போது வாலிக்குச் செய்ய வேண்டிய உத்தரகிரியைகளை நடத்து வதில் புத்தி செலுத்துவோம். அங்கத னைச் சரியாகப் பாதுகாப்பது நம்முடைய கடமையாகும்'' என்றெல்லாம் சொல் லிப் பார்த்தான்.

"எனக்கு ஒன்றும் வேண்டியிருக்க வில்லை. உத்தரகிரியை செய்வதும் அங் கதனை ரக்ஷிப்பதும் எல்லாம் சுக்ரீவன் பார்த்துக்கொள்வான். என்னால் என்ன செய்ய முடியும்? ஆயிரம் அங்கதர்கள் இருந்தாலும் அது என் புருஷனுக்குச் சமானம் ஆகுமா? என் வீரனுடன் நானும் யமாலயம் செல்வேன். அதுதான் எனக்கு சந்தோஷம்'' என்றாள் தாரை.

நிலைவிழுந்து மரணத் தறுவாயி லிருந்த வாலி அச்சமயம் கண்ணைத் திறந்து சுக்ரீவனைப் பார்த்து மெது வாகச் சில வார்த்தைகள் பேசினான்:

"தம்பி! நாம் இருவரும் ஒன்றாக இருந்து சந்தோஷமாக ராஜ்யத்தை ஆண்டு அனுபவித்திருக்கலாம். அதற் குக் கொடுத்து வைத்திருக்கவில்லை. என் னுடைய தவறே அதிகம். அதைப் பற்றி இப்போது பேசிப் பயனில்லை. நீ இனி இந்த ராஜ்யத்தை ஆள்வாயாக. எனக் கும் தாரைக்கும் உயிரை விடப் பிரிய மான குமாரன் அங்கதனை உன்னிடம் ஒப்புவித்தேன். அவன் உன்னைப் போன்ற வீரன். எனக்குப் பதிலாக நீயே அவனுக்குத் தந்தையாக இருந்து அவனை அன்புடன் பார்த்து வா. இதுதான் உன்னை நான் கேட்டுக் கொள்ளுவது.

"என் மனைவி தாரை மிகுந்த அறிவாளி. சூக்ஷ்மமான விஷயங்களை அறியும் சக்தி பெற்றவள். இவ்விதம் நடக்கும் என்று அவள் ஒன்றைக் கூறினாளானால் அது அப்படியே நிகழும், சந்தேக மில்லை. அவள் யோசனையை எந்த விஷயத்தி லும் தட்டாதே.

"இதோ இந்திரன் எனக்குத் தந்த மாலையை என் கையிலிருந்து பெற்றுக் கொண்டு அதன் சக்தியை நீ பெற்று விளங்குவாயாக. என் வாழ்க்கை முடிந் தது. உன் மேல் இப்போது எனக்குக் கோபம் தணிந்து விட்டது. உனக்கு மங்களம் ஆகுக!'' என்று தம்பி சுக்ரீ வனை மிகப் பெருந்தன்மையோடு ஆசிர் வதித்தான்.

"அங்கதா, அரசனாகிய சுக்ரீவனிடத் தில் சரியாக நடந்து கொள். பொறுமை யுடன் நடந்து கொள். அன்போடு நடந்துகொள்'' என்று குமாரனுக்கும் சொல்ல வேண்டியதைச் சொன்னான்.

காட்டு விருக்ஷம் வெட்டப்பட்டுக் கீழே விழுந்தால் அதைத் தழுவி ஏறிய இளங்கொடியும் அதை ஒட்டிக் கிடப்பது போல் வாலியைக் கட்டித் தழுவிக் கொண்டு கிடந்தாள் மலர்பூத்த கொடி யைப் போன்ற தாரை.

நீலன் வாலியின் மார்பில் குத்தி நின்ற பாணத்தை மெள்ள எடுத்து அகற்றினான். உடனே காயத்திலிருந்து மலையருவி போல் ரத்தம் பொங்கி எங்கும் பரவிற்று. வாலியின் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. "ஐயோ!'' என்று தாரை அழுதாள்.

"அங்கதா! உன் தகப்பனைக் கடைசித் தடவையாக வணங்குவாய்'' ,என்றாள்.

"உங்களுடைய பிரிய மகன் வணங்கி நிற்கிறானே! அவனுக்கு ஒன்றும் சொல்ல மாட்டீர்களா? நான் விதவையானேன். மகனும் திக்கற்றுப் போனான்!'' என்று இதயம் உடைந்த தாரை பிரலாபித்தாள்.

* * *

இதை யெல்லாம் கண்டு சுக்ரீவ னுடைய உள்ளம் பதைத்தது. தன் குற்றத்தை இப்போது நன்றாக அறிந் தான். 'எனக்குள் மறைந்து நின்று உள்ளே வேலை செய்து வந்த ஆசை என் புத்தியைக் கெடுத்து விட்டபடி யால் அல்லவோ நன்றாக ஆலோசியாமல் வாலி புகுந்த குகையின் வாயிலை மூடி விட்டு அண்ணனுடைய சம்பத்தை அபகரித்துக் கொண்டு ஆனந்தமாக அனுபவித்தேன்!' என்று தனக்குள் சிந்திக்கலானான்.

நம்மையும் அறியாமல் உள்ளே இருந்து வரும் ஆசை விவேகத்தைக் கெடுத்து விடுகிறது. தவறான முடிவு களுக்கு வந்து விடுகிறோம். பாவங்களில் சிக்கிக் கொள்கிறோம். சுக்ரீவன் இப் போது கண்டான். தன் விவேகத்தைக் கெடுத்தது உள்ளே மறைந்து நின்று வேலை செய்த தன்னுடைய ஆசை என்பதைக் கண்டான்.

காமம் என்கிற பொதுப் பெயர் வட மொழியில் எல்லா வகை ஆசைகளையும் குறிக்கும். காமமே மனிதனுக்கு உட் பகை. அந்த சத்துருவை ஜயிக்க வேண் டும். இதுவே கீதையில் மூன்றாவது அத்தியாயம் கடைசி ஏழு சுலோகங் களில் செய்யப்படும் உபதேசம். ஜஹி சத்ரும் காமரூபம் துராஸதம் என்று முடிக்கிறான் கண்ணபிரான்.

சுக்ரீவனைக் கெடுத்தது ஆசை. வாலி யின் விவேகத்தைக் கெடுத்தது கோபம்.

சுக்ரீவன் குகையின் வாயிலை மூடி விட்டதைக் கண்டதும் ராஜ்யத்தை அபகரிப்பதற்காகவே சுக்ரீவன் தன் கூட வந்து இப்படிச் செய்தான் என்று வாலி எண்ணி விட்டான். அரக்கனுக்குத் தன்னைப் பலி கொடுத்து விட்டு, தன்னுடைய பதவியை அபகரித்துக் கொள்ளப் பார்த்தானே என்று மனத்தில் சுக்ரீவனைப் பற்றி முடிவு செய்து கொண்டு பொங்கிய கடுங் கோபத்துக்கு இரையானான். உடன் பிறந்த தம்பியை அவமானப்படுத்தி, ஊரை விட்டுத் துரத்தி விட்டு சினத்தை வளர்த்துக் கொண்டே போனான். கோபம்—'மன்யு' என்று கோபத்தின் மூலத்திற்கு வடமொழியில் பெயர் — இது வாலியை ஏமாற்றி அவனைப் பாவத்தில் தள்ளிற்று.

'காமம்'—'மன்யு' இவை இரண்டும் எல்லாக் குற்றங்களுக்கும் காரணம். இவற்றை உள்ளம் என்கிற கோட்டைக்குள் விடாமல் மனத்தைக் காப்பாற்றினாலேதான் தப்புவோம்.

* * *

சுக்ரீவன் பிரலாபிக்கலானான்: "நான் எவ்வளவு பெரிய குற்றம் செய்தாலும் என்னைக் கொல்லாமல் 'ஓடிப்போ உயிர் தப்பிப் பிழை!' என்று சொல்லி அண்ணன் என்னைத் துரத்தினான், அவ்வளவே! நானோ அவனைக் கொல்லச் சதி செய்து அவனைக் கொன்றும் விட்டேனே! என்னைப் போன்ற பாதகன் உலகத்தில் இல்லை. சாகும் தறுவாயில் 'ராஜ்யத்தை நீ எடுத்துக் கொள்' என்று சொல்லி எனக்குத் தன்னுடைய ராஜ்யத்தையும் இந்திரன் தந்த சக்தி மாலையையும் தன் கையால் எனக்குத் தந்தானே! இவனல்லவோ மகான்! நீசனாகிய நான் உயிர் வைத்துக் கொண்டு பிழைப்பதில் என்ன பயன்? உலகத்துக்கு ஒரு சூரனை இருந்த என் அண்ணனைக் கொன்றேனே!" என்று தன் பெருங் குற்றத்தை உணர்ந்து அழுதான்.

* * *

வருஷத்துக்கு ஒரு முறையாவது 'காமோகார்ஷீத்', 'மன்யுரகார்ஷீத்'—சந்தியைப் பிரித்தால்—காம: அகார்ஷீத், மன்யு: அகார்ஷீத்—அதாவது 'ஆசை என்னை ஏமாற்றி பாபம் செய்யச் செய்தது; கோபம் என்னை ஏமாற்றி பாபம் செய்யச் செய்தது' என்று வருந்தி அடக்கத்துடன் பல தடவை சொல்லி உள்ளத்தைச் சுத்தப் படுத்திக் கொள்வது வைதீகர்களின் ஜப முறை. இதை யாவருமே அனுசரித்தல் வேண்டும். ஜபம் செய்து உள்ளத்தை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். **காமோகார்ஷீத். மன்யுரகார்ஷீத் நாராயணாயநம:**

* * *

பிரலாபித்துக் கொண்டிருந்த தாரையினிடம் ராமன் மெள்ளச் சென்றான். பயந்தே சென்றான்.

தாரையானவள் தன் முகத்தில் கோபக் குறிகள் ஏதும் காட்டாமல், "வீரனே, எந்த பாணத்தால் என் புருஷனைக் கொன்றாயோ அதே பாணத்தைக் கொண்டு என்னையும் கொன்று என் பர்த்தாவை நான் சேரும்படி செய்வாயாக. என்னை விட்டு அவர் சுவர்க்கத்திலும் சந்தோஷப்படமாட்டார். பெண்ணைக் கொன்ற பாபம் உனக்கு உண்டாகும் என்று பயப்படாதே! புருஷனையும் மனைவியையும் ஒன்று சேர்த்த புண்ணியமே உனதாகும். என் புருஷனை அதர்ம முறையில் கொன்றதற்கு இதுவே உனக்குப் பிராயச் சித்தமாகும். வாலி இறந்த பிறகு நான் பிழைத்திருக்க முடியாது!" என்று மகா வீரனுடைய பட்டமகிஷிக்கு உரித்தான மொழிகளைப் பேசிப் புலம்பினாள்.

* * *

இவ்விடத்தில் தாரை ராமனுடைய அவதார உண்மையை அறிந்து ராமனை மகா விஷ்ணுவாகவே கண்டாள் என்று வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது.

லக்ஷ்மணன் தாயாகிய சுமித்திரையைப் பற்றி வழங்கி வருவதுபோல், வாலியின் மனைவி தாரையும் மகா அறிவாளி, ஞானி என்பது பரம்பரையாக வந்த அபிப்பிராயம். ஆனபடியால் அவள் தன் புருஷனை அதர்ம முறையில் கொன்

பாரத நாட்டில் பிரிட்டிஷார் அனுஷ்டித்த கொள்கைகளில் மிகக் கொரமானது குடிசைத் தொழில்களைக் கொன்றதுதான். இந்தியா ஏழை நாடானதற்கு அதுதான் முக்கிய காரணம். இந்தியா மறுபடியும் செல்வம் கொழிக்கும் நாடாக மாற வேண்டுமாயின், கைத்தறி நெசவுத் தொழில் போன்ற குடிசைத் தொழில்கள் மீண்டும் புத்துயிர் பெற வேண்டும். — ஜவாஹர்லால் நேரு

சுத்தமான முழு நறுமணமுள்ள காப்பி

நீங்கள் இலகுவாக வாங்கக் கூடிய விலையில்!






Stanes

ஸ்டேன்ஸ்
சிகப்பு லேபிள்
சுத்தமான காப்பி




சுத்தமான காப்பியை வாங்குவதே நல்லது. அது உங்களுக்கு சரியான நறுமணத்தையும், தரத்தையும், அதிக அளவு காப்பியையும் அளிக்கிறது!
ஆயிரக் கணக்கான ஜனங்கள் ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியையே வாங்குகிறார்கள். ஏனெனில் அதன் நறுமணம் கெடாமல் புத்தம் புதியதாக இருக்கிறது. அது காற்றுப் புகாமல் பாக்செய்யப்பட்டு, ½ பவுண்ட், 1 பவுண்ட், 3 பவுண்ட், 7 பவுண்ட் டின்களில் கிடைக்கிறது.

எல்லோரும்
வாங்கக் கூடிய
நல்ல காப்பி!

STC 4058

தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட்,
கோயம்புத்தூர், தென் இந்தியா

வேலூருக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மிஸ்டர் ஜி. எஸ். அனந்தராமன், 35, கமிஸரி பஜார்

காக்கிநாடா ஏஜண்டு:
மிஸ்டர் கர்ணம் ஹனுமந்த ராவ், ஈஸ்வர நிவாஸ், திருமல ராவ் தெரு, காந்திநகர்

# சமுதாயத்துடன் *நீங்களும் சுபிட்சமடைக!*

உங்கள் சேமிப்புகளை இந்திய அரசாங்கத்தின்

## *சிறு சேமிப்புத்திட்டத்தில்* முதலீடு செய்க

*அதன் மூலம்*
**இந்தியாவின் திட்டங்களுக்கும் உதவிபுரிக**

- ★ சமுதாய அபிவிருத்தித்திட்டம்
- ★ பெரிய நதிகளில் நீர்த்தேக்கத்திட்டங்கள்
- ★ சமூக சுபிட்சத்திட்டங்கள்
- ★ ரயில் மற்றும் ரஸ்தா அபிவிருத்தி

உங்கள் பணத்தை இவ்வசீகரமான
உத்தரவாதம்பெற்ற செக்யூரிடிகளில் ஏதாவதொன்றில் போடுங்கள்

| | |
|---|---|
| 12 வருட நேஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகள் | கெடு பூர்த்தியாகும்போது ஆண்டு 1-க்கு 4.16 சத விகிதம் வட்டி பெறும். ரூ 5 முதல் ரூ. 5,000 வரை மதிப்புகளில் கிடைக்கும், தனி நபர் ரூ. 25,000 வரை வாங்கலாம். |
| 10 வருட டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட் சர்டிபிகேட்டுகள் | வருடாவருடம் 3½ சத விகித வட்டி பெறலாம். ரூ. 100ன் மடங்குகளாக ரூ. 25,000 வரை கிடைக்கும். தனி நபர் வாங்கக் கூடியது ரூ. 25,000 வரை. |
| 10 வருட நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகள் | கெடு பூர்த்தியாகும்போது ஆண்டு 1-க்கு 4½ சத விகிதம் வட்டி கிடைக்கும். ரூ. 25, ரூ. 50, ரூ. 100 & ரூ. 500 மதிப்புகளில் கிடைக்கும். தனி நபர் வாங்கக்கூடிய அளவு ரூ. 1000 வரை. |
| போஸ்டாபீஸ் ஸேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் | டிபாசிட்களின் பேரில் ரூ. 10,000 வரையுள்ள தொகைகளுக்கு 2 சத விகித வட்டியும், அதற்கு மேல் 15,000 வரையுள்ள தொகைக்கு 1½ சத விகித வட்டியுமுண்டு. |

**15 வருட ஆன்னியுடி சர்டிபிகேட்டுகள்**

| | |
|---|---|
| வெளியீடு விலைகள் ரூ. 3,500, ரூ. 7,000, ரூ. 14,000 & ரூ. 28,000. தனிநபர் உயர்ந்த பக்ஷம் ரூ. 28,000 அளவிற்கு வாங்கி வைத்துக் கொள்ளலாம். | அசல் தொகை 3½ சதவிகித தொடர்வட்டி சேர்த்து சமமான மாதாந்தரத் தவணைகளில் 15 வருட காலத்தில் திருப்பியளிக்கப்படுகிறது. |

*உங்களுக்கு உத்தரவாதமாக ஒரு*
சிறந்த லாபம் வருமானவரி கழிவின்றி கிடைக்கிறது.

மேலும் விவரங்கள் மற்றும்/அல்லது இம்முதலீடுகளைக் குறித்த விதிகள் அறிய விரும்புவோர் [illegible] [illegible]

# இந்தியாவின் எதிர்காலத்தில் முதலீடு செய்க.

AC 6501M

றவன் மேல் கோபமும் வெறுப்பும் முதலில் கொண்டிருந்தாலும் நேரில் தரிசனம் அடைந்ததும் ராமனுடைய உண்மைச் சொரூபத்தைக் கண்டாள் என்று சொல்லப்படுகிறது.

வெறுங் கதையாகப் படித்தால் இது ரஸமாகத் தோன்றாது. பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்களுக்கு இது அசம்பாவிதமாகத் தோன்றாது. துளசிதாஸருடைய ராமாயணத்தில் இந்தச் சந்தர்ப்பத்தில் பரமசிவன் பார்வதிக்குச் சொல்வதாகப் பாடுகிறார் :

"உமையே, பார்த்தாயா? சுவாமியாகிய ராமன் எல்லாரையும் எப்படி பொம்மையாட்டம் ஆடச் செய்கிறான் என்று."

பக்திக் கண்களால் பார்த்தால்தான் பழைய புராணங்களின் சாரம் நன்றாகக் காண முடியும்.

சாதாரணமாக விமரிசனம் செய்தாலும் தாரை மிக சாமர்த்தியசாலி, ராஜ நீதியில் தேர்ச்சி பெற்றவள். முன்னால் நடக்கப் போவதை ஊகித்து அறியும் சக்தி அவளுக்கிருந்ததை வாலியே சொல்லியிருக்கிறான். நடந்தது நடந்து விட்டது ; சுக்ரீவன் தன்னுடைய சாமர்த்தியத்தாலும், தெய்வச் செயலாலும் ராமனுடைய துணையைச் சம்பாதித்து விட்டான் : வாலி இறந்து விட்டான் : இனி அங்கதனுடைய க்ஷேமத்தைத் தானே பார்த்துக் கொள்ள வேண்டும்? அங்கதன் சுக்ரீவனோடு விரோதம் செய்து கொண்டு சண்டை பிடிக்க முடியுமா? சுக்ரீவனுக்கு வில்லேந்திய ராம லக்ஷ்மணர்கள் சகாயமாக ஏற்பட்டு விட்டார்கள் : ஆனபடியால் நீதி சாஸ்திரப்படி இந்த சமயத்தில் சாமோபாயமே மேல் என்பதை தாரை கண்டாள். ஆனபடியினால் ராமனிடம் தன் கோபத்தை மறைத்துப் பொறுமையுடன் நடந்து கொண்டாள். அங்கதனுடைய வாழ்க்கை பாழாகப் போகாமற்படி காக்கும் வழியைத் தேடினாள்.

**வா**லிக்கு உத்தரகிரியை விமரிசையாக நடத்தப்பட்டு முடிந்தது. மங்கள ஸ்நானம் செய்வித்து, சுக்ரீவனுக்கும் அங்கதனுக்கும் முறையே ராஜ்யாபிஷேகமும் யுவராஜ்ய பட்டாபிஷேகமும் செய்யப்பட்டன.

* * *

**ம**ழைக்காலம் ஆரம்பித்தது. சுக்ரீவன் முதலியவர்கள் கிஷ்கிந்தாபுரத்தில் சுகமாகக் காலங் கழித்தார்கள். ராம லக்ஷ்மணர்கள் பக்கத்திலிருந்த ஒரு மலைக் குகையில் காலங் கழித்தார்கள். மழையால் வெள்ளப் பெருக் கெடுத்து, காட்டுப் பாதைகள் எல்லாம் நீரோட்டமாக ஓடி, போக்குவரத்துத் தடைபட்டுக் கிடந்தது. சீதையைத் தேடும் காரியம் அதனால் தடைபட்டது. சீதையின் நிலையை எண்ணி எண்ணி ராமன் மிகவும் துக்கப்பட்டான். மாரி காலம் முடிவாகும் வரையில் பொறுமையோடு இருக்க வேண்டும் என்று லக்ஷ்மணன் ராமனுக்குச் சொல்லிச் சமாதானப் படுத்தி வந்தான். ராமனும் அப்படியே பொறுத்திருந்தான்.

**எ**த்தனை பெரிய துக்கம் நேர்ந்தாலும் காலக்கிரமத்தில் உள்ளத்தில் நாம் பெற்றிருக்கும் மறதி என்ற சக்தியினால், துக்கம் வர வர மறைந்து போய், வாழ்க்கையில் கவனம் செலுத்தி அமைதி அடைகிறோம். ஈசுவரன் அமைத்திருக்கும் இந்த மறதி என்னும் சக்தி நமக்கு மிகப் பெருஞ் செல்வமாகும். அது இல்லையேல் இந்த உலகம் துயரத்துக்கு மேல் துயரமாகக் குவிந்து நரகமேயாகிவிடும். இந்த நியதியின்படி சுக்ரீவனும் அவன் பந்துக்களும் தாரையும் உள்பட எல்லாரும் வாலியை இழந்த துக்கத்தை மறந்து சீரும் சிறப்பும் நிறைந்த கிஷ்கிந்தையில் சந்தோஷமாக இருந்தார்கள்.

ஹநுமான் மட்டும் கவலைப் பட்டான். அவன் ராமனுடைய காரியத்தை மறக்கவில்லை. பிரதிக்ஞை செய்து கொடுத்ததைப் பற்றி அரசனிடம் மெதுவாகப் பேசுவதற்குத் தகுந்த சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீ தத் எழுதியுள்ள "இந்தியாவின் பொருளாதார சரித்திரம்" என்ற நூலை வாசித்த போது நான் கண்ணீர் விட்டேன். கைத்தறி நெசவு முதலிய இந்தியாவின் குடிசைத் தொழில்கள் பிரிட்டிஷ் யந்திர வகைகளால் அழிந்த விவரங்கள் அந்த நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதை இப்போது நினைத்தாலும் என் நெஞ்சம் பதறுகிறது. பிரிட்டிஷ் யந்திர வகைகள்தான் இந்தியாவை வறுமையில் ஆழ்த்தின. இந்தியாவில் உள்ள ஒரு செல்வந்தர் தம்முடைய சொத்தின் ஒரு பகுதியைக் கைத்தறிகளை அமைப்பதற்குச் செலவழித்தால் கூட நான் எவ்வளவோ மகிழ்ச்சி அடைவேன். அவர் தாம் கைத்தறித் துணி உடுத்திக் கொள்வதுடன் பிறரையும் அதே துணிகளை உபயோகிக்கும்படி தூண்ட வேண்டும். இந்தியா இழந்த சக்தியை மீண்டும் பெற இதுவும் முக்கிய வழியாகும். —காந்திஜி

# ஹாஸ்யக் களஞ்சியம்
















புடவையில் ஒரு கறை பட்டவுடன் படாதபாடு படுகிறாள்...ஆனால்...?



ஒலிபெருக்கிகளில் இந்தமாதிரி மாடல்களும் இனிமேல் வரலாம்!

சாமா





"எழுத்து சரியாக எழுதுகிறேன் என்று நூறு தடவை அச்சடித்த மாதிரி எழுதிக் கொண்டு வா."

"மாதிரி என்ன? எங்கப்பா அச்சாபீஸிலே வேலையாக இருக்கிறார் அச்சடித்தே கொண்டு வந்து விடுகிறேன் ஸார்!"



இதயப் பரிசோதனை



"மேஜைக்கு அடியிலே ஜோடு இருந்தால நீங்க இருக்கிறீங்க என்று அர்த்தமாம் முதலாளி சொல்லிப் பார்க்கச் சொன்னாருங்க ஜோடு இல்லீங்களே!"

"அப்பா! நான் இல்லை என்று சொல்லி விடாதே நான் இன்றைக்கு ஜோடு போட்டுக்கொண்டு வரவில்லை!"

பிரபல்ய நோவு
நிவாரணி
# நோ-பெய்னின்
புகழ் அதன்
இணையில்லா
சக்தியினால்
மேலும் பரவுகிறது

பெரிய, சிறிய ட்யூப்
களில் கிடைக்கிறது

கல்கத்தா
கெமிகல்
கல்கத்தா 29

# நோ-பெய்ன்
எல்லா வலிகளுக்கும் ஒரு ஔடதம

Ta-IA

தென் இந்தியா ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

---

நீண்டு பெருகும் கூந்தல் வேண்டுமானால்

# கேசவர்த்தினி
தடவுங்கள்






தலை அரிப்பைப் போக்குங்கள், மயிர் கொட்டுவதை நிறுத்துங்கள், அகால நரையைத் தடுங்கள், நரையைத் தாமதிக்கச் செய்யுங்கள், பளபளப்பான கேசத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள், மறைந்துள்ள கூந்தலழகை எடுத்துக் காட்டுங்கள் கேசவர்த்தினியின் உதவியால்.

ஷாம்புவின் உதவியால்
தலையை சுத்தமாகவும் பரிமளமுள்ளதாகவும் ஆக்குங்கள்

கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால்செலவு வேறு. எங்கும் கிடைக்கும்.

கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்

No. 2

# தங்க மாம்பழம்

ராஜி

## 26. எப்படித் தெரிந்தது?

வீரப்ப தேவன் ஓடி வருவதைப் பார்த்த உமா, "அண்ணா, அண்ணா! அதோ பார்! நம்மை இரும்புக் கூண்டில் அடைத்தவன் போலிருக்கிறதே. அண்ணா! அவனைப் பார்த்தாலே பயமாக இருக்கிறதே!" என்று பிரபாகரன் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

"உமா, நீ சொல்லுவது உண்மைதான். நம்மை நோக்கி ஓடி வருபவன் அவனேதான். நீ ஒன்றுக்கும் பயப்படாதே. என்ன நடக்கிறது என்று பார்க்கலாம்" என்று உமாவுக்குத் தைரியம் கூறினான் பிரபாகரன்.

அந்தச் சமயத்தில் வீரப்ப தேவன், "பிரபாகரா, உமா! நீங்கள் இனிமேல் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். உங்களை இருட்டறையில் அடைத்து வைத்திருந்தாளே, அந்தக் கிழவி மாறு வேஷத்துடன் வந்து எதையாவது செய்யச் சொல்லுவாள். அல்லது ஏதாவது தின்பண்டங்கள் கொடுப்பாள். அதை நீங்கள் கவனிக்க வேண்டாம். இப்பொழுதுதான் அந்தக் கிழவியை உங்களுக்குச் சமீபத்தில் பார்த்தேன். அதைச் சொல்லத்தான் உங்களிடம் ஓடி வந்தேன்" என்று சொல்லிவிட்டுத் தன் பற்கள் யாவும் தெரியும்படி சிரித்தான்.

உடனே பிரபாகரன் உமாவின் காதில், "உமா, இவன் சொல்லுவது உண்மையோ, பொய்யோ தெரியவில்லை. எதற்கும் கிழவி கொடுத்த திராக்ஷைப் பழத்தை நாம் இப்பொழுது தின்ன வேண்டாம். பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்று ரகசியமாகச் சொல்லிவிட்டு, வீரப்பதேவனைப் பார்க்க வெறுப்புக் கொண்டு தலையைக் குனிந்து கொண்டான். உமாவும் வீரப்ப தேவனைப் பார்க்காமல் மற்றொரு பக்கம் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

உடனே வீரப்ப தேவன், "ஓகோ, என் மீது ஏதோ தவறுதலாக எண்ணம் கொண்டிருக்கிறீர்கள் போல் இருக்கிறது. உங்கள் இரண்டு பேருக்கும் ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டவன் நான். இப்பொழுதாவது என்னைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள்" என்றான்.

"ஐயா, எங்களை நீங்கள் தொந்தரவு பண்ண வேண்டாம். உங்களுக்கு வேறு அலுவல்கள் இருந்தால் அதைக் கவனியுங்கள். நீங்கள் மிகவும் நல்லவர் என்பது பறக்கும் குதிரையிலிருந்து தப்பிய பொழுது எங்களை இரும்புக் கூண்டில் நீங்கள் அடைத்து வைத்தீர்களே, அதிலிருந்தே எங்களுக்கு நன்றாய்த் தெரிந்து விட்டது! தயவுசெய்து எங்கேயாவது போங்கள். நாங்கள் உங்களுடன் பேசத் தயாராக இல்லை" என்று கோபத்துடன் பேசினான் பிரபாகரன்.

"நீங்கள் தவறுதலாக என்னை அப்படிச் சொல்லுகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். என் மீதுள்ள சந்தேகங்களை விளக்கவே உங்கள் இருவரையும் தேடிக் கொண்டு ஓடி வந்தேன். தயவுசெய்து நான் சொல்லுவதைக் கேளுங்கள். உங்களைக் கெட்ட எண்ணத்துடன் நான் இரும்புக் கூண்டில் அடைக்கவில்லை. மாயாமகேந்திரபுரத்து அரசன் வீரசிம்மனும், வயற்காட்டுக் கிழவியும் ஏதோ காரணத்தினால் உங்களை எப்பொழுதும் கைதிகளாக அறையில் அடைத்து வைக்க வேண்டுமென்று எண்ணம் கொண்டிருக்கிறார்கள். பறக்கும் குதிரையிலிருந்து தப்பிய உங்கள் இருவரையும் மறுபடியும் சிறைப் படுத்தி உபத்திரவம் செய்யப் போகிறார்களே என்று உங்களை நானும் என் சிநேகிதர்களும் மாயாமகேந்திரபுரப் பட்டணத்தைத் தாண்டி எங்கே




திருப்பிப் பார்க்கவும்!



"எங்களுக்கு நீங்கள் ஏன் விசேஷ மரியாதைகள் செய்ய ஏற்பாடுகள் செய்திருந்தீர்கள் என்பது இன்னும் விளங்கவில்லை. அது போகட்டும்! நீங்கள் பறக்கும் குதிரையிலிருந்து கீழே விழுந்து கிடந்த எங்களை அன்பு கொண்டு நடத்தாமல் கூண்டில் அடைத்து விட்டீர்கள். அதற்குச் சந்தேகமில்லை. அது மட்டுமில்லை, அப்பொழுது எங்களிடம் நடந்து கொண்ட முறைக்கும், இப்பொழுது நீங்கள் நடந்து கொள்ளும் முறைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லாமலிருக்கிறது. ஏன் இப்பொழுது எங்களிடம் மிகவும் பிரியமுள்ளவர்போல நடந்து கொள்ளுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை" என்று மீண்டும் கூறினான் பிரபாகரன்.

"பிரபாகர், நீயோ மிகவும் சிறுவன். உலக அனுபவமில்லாதவன். நல்ல எண்ணத்தை உடைய என்னையே நீ சந்தேகிக்கும் பொழுது நான் என்ன பண்ண முடியும்? நான் உங்களுக்குத் தெரியாமல் மறைவிலேயே இருந்து உபகாரங்கள் செய்திருக்கிறேன். மறைவிலிருந்து செய்த உபகாரத்தைத்தான் நீங்கள் நம்பவில்லையே? ஆதலால்தான் இப்பொழுது நேராகவே வந்து உங்களுக்கு உதவி செய்ய முன் வந்திருக்கிறேன். இப்பொழுதாவது என்னை நம்பலாம்" என்றான் வீரப்ப தேவன்.

"ஐயா, நீங்கள் ஏதோ மறைவிலிருந்து எங்களுக்கு உதவி செய்ததாகச் சொல்லுகிறீர்களே? ஏதாவது நீங்கள் செய்த ஒரு முக்கிய உதவியைப் பற்றிச் சொல்லுங்கள், பார்க்கலாம். அப்பொழுதுதான் எங்களுக்கு உங்கள்மீது நம்பிக்கை வைக்க உதவியாக இருக்கும்."

"பிரபாகரா, அப்படிக் கேள். இதோ சொல்லுகிறேன். சமீபத்தில் உனக்கும் அரசன் வீரசிம்மனுக்கும் போட்டி நடந்தது அல்லவா?"

"ஆமாம், நடந்தது. அந்த விஷயம் யாவருக்கும் தெரிந்ததுதானே! அதில் என்ன ரகசியம் இருக்கிறது?" என்றான் பிரபாகரன்.

"அவசரப்படாதே, பிரபாகரா! வில் போட்டி நடந்தது யாவருக்கும் தெரிந்த விஷயமாக இருக்கலாம். ஆனால் அதற்கு முன்பாக நந்தவனத்தில் நடந்த சம்பவம் உனக்கும், உமாவுக்கும் மட்டுந்தானே தெரியும்?"

"என்ன நீங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே?"

யாவது அனுப்ப வேண்டும் என்ற நல்ல எண்ணத்துடன் தான் அழைத்து வந்தோம். இரவு அதிக நேரம் ஆகி விட்டதால் நீங்கள் ஜாக்கிரதையாக இருப்பதற்கும் வேறு ஒருவரும் உங்களுக்குத் தீங்குகள் செய்யக் கூடாது என்றும் உங்களைத் தாற்காலிகமாக அந்த இரும்புக் கூண்டில் அடைத்தோமே தவிர வேறு ஒன்றுமில்லை. மறுநாள் காலையில் அரண்மனையைச் சேர்ந்த மாந்தோப்பில் உங்கள் இருவருக்கும் பிரமாதமான வரவேற்புக்கு ஏற்பாடுகள் செய்திருந்தோம். ஆனால் நீங்கள் கூண்டிலிருந்து தப்பித்துக் கொண்டு விட்டீர்கள். பிறகு நல்ல வேளையாக, நாங்கள் வரவேற்பு ஏற்பாடுகள் செய்திருந்த மாந்தோப்புக்கே சென்றீர்கள்; அங்கு என் ஏற்பாட்டின்படி உங்களுக்குச் சகல விதமான மரியாதைகளும் செய்யப்பட்டன என்ற செய்தியைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தோம்.

"உங்களைக் காலையில் கூண்டிலிருந்து அழைத்துப் போவதற்காக வந்தோம். ஆனால் கூண்டில் உங்களைக் காணவில்லை. நீங்கள் எங்கேயாவது போய் மறுபடியும் அரசனிடமும், வயல் காட்டுக் கிழவியிடமும் அகப்பட்டுக் கொள்ளப் போகிறீர்களே என்று பயந்து உங்களைப் பாதுகாக்க வேண்டி எல்லா இடங்களிலும் தேடினோம். நீங்கள் அகப்பட வில்லை. அதனால்தான் என்னால் மாந்தோப்புக்கு வர முடியவில்லை" என்றான்.



இந்தக் கோணங்களை ஒன்றாகச் சேர்த்தால் ஒரு சதுரம் ஆகும். எங்கே சேர்த்துப் பாருங்கள். (கோணங்களைத் தனிக் காகிதத்தில் 'டிரேஸ்' செய்து கத்தரித்து ஒட்டிப் பாருங்கள்.)

"நான் எதைக் குறிப்பிடுகி றேன் என்றால் பீமவர்மன் நந்த வனத்தில் உன் தங்கை உமா வுக்கு வனதேவதை கொடுத்துப் போனாளே, அந்த மந்திர அம் பைப் பற்றித்தான்."

இதைக் கேட்டவுடன் பிரபா கரனுக்கும், உமாவுக்கும் தூக்கி வாரிப்போட்டது. தங்கள் இரு வரைத் தவிர வேறு ஒருவருக் கும் தெரியாது என்று நினைத் துக் கொண்டிருந்த விஷயத்தை வேறு யாராவது சொன்னால் அதிர்ச்சி ஏற்படு வது சகஜம்தானே! பிரபாகரன் உமாவைப் பார்த்தான்; உமா பிரபாகர னைப் பார்த்தாள். பிறகு இரு வருமாய்ச் சேர்ந்து வீரப்ப தேவனைப் பார்த்தார்கள்.

உடனே வீரப்பதேவன் "நான் இப்பொழுது கூறியது உங்க ளுக்கு ஆச்சரியமாக இருக்கும். மேலே சொல்லப்போவது இதை விடப் பதின்மடங்கு ஆச்சரியத் தைத் தரும். அப்பொழுதுதான் நீங்கள் என்னை நன்றாக அறிந்து கொள்ளுவீர்கள்" என்றான். "எங்கே மேலே சொல்லுங்கள்" என்று கேட்டான் பிரபாகரன். (தொடரும்)



முன் பக்கத்தில் உள்ள கோணங் களுக்கு விடை.

# குழந்தைகளின் கலை மலர்

"ஷங்கர்ஸ் வீக்லி" என்ற ஆங்கில வாரப் பத்திரிகை உலக அரசியல் தலைவர்களையும் அரசி யல் பிரச்னைகளையும் பற்றி வாரந்தோறும் மக்களைச் சிரிக்கச் செய்யும் கேலிச் சித்திரங்களை (கார்ட்டூன் களை)த் தாங்கிக் கொண்டு வெளியாவது. உலக பத்திரிகைகள், ரேடியோக்கள், டெலிவிஷன்கள் முதலியவற்றில் பெயர்கள் அடிபடும் தலைவர்களைப் பற்றிச் சிந்திக்கும் ஓர் பத்திரிகை. அது தொட்டிலி லும், பள்ளிக்கூடத்திலும், கிராமங்களிலும் விளை யாடும் உலகக் குழந்தைகளின் மனோபாவத்தைப் பற்றியும் கலை யுணர்ச்சியைப் பற்றியும் சிரத்தை கொண்டு உற்சாக மூட்டும் வகையில் சித்திரக் கண் காட்சிகளும், கட்டுரைப் போட்டிகளும் நடத்தி, ஆண்டு மலரும் வெளியிடுவது யாருக் குமே அதிசயமாக இருக்கு மல்லவா!

உலகத்திலுள்ள ஐம்பத்தாறு தேசங்களிலிருந்து வந்துள்ள 24,000 சித்திரம் கட்டுரை ஆகியவை களிலிருந்து சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து இவ்வாண்டு ஷங்கர்ஸ் வீக்லியின் குழந் தைகள் கலை மலர் வெளியாகி யிருக்கிறது. ஐந்து வயதுக் கும் மேற்பட்ட குழந்தைகளி லிருந்து பதினாறு வயது வரையிலுள்ள பல தேசக் குழந்தைகளின் சித்திரங்க ளும் கட்டுரைகளும் நம்மை மீண்டும் இன்ப மயமான குழந்தை உலகத்துக்குக் கொண்டு போய்விடுகின்றன!

குழந்தைகளினால் பொது வாக எதைக் கண்டும் அரு வருப்புக் கொள்ள முடியாது. அவைகளுக்கு எல்லாமே இன் பம் பயப்பன. உடைந்த கண்ணாடித் துண்டு முதல் மிக உயர்ந்த பொம்மை வரை அவை சரிசமமாகப் பாவித்து விளையாடும். அன்பு செலுத்தி இன்பம் பெறும். இதுவே உயர்ந்த கலைஞனின் லட்சணம் அல்லவா!

நவீன இலக்கியத்தில் பெரியவர்கள் பேய், பிசாசு, பூத கணங்களை வைத்துக் கதை எழுதுவதையும், அதைப் படித்து விட்டுப் பலர் பல நாள் இராத் தூக்கமில்லாமல் கஷ்டப் படுவதையும் பார்க்கிறோம். ஆனால் பத்து வயதுக் குழந்தை எழுதி யிருக்கும் கதையைப் படியுங்கள்:

### ஒரு பூதம்

நான் பூதத்தைப் பார்த்ததே கிடையாது. ஆனால் என்னால் பூதம் பார்ப்பதற்கு எப்படி யிருக்கும் என்று சொல்ல முடியும்! பூதம் மிகப் பெரிய மனிதன். அவன் கால்கள் பூமி யிலும், தலை ஆகாசத்திலும் இருக்கும். அவ னுக்குச் சூரியன், சந்திரன் என்று இரண்டு கண்கள். ஒரு சமயம் சூரியக் கண்ணைத் திறந்து வைத்துக் கொண்டு தூங்குவான். அப்போது நமக்குப் பகல். இன்னொரு சமயம் அவன் சந்திரக் கண்ணைத் திறந்து வைத்துக் கொண்டு தூங்குவான். அப்போது நமக்கு நிலா ஒளி கிடைக்கிறது. சில சம யம் இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு தூங்கு வான். அப்பொழுதெல்லாம் தான் நமக்கு ஒரே இருள் சூழ்ந்த இரவாகப் போய் விடுகிறது. அவன் பெரு மூச்சு விட்டால் நாம் புயல் அடிக்கிறது என்கிறோம். அவன் அழுதால் நமக்கு மழை பொழிகிறது. அவன் பெருத்த குரலில் இரைந் தால் இடி இடிக்கிறது!




நான்கு வயதுக் குழந்தை வரைந்தது.

இந்தப் பூதத்தைப் பார்த்து யாராகிலும் பயந்து போக முடியுமா? அதற்குப் பதி லாகப் பூதத்தின் மீது அன்பு ஏற்பட்டு மீண்டும் மீண்டும் படித்து ரஸிக்க அல்லவா தோன்றுகிறது! இதுவன்றோ உயர்ந்த கலையின் லட்சணம்! இந்தலட்சணத்தைப் பெற்ற கலைப் பொக்கிஷம் இந்த ஷங்கர்ஸ் வீக்லியின் குழந் தைகள் மலர். கிடைக்கு மிடம்: ஷங்கர்ஸ் வீக்லி, ஓடியான் பில்டிங், புதுடில்லி. விலை: ரூ. 5.—எஸ். வி. எஸ்.

பிரயாணத்தில் குறைந்ததொரு நேரந்தான் . . . அதிக நேரம்
உங்கள் குடும்பத்துடன் கழிக்கலாம்.
ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக
ஏழே மணி நேரத்தில்

# சிங்கப்பூர்



பறந்து செல்லலாம்

சென்னையிலிருந்து வெள்ளிக்கிழமைதோறும் ஸெர்விஸ்

- நான்கு எஞ்சின்களுள்ள கான்ஸ்டலேஷனில் மிக சௌகரியமாகவும் பாதுகாப்புடனும் பிரயாணம் செய்யலாம்.
- எவ்வித அசௌகரியமோ தொந்தரவோ இல்லாமல் ஏழு மணிநேரப் பிரயாணம் தான்.
- உங்கள் தேவைகளை கவனிக்க ஹோஸ்டஸ் மற்றும் பர்ஸர்கள் எப்பொழுதும் ஆஜருண்டு.
- இரவு எங்கும் தங்காது.
- நல்ல ருசியான சைவ போஜனம் அல்லது மாமிச போஜனம்—இலவசம்.
- 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு விசேஷ ஏற்பாடுகள், பாதிக் கட்டணம்.
- சிங்கப்பூரிலிருந்து மலாய் நாடுகளுக்கு சௌகரியமான ரயில், விமானத் தொடர்பு வசதிகள்.

புறப்பாடு மதராஸ் வெள்ளிக்கிழமை இரவு 10-45 மணி
வருகை சிங்கப்பூர் சனிக்கிழமை காலை 7-45 மணி
(லோக்கல் டைம்)

கட்டணம்

| | முதல் வகுப்பு | டூரிஸ்ட் வகுப்பு |
|---|---|---|
| மதராஸ்-சிங்கப்பூர் (ஒற்றைப் பிரயாணம்) | ரூ. 654/- | ரூ. 680/- |

- திரும்பும் பிரயாணத்திற்கு ஒற்றைப் பிரயாண கட்டணத்தின்பேரில் 20% தள்ளுபடியுண்டு; ரிட்டர்ன் டிக்கட் ஒரு வருஷகாலத்திற்கு செல்லுபடியாகும்.
- கூட எடுத்துச் செல்லாத சாமான்களுக்கு விசேஷச் சலுகைக் கட்டணங்கள்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக சௌகரியத்துடன் பிரயாணம் செய்யுங்கள்.

புக்கிங் மற்றும் இதர பிரயாண விவரங்களுக்கு நேரிலோ கடித மூலமோ விசாரியுங்கள்:

## ஏர்-இந்தியா இன்டர்நேஷனல்

கலீலி மான்ஷன், 35, மவுண்ட்ரோட், மதராஸ்-2
டெலிபோன்: 86194

அல்லது இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன்
திருச்சி, திருவனந்தபுரம், கொச்சி, கோயமுத்தூர், பெங்களூர்



AII. 1195





மாடல் டிபி 221 — 4 வால்வ் கொண்ட ட்ரை பாட்டரி ரேடியோ ஸெட்.
மாடல் டிஏ 222 — 5 வால்வ் கொண்ட ஏஸி, ரேடியோ ஸெட்.
மாடல் டியு 222— 5 வால்வ் கொண்ட ஏஸி/டிஸி ரேடியோ ஸெட்.

மாடல் டிஏ 224— 5 வால்வ் ஏஸி ரேடியோ ஸெட் — 8 பாண்டுகளுடன் கூடிய இதில் சகல ஸ்டேஷன்களும் கிடைக்கும்.
மாடல் டிபி 227—7 வால்வ் ட்ரை பாட்டரி ரேடியோ ஸெட்-8 பாண்டுகளுடன் கூடியது-சகல ஸ்டேஷன்களும் கிடைக்கும்.

# மர்பி வரிசை

மாடல் டிஏ 226—7 வால்வ் கொண்ட ஏஸி ரேடியோ ஸெட்-8 பாண்டுகளும், மாஜிக்ஐயுடனும் கூடிய இந்த ஸெட்டில் சகல ஸ்டேஷன்களும் கிடைக்கும்.

மாடல் டியு 196— 6 வால்வ் ஏஸி/டிஸி ரேடியோ ஸெட் — 8 பாண்டுகளுடன் கூடியது - சகல ஸ்டேஷன்களும் கிடைக்கும்.





மர்பி ரேடியோ

**murphy radio**

உங்கள் பணத்திற்கு சிறந்த மதிப்பு




மெம்பர் ஆப் தி ரேடியோ மானுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா

டிஸ்டிரிபியூட்டர்கள் :

அடிஸன் அன்டு கம்பெனி லிட்,
158, மவுண்ட் ரோட், மதராஸ்-2

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிமிடெட், பம்பாய்-12.

MR. 54.33 TAM

# கணையாழியின் கனவு







## 'கல்கி'

### 7. பூகம்பம்

**க**ணையாழி கிராமத்தின் ஸ்திரீ சமூகத்தின் வாழ்க்கையில் ஒரு பெரிய மானஸிக பூகம்பம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அதனால் ஏற்பட்ட பெரும் பிளவுகளில், வெகு காலைய நம்பிக்கைகள், மாமூல் வழக்கங்கள் எல்லாம் விழுந்து மறைந்து போய்க் கொண்டிருந்தன.

சகுந்தலை கணையாழிக்கு வந்த நாலாம் நாள் இரவு, சந்திரசேகரன் வழக்கம் போல் படுக்கை யறைக்குள் புகுந்தபோது பெரியதோர் அதிசயத்தைக் கண்டான். அவனுடைய தர்மபத்தினி ஸ்ரீமதி சாரதாம்பாள் அம்மாள், ஹரிஹரய்யர் இங்கிலீஷ் பிரைமரைப் பிரித்து வைத்துக் கொண்டு, "பி—ஐ—ஜி—பிக்கு, பன்றி" என்று எழுத்துக் கூட்டிப் படித்துக் கொண்டிருந்தாள்.

"இது என்ன அதிசயம்! இங்கிலீஷ் படிப்பிலே திடீரென்று இவ்வளவு பிரேமை ஏற்பட்டதென்ன!" என்று சந்திரசேகரன் பரிகாசக் குரலில் கேட்டான்.

"ஆமாம்; பரிகாசம் பண்ணத்தான் உங்களுக்குத் தெரியும். இல்லாவிட்டால் உலகத்தில் நாலு பேரைப் போல் எனக்கு இரண்டு எழுத்துத் தெரிய வேண்டு மென்று உங்களுக்கு ஆசை இருந்தால் தானே!" என்றாள் சாரதா. அவளுடைய நீலக் கருவிழிகள் கண்ணீர்ப் பிரவாகத்தைப் பெருக்குவதற்கு ஆயத்தம் செய்யத் தொடங்கின. ஆனால் சந்திரசேகரன் வெறும் ஆண் பிராணிதானே! அதைக் கவனியாமல், "நான் வேண்டுமானால் காரணம் சொல்லட்டுமா! சகுந்தலை மாதிரி நாமும் ஆகவேண்டு மென்று ஆசை. நிஜமா, இல்லையா!" என்றான்.

உடனே ஒரு தேம்பல் சத்தம். "எனக்குத் தெரியுமே, நீங்கள் அவளையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று!"—அவ்வளவுதான். கண்ணீர் வெள்ளம் பெருகத் தொடங்கி விட்டது. அன்றிரவு வெகு நேரம் வரையில் அந்த வெள்ளத்தில் கரை காணாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான் சந்திரசேகரன்.

** ** **

**ம**று நாள் மத்தியானம். (ஸ்ரீ ராஜமய்யர் அவர்களால் சரித்திரப் பிரஸித்தியாக்கப் பெற்ற) வம்பர் மகா சபை கணையாழியில் கூடியபோது, "கல்கத்தா பெண்" என்னும் விஷயம் பற்றி விவாதம் நடந்தது. ஏற்கெனவே இந்தக் கதையில் ஏராளமான பெயர்கள்—ஞாபகம் வைத்துக் கொள்ளக் கூடிய அளவுக்கு மேல்—வந்து விட்டபடியாலும், இக் கதையில் பெயர்கள் அவ்வளவு முக்கியமல்லவாகையாலும், மகாசபை அங்கத்தினரின் பெயர்களை விட்டு விட்டு விவாதத்தின் சாராம்சத்தை மட்டும் தருகிறேன் :—

"என் காலத்தில் எவ்வளவோ அதிசயத்தைப் பார்த்து விட்டேன். இப்போது கல்கத்தா பெண் ஒரு அதிசயமாய் வந்திருக்கிறாள். இந்தக் கட்டை போவதற்குள் இன்னும் என்ன அதிசயம் பார்க்கப் போகிறதோ!"

"அந்தக் கடன்காரி பார்வதி செத்துப் போனாளே, அவள் மட்டும் இருந்திருந்தால் இந்தப் பெண்ணை இப்படி வளர்த்து விட்டிருக்க மாட்டாள்."

"அவளே இந்தப் புருஷனைக் கட்டிண்டு எவ்வளவோ சிரமப் பட்டாளாமே! இழுத்த இழுப்புக்கெல்லாம் வரவேணு மென்று பிடிவாதம் பிடித்தானும். அந்தக் கஷ்டம் தாங்க முடியாமலேயே அவள் கங்கையில் விழுந்து செத்துப் போனதாகக் கேள்வி."

"போனவள் இந்தப் பெண்ணையும் கங்கையில் தள்ளி விட்டுச் செத்துப் போயிருக்கலாம். ஒரு பாடாய்ப் போயிருக்கும்."

"ஏன் அத்தை, அப்படி அநியாயமாய்ச் சொல்கிறாய்! சகுந்தலைக்கு என்ன வந்து விட்டது! ராஜாத்திமாதிரி இருக்கிறாள். எங்களை யெல்லாம் போல் அடுப்பங்கரையே கதியாயிருக்க வேண்டுமா!" என்றது ஓர் இளங் குரல்.

"அடுப்பங்கரை வேண்டாம்; சந்திக்கரையிலேயே நிற்கட்டும். நாலு குழந்தை பெற்றெடுக்க வயதாச்சு. காளைமாதிரி திரிகிறது. அவளுக்கு என்ன வந்துடுத்தாம்!"

"நாலு குழந்தை பெற்றவர்களெல்லாம் என்ன சுகத்தைக் கண்டு விட்டோம்; அவள் அதைக் காணாமல் போய் விட்டாள்! கோடி வீட்டு அம்மணியைப் பார். பதினேழு வயது ஆகவில்லை; மூன்றாவது குழந்தை பிறந்திருக்கிறது. தினம் பொழுது விடிந்தால் குழந்தைகளை அடித்துக் கொல்கிறாள். என்னைக் கேட்டால், சகுந்தலைதான் பாக்கியசாலி என்பேன்."

"ஆமாண்டி, அம்மா! நீயும் வேண்டுமானால் அவளைப்போலச் செருப்புப் போட்டுக் கொண்டு,

'ஆனந்த விகடனி'ல் 1934-ம் ஆண்டு வெளியானது.

> ஒரு காலத்தில் நமது கைத்தறி நெசவாளர்கள் லங்காஷயரை எதிர்த்துப் போராடவேண்டியிருந்தது. இப்போதோ அதைக் காட்டிலும் பெரிய ராட்சத விரோதி இந்தியாவுக்கு உள்ளேயே ஏற்பட்டிருக்கிறான். இந்தியாவில் விவசாயத்துக்கு உகந்த நிலம் இப்போது விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கே போதுமானதாக இல்லை. இந்தியாவில் உள்ள தொழிற்சாலைகளில் கைத்தறி நெசவாளர்களை எடுத்துக் கொள்வது என்பதும் சாத்தியமில்லை. இது விலைவாசிகளைச் சரிக்கட்டும் பொருளாதாரப் பிரச்னை மட்டும் அல்ல. ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளுமாக இரண்டரைக் கோடிப் பேருக்கு எப்படி உணவு அளிப்பது என்ற பெரிய பிரச்னையாகும். — ராஜாஜி

குடையும் பிடித்துக் கொண்டு வீதியோடு உலாவி வாயேன்."

"செருப்புப் போட்டுக் கொண்டு குடை பிடித்துக் கொண்டு வந்தால் சகுந்தலையைப் போல் ஆகிவிட முடியுமா! அதற்கு வேண்டிய படிப்பும் புத்திசாலித்தனமும் வேண்டாமா!"

"அவள் மட்டும் என்ன, கொம்பிலிருந்து குதித்து வந்தாளா! என்னையும் படிக்க வைத்திருந்தால் நானுந்தான் அவளைப் போல் ஆகியிருப்பேன். என்ன ஒசத்தி!"

"ஆமாம், நீயும் அவளைப்போலவே படித்து, பாஸ் பண்ணி, புடவைத் தலைப்பை வீசிக்கொண்டு திரியணும்; ஊரிலிருக்கிற தடிப் பிரம்மச்சாரிகள் எல்லாம் உன்னைச் சுற்றிக் கொண்டு அலையணும் என்று ஆசைப்படுகிறாயாக்கும்!"

"சீ! என்ன அத்தை! வயதாயிற்றே தவிர உங்களுக்கு மானம் வெட்கம் ஒன்றும் கிடையாது. இப்படித்தானா பேசுவது!"

சீக்கிரத்தில் கன்னையாழி வம்பர் மகாசபை அங்கத்தினருக்குள் அபிப்பிராய பேதம் வலுப்படலாயிற்று. இளங் கோஷ்டி யென்றும், மூதிய கோஷ்டி யென்றும் பிரிவினை உண்டாயிற்று. இளங் கோஷ்டியைச் சேர்ந்த பெண்கள் சகுந்தலையிடம் அநுதாபமும், அபிமானமும் கொள்ளலானார்கள். சமயம் நேர்ந்தபோது அவளுக்குப் பரிந்து பேசினார்கள்.

இதற்கெல்லாம் காரணம் ஒரு நாள் ஜானகி துணிந்து சென்று சகுந்தலையைத் தன் வீட்டில் மஞ்சள் குங்குமம் வாங்கிக் கொண்டு போக அழைத்ததுதான். அப்போது ஜானகி வீட்டுக்கு வந்திருந்த இளம் பெண்களுடன் சகுந்தலை வெகு சீக்கிரம் சிநேகம் செய்து கொண்டாள்.

கன்னையாழி யுவதிகளுக்கெல்லாம் திடீரென்று படிப்பில் அபரிமிதமான ருசி உண்டாகியிருந்தது. லலிதா ஒரு நாள் ஒரு தமிழ் நாவலைக் கையில் வைத்துக் கொண்டிருந்தாள். சகுந்தலை "அது என்ன புத்தகம்!" என்று கேட்டுக்கொண்டே புஸ்தகத்தை வாங்குவதற்குக் கையை நீட்டினாள்.

"இது தமிழ்; உங்களுக்குத் தெரியாது" என்று பதிலளித்தாள் லலிதா.

சகுந்தலை சிரித்தாள். "அது என்ன! எனக்குத் தமிழ் தெரியாது என்று அடித்து விட்டீர்களா! என்னுடைய சொந்த பாஷை தமிழ்தானே!" என்றாள் அவள்.

"இல்லை; வெகுகாலம் வடக்கேயே இருந்தவளாச்சே; இங்கிலீஷ்தான் தெரியும், தமிழ் படிக்கத் தெரியாது என்று நினைத்தேன்" என்று லலிதா சொன்னாள்.

"அதெல்லாம் இல்லை. வடக்கே இருந்தால்தானே தமிழிலே அபிமானம் அதிகமாக உண்டாகிறது. வங்காளிகளெல்லாம் தங்கள் சொந்த பாஷையில்தான் அதிகமாய்ப் படிப்பார்கள். தெற்கத்தியார் இங்கிலீஷ் பைத்தியம் பிடித்தவர்கள் என்று பரிகாசம் செய்வார்கள்" என்று சகுந்தலை சொன்னாள்.

"என்ன இருந்தாலும் இங்கிலீஷ் தெரிந்தால் அது ஒரு ஒசத்திதானே!" என்றாள் தங்கம்மாள்.

"ஒரு ஒசத்தியுமில்லை. இங்கிலீஷ் வெள்ளைக்காரர்களுடைய பாஷை. தமிழ் நமது சொந்த பாஷை. நம்முடைய பாஷையில் பேசுவதும் படிப்பதும்தான் நமக்கு மேன்மை" என்றாள் சகுந்தலை.

ஆண்டாளுவின் குழந்தைக்கு ஆண்டு நிறைவு வந்தபோது குழந்தையை மணையில் வைத்துப் பாடுவதற்குச் சகுந்தலையையும் அழைத்திருந்தார்கள். ஊர்ப் பெண்களெல்லாரும் அவரவர்களுக்குத் தெரிந்த "மருகேலரா", "சுஜன ஜீவனா", "நகுமோமூ", "தினமணி வம்ச", முதலிய தியாகராஜ கீர்த்தனங்களைப் பாடினார்கள்.

"ஒருவருக்கும் தமிழ்ப் பாட்டு தெரியாதா!" என்று சகுந்தலை ஜானகியிடம் கேட்டாள்.

"தமிழில் நலங்குப் பாட்டுத்தான் தெரியும். அது நன்றாயிராது" என்றாள் ஜானகி.

"பாரதிப் பாட்டுக்கூடத் தெரியாதா!" என்று சகுந்தலை மறுபடியும் கேட்டது லலிதாவின் காதில் விழுந்தது. அவள் "ஆகா, நம்முடைய அலமேலுவுக்குப் பாரதிப் பாட்டுத் தெரியுமே. அலமேலு! சகுந்தலைக்குப் பாரதிப் பாட்டு கேட்க வேண்டுமாம். உனக்குத் தெரியுமே. சொல்லு" என்றாள். அலமேலு கொஞ்ச நேரம் பிராக்கி செய்து விட்டுப் பிறகு,

"இராஜ விசுவாச லாலா லஜபதியே!"

என்று பாடத் தொடங்கினாள். "இராஜத் துரோகக் குற்றத்துக்காகத் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்ட லஜபதிராய் இங்கே இராஜ விசுவாசியாகி விட்டாரே" என்று எண்ணியபோது சகுந்தலைக்குத் தாங்க முடியாத சிரிப்பு வந்தது. ஆயினும் சிரிப்பை அடக்கிக் கொண்டாள். அலமேலுவை இன்னொரு பாட்டுப் பாடச் சொன்னார்கள். அவள்,

"வந்தேமாதரமே! மனதிற்கோர் ஆதாரமே!"

என்று ஆரம்பித்து,

"காட்சி கண்காட்சியே! திருவனந்தபுரத்து
காட்சி, கண்காட்சியே!"

என்று முடிவு செய்தாள்.

எல்லாம் முடிந்த பிறகு சகுந்தலை தன் சிநேகிதிகளிடம் அலமேலு சொன்ன பாட்டுக்கள் பாரதி பாடியவை யல்லவென்றும், ரொம்ப மட்டத்தரமானவை என்றும் தெரிவித்தாள்.

"உங்களுக்குப் பாரதி பாட்டுத் தெரியுமோ!" என்று ஜானகி கேட்டாள்.

"எனக்குத் தெரியாது. உங்களில் யாருக்காவது தெரிந்தால் கற்றுக் கொள்ளலாமென்று நினைத்தேன். ஆனால் என்னிடம் பாரதி புத்தகம் இருக்கிறது. நீங்கள் என் வீட்டுக்கு வந்தால் நாமே மெட்டுப் போட்டுப் பாடக் கற்றுக் கொள்ளலாம். உங்களுக்கு ஹிந்துஸ்தானி வங்காளிப் பாட்டுக்களும் சொல்லிக் கொடுக்கிறேன்" என்றாள் சகுந்தலை.

"வருவதற்கு இஷ்டந்தான். ஆனால் உங்கள் வீட்டில் ஓயாமல் புருஷப் பிள்ளைகள் வருகிறார்களே!" என்று லலிதா கேட்டாள்.

"வந்தால் உங்களுக்கென்ன! நீங்கள் ஏன் அவர்களைக் கண்டு பயப்பட வேண்டும்! அவர்கள் தான் உங்களைக் கண்டு பயப்படட்டுமே!" என்றாள் சகுந்தலை.

பத்துப் பதினைந்து தினங்களுக்குள் கணையாழியில் இருந்த இளம் பெண்களில் ஒவ்வொருத்தியும் தனித்தனியே சகுந்தலையைத் தன்னுடைய பிராண ஸ்நேகிதியாகக் கருதத் தொடங்கினாள்.

## 8. புயல்

சகுந்தலை கணையாழிக்கு வந்து சுமார் மூன்று மாதமாயிற்று. அப்போது கணையாழி வாலிபர்களின் மனோ நிலைமையை, பெரிய புயற் காற்றினால் அலைப்புண்ட தோப்பின் நிலைமைக்கே ஒப்பிடக் கூடும்.

வாலிபர்களைச் சொல்லப் போவானேன்! வயது நாற்பது ஆனவரின் விஷயம் என்ன! ஸ்ரீமான் இராம சுப்பிரமணியம் என்பவரின் மனைவி இரண்டு வருஷங்களுக்கு முன்னர் காலஞ் சென்ற போது அவர் "கிரகஸ்தாசிரமம் இனி நமக்கு வேண்டாம்" என்று தீர்மானம் செய்து பிறகு வந்த வரன்களை யெல்லாம் தட்டி விட்டார். அவரே இப்போது சகுந்தலையை முன்னிட்டுத் தமது சங்கல்பத்தை மாற்றிக் கொள்ளத் தயாரா யிருந்தா ரென்றால், அதிகம் சொல்வானேன்! அவர் எண்ணியதாவது:—"சகுந்தலையைப் போல் கல்வியறிவும், புத்திசாலித்தனமும் உள்ள பெண்ணுக்கு வாழ்க்கைத் துணையாகத் தகுதியுள்ள இளைஞன் இந்த தேசத்தில் எங்கே இருக்கிறான்! அதற்கென்ன! சின்னப் பயல்கள் 'கக்கே பிக்கே' என்று பல்லிளித்துக் கொண்டு வேண்டுமானால் நிற்பார்கள். அதைத் தவிர, அவளுடைய அறிவு முதிர்ச்சிக்கு ஏற்ப, மனமொத்து வாழக் கூடிய கணவன் அவர்களுக்குள் இருக்க முடியாது. ஆகையால் சகுந்தலை சின்னப் பையன் யாரையாவது மணந்து கொண்டால் நிச்சயமாக அவளுடைய வாழ்க்கை பாழாகி விடும். அவளுக்குத் தக்க வாழ்க்கைத் துணையாகக் கூடியவன் நான் ஒருவன்தான்."

நாற்பது வயதுக் காரருடைய மனோநிலை இதுவானால் இருபது இருபத்தைந்து வயதுப் பிள்ளைகளைப் பற்றிக் கேட்க வேண்டுமா! நாளாக ஆக அவர்களுடைய உள்ளத்தில் அடித்துக் கொண்டிருந்த புயலின் வேகம் அதிகமாகிக் கொண்டிருந்தது.

ஸ்ரீதரன் தனக்கு நிச்சயமாயிருந்த கலியாணத்தைத் தட்டிக் கழித்து விட்டான். பி. எல். படிக்கும் உத்தேசம் தனக்கு இருப்பதாகவும், நியாயவாதியாகப் போகிற தான் சட்ட விரோதமாய்ப் பன்னிரண்டு வயதுப் பெண்ணை மணக்கச்



சம்மதிக்க முடியாதென்றும், அடுத்த வருஷம் பார்த்துக் கொள்ளலாமென்றும் அவன் கூறினான். இதைப் பற்றிச் சகுந்தலை அவனைப் பாராட்டிய போது, பதினான்கு வயதுக்கு மேற்பட்ட பெண்ணாயிருந்தால் இவ் வருஷமே கல்யாணம் செய்து கொள்வதில் தனக்கு ஆட்சேபமில்லையென்று குறிப்பாகத் தெரிவித்தான்.

குப்புசாமி கல்யாணமாகி இரண்டு வருஷமாய் இல்வாழ்க்கையில் இருப்பவன். அவனுக்குத் திடீரென்று இப்போது விவாகப் பிரிவினை உரிமையில் விசேஷ சிரத்தை உண்டாயிற்று. "ஆனாலும் நமது சமூக ஏற்பாடுகள் மகா அநீதியானவை. மனிதன் தவறு செய்வது சகஜம். ஒரு தடவை தவறு செய்து விட்டால் அப்புறம் பரிகாரமே கிடையாதா! ஏதோ நல்ல நோக்கத்துடன் தான் கலியாணம் செய்து கொள்கிறோம். அது தவறு என்று தெரிந்த பின், இரு தரப்பிலும் கலந்து தவறை நிவர்த்தி செய்தல் ஏன் கூடாது! இதை நான் புருஷனுடைய சௌகரியத்துக்காகச் சொல்லவில்லை. புருஷன் தான் எவ்வளவு பேரை வேண்டுமானாலும் கலியாணம் செய்து கொள்ளலாமே! ஸ்திரீகளுடைய நன்மையை உத்தேசித்துத்தான் விவாகப் பிரிவினை முக்கியமாக வேண்டும். இஷ்டமில்லாத பந்தத்தில் அகப்பட்டுக் கொண்டு வாழ்நாள் முழுதும் கஷ்டப்படுவதை விட ஒரேயடியாக உயிரை விட்டு விடலாம்" என்று அவன் உபந்நியாசம் செய்தவண்ணமிருந்தான்.

கலியாணமாகாத கணையாழிப் பிள்ளைகளுக்கெல்லாம் இரவு பகல் ஒரே சிந்தனைதான். சகுந்தலையைத் தனிமையாக எப்படிச் சந்திப்பது! அவளிடம் தங்கள் மனோரதத்தை எப்படி வெளியிடுவது! இதற்குச் சந்தர்ப்பம் வாய்த்தல் நாளுக்குநாள் கஷ்டமாகி வந்தது.

ஸ்ரீ ரங்கநாதம் அவர்களின் தோட்ட வீட்டுக்கு இதுவரை கணையாழி இளைஞர்கள் வந்து கொண்டிருந்தது போதாதென்று, யுவதிகளும் அடிக்கடி வரத் தொடங்கினார்கள். அவர்கள் வருவதைப் பார்த்ததும் இளைஞர்கள் மெதுவாக நழுவி விடுதல் வழக்கமாயிருந்தது. இதைக் குறித்துச் சகுந்தலை அவர்களைப் பரிகசித்தாள். "இது என்ன! என்னிடம் உங்களுக் கில்லாத பயம் உங்களூர்ப் பெண்களைக் கண்டதும் உண்டாகிறது!" என்று கேட்டாள். அவர்கள் பதில் சொல்ல முடியாமல் திகைத்தபோது, "இருந்தாலும் ரொம்ப அநியாயம் செய்கிறீர்கள். இந்த ஊரில் காலேஜில் படிக்க நீங்கள் இவ்வளவு பேர் இருந்துகொண்டு ஸ்திரீகளை இவ்வளவு உலகமறியாதவர்களாய் வைத்திருக்கக் கூடாது. நீங்கள் உங்கள் பாட்டனார்களைப் போலவே இருந்தால், உங்கள் மனைவிகளையும் பாட்டிகளாக வைத்திருக்கலாம்" என்றாள்.

தங்களுக்கு வரப்போகும் மனைவிகளைப் பாட்டிகளாக எண்ணிப் பார்த்தபோது அவர்களுக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. ரகுராமன் ஒரு நிமிஷம் யோசித்து விட்டு, "எனக்கு வரப்போகும் மனைவிக்கு நான் எல்லா விஷயங்களிலும் பூரண சம உரிமை கொடுக்கத் தயார்" என்றான். ஆனால் சகுந்தலை அவனுடைய குறிப்பை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

இவ்விஷயத்தில் கல்யாணசுந்தரத்தின் அநுபவமும் அப்படியேதான் இருந்தது. சகுந்தலை ஒருநாள் அடுத்த கிராமத்துப் பெண் பாடசாலையைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று விருப்பம் தெரிவித்தாள். கல்யாண சுந்தரம் அவளை அழைத்துப் போக முன்வந்தான். எதிர்பாராமல் கிடைத்த இந்த அரிய சந்தர்ப்பத்தில் தன் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த காதலை வெளியிட்டு விடுவதென்று தீர்மானித்தான். ஆனால் பேச்சு இலகுவில் வரவில்லை.

ரொம்ப நேரம் தயங்கிய பிறகு, தட்டுத் தடுமாறிக் கொண்டு, "சகுந்தலை! நாம் இரண்டு பேரும் எங்கேயோ அதி வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறோம், இல்லையா!" என்றான் கல்யாண சுந்தரம்.

"நாமா! ரொம்ப மெதுவாக வல்லவா நடக்கிறோம்! மணிக்கு 2½ மைல் வேகங்கூட இராதே!" என்றாள் சகுந்தலை.

இதற்குப் பிறகு கொஞ்ச நேரம் அவனுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. வழியில் ஒரு மரக்கிளையில் ஆணும் பெண்ணுமாய் இரண்டு பட்சிகள் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் ஒரு யோசனை தோன்றிற்று.

"நாம் இருவரும் இரண்டு பறவைகளாக மாறி விடக் கூடாதா என்று தோன்றுகிறது. அப்போது உலகக் கவலை யென்பதேயின்றி, ஆகாயத்தில் என்றும் ஆனந்தமாய் உலவித் திரிந்து கொண்டிருக்கலா மல்லவா!" என்றான்.

"இப்போது ஆகாய விமானம் வந்து, மனிதன் பறவைகளைப் போல் பறக்க முடியுமென்று ஏற்பட்டு விட்டதே. இன்னும் பத்து வருஷத்தில் ஆகாய விமானம் சர்வ சாதாரணமாகி விடும். அப்போது நீங்கள், நான் எல்லாரும் தாராளமாய்ப் பறக்கலாம்" என்றாள்.

கல்யாணசுந்தரம் மௌனக் கடலில் ஆழ்ந்தான்.

## 9. அமைதி

ஒரு நாள் கல்கத்தா ரங்கநாதம் அவர்களின் வீட்டுக்கு ஒரு புதிய விருந்தாளி வந்திருப்பதாகக் கணையாழியில் செய்தி பரவிற்று. அவரைப் பார்த்தால் வடக்கத்தியார் மாதிரி இருக்கிறதென்றும், அவரை எதிர்கொண்டு அழைத்துச் செல்வதற்கு ரங்கநாதமும் அவர் புதல்வியும் ஸ்டேஷனுக்குப் போயிருந்தார்களென்றும், வந்தவருடன் கை கோத்துக் கொண்டு சகுந்தலை ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் நடந்தாளென்றும், இன்னும் இந்த மாதிரி சில்லறை விவரங்களும் அந்தரத் தபால் மூலம் பரவின.

நல்லவேளையாக, கணையாழி வாசிகளின் உண்மையறியும் ஆவல் அதிகமாக வளருவதற்கு இடம் ஏற்படவில்லை. ஏனென்றால், ஸ்ரீ ரங்கநாதம் அவ்வூரில் தமக்கு அறிமுகமான இளைஞர்களை எல்லாம் அன்று மாலை ஒரு சிற்றுண்டி விருந்துக்கு அழைத்திருந்தார். எல்லாரும் கூடியதும், அவர் புது விருந்தாளியைச் சுட்டிக் காட்டி "இவர்தான் சகுந்தலையின் கணவர். பெயர் ஷியாம் பாபு. இவரை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கவே இச்சிறு விருந்துக்கு உங்களை அழைத்தேன்" என்றார். இப்படி அறிமுகம் செய்து வைக்கப்பட்டவர் சுமார் இருபத்தைந்து வயதுள்ள ஒரு வங்காளி இளைஞர்.

அப்போது அங்கே கூடியிருந்த வாலிபர்கள் எல்லாருடைய மனமும் என்ன நிலையடைந்திருக்கு

மென்று நினைக்கிறீர்கள்! காதல் சாஸ்திர விதிகளின்படி அவர்கள் மனோநிலை எப்படி ஆகியிருக்க வேண்டுமென்பதை நான் அறியேன். உண்மையாக நடந்தது மட்டுமே எனக்குத் தெரியும். சென்ற மூன்று மாத காலமாய் அவர்கள் உள்ளத்தில் அடித்துக் கொண்டிருந்த பெரும் புயல் திடீரென்று ஓய்ந்து, ஆழ்ந்து நிறைந்த அமைதி அங்கு நிலவலாயிற்று. பரபரப்பெல்லாம் பழைய கதையாய் விட்டது. அன்று காப்பி சாப்பிட்டபோது யாரும் சட்டையில் கொட்டிக் கொள்ள வில்லை.

ஷியாம் பாபு கல்கத்தாவில் ஒரு கலாசாலை ஆசிரியர் என்றும், சத்தியாக்கிரஹ இயக்கத்தில் ஈடுபட்டுச் சென்ற இரண்டு வருஷமாய்ச் சிறையில் இருந்தாரென்றும், அவருடைய நெற்றியில் காணப்பெற்ற பெரிய காயத்தின் வடு ஸார்ஜெண்டின் தடியடியினால் ஏற்பட்டதென்றும், இப்போது மறுபடியும் கல்கத்தா திரும்பியதும் கலாசாலை ஆசிரியர் பதவியை அவர் ஏற்றுக் கொள்ளப் போகிறாரென்றும் சம்பாஷணையின்போது தெரிய வந்தது.

"உங்களுக்கெல்லாம் நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த மூன்று மாதமும் எப்படிச் செல்லப் போகிறதோ என்று பயமாயிருந்தது. உங்களுடைய சிநேகத்தினால் எவ்வளவோ சந்தோஷமாயும் உபயோகமாயும் காலம் போயிற்று. இரண்டு மூன்று நாளில் பிரயாணம் கிளம்பி விடுவோம். தமிழ்நாடு முழுவதும் சுற்றிப் பார்த்து விட்டுக் கல்கத்தா போகிறோம். உங்களையெல்லாம் விட்டுப் பிரியப் போகிறோமே என்றிருக்கிறது" என்றாள் சகுந்தலை.

இதற்கு அடுத்த நாலாம் நாளன்று கல்கத்தா ரங்கநாதம் அவர்களின் வீடு பூட்டப் பெற்றுக் கிடந்தது.

*கணையாழியின் வீதிகளில் முன்போல் குப்பைகள் சேரலாயின!*

(முற்றும்)

# ஒவ்வொரு நாளும் ஜனங்கள் 24,90,496

# ப்ரூக் பாண்ட் தேயிலை

## பாக்கெட்டுகளை வாங்குகிறார்கள்



அதற்குச் சிறந்த காரணங்கள் உள்ளன...

**முதல் காரணம் அதன் புத்தம்புதிய தன்மையே**

ப்ரூக் பாண்ட் தேயிலை அதிவேகமாக தோட்டத்திலிருந்து கடைகளுக்கு அனுப்பப்படுவதால் அது அவர்களுக்கு என்றும், எப்பொழுதும் புதிதாகக் கிடைக்கிறது.

**மற்றொரு காரணம் அது பரிசுத்தமாக இருப்பதே**

காற்றுப் புகாமல் நன்றாக பாக் செய்யப்படுவதால் ப்ரூக் பாண்ட் தேயிலை மாசு மருவற்று, கலப்பற்று, களங்கமற்று, சுத்தமாகக் கிடைக்கிறது.






**யோசித்து வாங்குங்கள்! செலவைக் குறையுங்கள்!**

ருசியாகவிருக்கட்டும். ப்ரூக் பாண்ட் தேயிலையே உங்களுடைய பணத்திற்கு அதிகப்படியான, ருசியான தேநீரை அளிக்கிறது.



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ

## 45. மக்கள் மாண்பு

ஆலைத் தொழிலாளிகள் அக்கிரமம் எல்லை மீறி விடவே, குஸுமாவின் கார் மீது கல்லை எறிந்து விட்டுத்தான் மறு காரியம் பார்த்தார்கள். அதனால் அவர்களது தலைவர்களான சுகபால், சாந்திப்பிரியன், மனோஹர் மூவருக்கும் மனவருத்தம் ஏற்பட்டது. தொழிலாளர்கள் அத்தகைய துர்ச் செயலில் இறங்கியது அவர்களுக்குத் தவறாகவும் பட்டது. காரணம், அன்று அவர்கள் முதலாளிகளோடு சமாதானம் செய்து கொண்டு ஒரு முடிவுக்கு வருவதாயிருந்தார்கள். அந்த முடிவுக்குத் தொழிலாளிகளின் செயல் குந்தகமாக முடியலாம் அல்லவா? அதோடு அன்று குஸுமாவுக்குப் பிறந்த நாள் வேறு. எல்லாவற்றுக்கும் மேலாக அவளது பிறந்த நாள் அழைப்பை ஏற்று அவர்கள் விருந்துக்கும் போயிருந்தார்கள். உண்ட வீட்டுக்கு இரண்டு நினைப்பது நியாயமா? நியாயமாகவே இருந்தாலும் அதை நேர்முகமாக யார் தான் ஏற்றுக் கொள்வார்கள்? அதோடு அவர்கள் தரப்பைச் சேர்ந்த தொழிலாளிகளே ஒரு பெண்ணின் மீது கல்லை எறிவதென்றால், அதைவிட ஈனத்தனமான காரியம் வேறு என்ன வேண்டும்? ஒரு பெண்ணின் மீது கல்லை எறிவதே பெருந் தவறு. அதுவும் அந்தப் பெண் யார்? ஆலை முதலாளியின் அருமை மகள்! அவள் மீது அந்த மூன்று தலைவர்களுக்குமே ஒரு கண்! மனத்தில் மிருதுத் தன்மையையும் காரியத்தில் கடினத் தன்மையையும் காட்டுவது யாருக்குத்தான் பிடிக்கும்?

ஜுகல் கிஷோர்தான் பின்னால் நின்று கொண்டு கல் எறியத் தூண்டியிருக்க வேண்டும் என்று சுகபாலுக்குத் தோன்றியது. ஆனால் அவன் எண்ணுவது வெறும் பிரமை என்றும் அப்படி இருக்க முடியாது என்றும் மற்ற இருவரும் சாதித்தார்கள்.

தலைவர்கள் தேற்றியதனாலும், சிப்பாய்களின் கையில் இருந்த துப்பாக்கிகளினாலும், பிஹாரிலாலின் பயமுறுத்தல்களினாலும், ஜுகல்கிஷோரின் சாதுரியத்தினாலும் மக்கள் மறுபடியும் கொஞ்சம் அமைதியுற்றனர். அதன் பலனைக் குஸுமா சிரமம் ஏதுமின்றிச் சௌகரியமாகப் பங்களாவுக்குள் நுழைந்தாள். அவ்வளவு காரியங்கள் அடுத்தடுத்து நடக்கவில்லையென்றால், அவள் சௌகரியமாகப் பங்களாவுக்குள் போய்ச் சேர்ந்திருக்க முடியாது?

தொழிலாளிகள் குழப்பம் விளைவிக்கிறார்கள் என்னும் செய்தி உடனே போலீஸுக்கு அறிவிக்கப்பட்டது. அந்தச் சூட்டோடு சூடாக ஸர் பிஹாரிலாலின் பங்களாவுக்கும் போனில் செய்தி பறந்தது. உடனே பிஹாரிலால் ரமேஷை அனுப்புவதாகச் சொன்னார். அதே கையோடு கையாக அவனை ஆலைக்கு அனுப்பி வைக்கவும் செய்தார். ரமேஷ் அதிவேகமாக நிகழ்ச்சி நடந்த இடத்துக்கு விரைந்தான். போலீஸார் கோஷ்டியும் அவன் போய்ச் சேருவதற்குள்ளாக அங்கே ஆஜராகி யிருந்தது.

ரமேஷ் அந்தக் கூட்டத்துக்குள் புகுந்து உள்ளே செல்ல முயன்றான். ஆனால் அவன் சொல்லைக் கேட்டு அங்கே அவனுக்கு வழி விட யார் தயாராயிருந்தார்கள்? ஒருவர் பேச்சை இன்னொருவர் காதில் வாங்கிக் கொள்ளும் நிலைமையில் அப்பொழுது அவர்கள் இருந்தால்தானே?

கலகத்திலும் ஒரு வெறி, ஒரு ஆனந்தம், ஒரு குஷி, ஒரு இன்பம் இருக்கத்தான் செய்கிறது. கும்பல் கூடும் இடத்திலே ஒரு சந்தை இரைச்சல் இருப்பது வழக்கம்தான். தொழிலாளிகள் இருக்கும் இடத்திலே கும்பலுக்குக் கேட்பானேன்? அதுவும் கலகக் கும்பல் என்றால் காது செவிடுபடும்படியான கோஷங்கள் எழுவது இயல்புதானே?

அரை மணி நேரம் கும்பலுக்குள் புகுந்து அல்லாடிய பிறகுதான் ரமேஷ் ஜுகல் கிஷோரைப் பார்த்தான்; ஜுகல்கிஷோரும் ரமேஷைப் பார்த்தான். உடனே ஜுகல் கிஷோர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு எப்படியோ ரமேஷின் அருகில் வந்து சேர்ந்தான். அப்போது ரமேஷ் வாய் கிழிய இரைந்து ஏதோ கூறிக் கொண்டிருந்தான். அதைக் கண்ட ஜுகல் கிஷோர், "ஏன், அப்பா! என்ன சொல்லிக் கொண்டிருக்

கிறாய்? இந்தச் சந்தை இரைச்சலில் உன் சொல்லை யார் கேட்கப் போகிறார்கள்? இப்படியெல்லாம் உன் பிரசங்கத்தை வைத்துக்கொண்டு என்ன பிரயோசனம்?" என்று கூறி ஏளனமாகச் சிரித்தான்.

"தொழிலாளிகளுக்கு லாபகரமான விஷயம் ஒன்றைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்று முயற்சிக்கிறேன். ஆனால் இவர்கள் காதில் வாங்கிக் கொள்ள மாட்டேன் என்கிறார்கள். குஸூம குமாரி இன்று தந்தையிடமிருந்து தனக்குப் பிறந்த நாள் பரிசாகக் கிடைத்திருக்கும் வெகுமதித் தொகையைத் தொழிலாளர்களின் நலனுக்கென்று நன்கொடையாக அளிக்கத் தீர்மானித்திருக்கிறாள்! அதைச் சொல்லலாம் என்றால்......" என்றான் ரமேஷ்.

"என்ன? நிஜமாகவா? எத்தனை ரூபாய்?" என்று கேட்டான் ஜுகல் கிஷோர்.

"இருபதினாயிரம் ரூபாய்! இதோ பாருங்கள். குஸூமாவின் கடிதத்தை!" என்று சொன்ன ரமேஷ் தன் சட்டைப் பையிலிருந்து குஸூமாவின் கடிதத்தை எடுத்து ஜுகல் கிஷோருக்குப் படித்துக் காட்டினான்.

குஸூமாவுக்குப் பின்னாலேயே அவளைத் தொடர்ந்து சென்று கொண்டிருந்த சுகபால், சாந்திப் பிரியன், மனோஹர் மூவரும் அவளுடனேயே பங்களாவுக்குள் சென்றுவிட்டார்கள். அதனால் அவர்களுக்கு வெளியே என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டிய பிரமேயமே ஏற்படவில்லை: அப்படியே ஏற்பட்டதென்றாலும் அதை அவர்கள் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. காரணம், அதைக் காட்டிலும் அவர்கள் பிராணலாலிடம் தங்களது சமாதான விபந்தனைகளைக் கூறி ஒரு முடிவுக்கு வர வேண்டியதை முக்கியமாகக் கருதியது தான். அந்தப் பெரிய காரியத்தைக் கருத்தில் கொண்ட அவர்களுக்குத் தொழிலாளிகள் எக்கேடு கெட்டுப் போகிறார்கள் என்ற கவலையெண்ணம் ஏற்படாததில் என்ன வியப்பு?

வெளியே ரமேஷும் ஜுகல் கிஷோரும் மேற்கூறிய நன்கொடையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அநேகர் அவர்கள் பேச்சுப் புரியாததனால் எள்ளி நகையாடும் தோரணையில் கூச்சல் போட்டார்கள். வேறு சிலர் முதலாளியை வாயில் வந்தபடி திட்டிக் கொண்டும் வைது கொண்டும் இருந்தார்கள். மற்றும் சிலர் தலைவர்களைத் தாக்கிக்கொண்டிருந்தார்கள். சிலர் தங்களுக்குள் குசுமுசு வென்று ஏதோ ரகசியம் பேசுபவர்களைப்போல் பேசிப் பலருடைய கவனத்தைக் கவர்ந்துகொண் டிருந்தார்கள். இம்மாதிரி தலைக்குத் தலை பேசும் பேச்சு அந்தச் சூழ்நிலையில் ஒரு விசித்திரமான கோலாகலத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது.

ஜுகல் கிஷோர் தன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த நான்கைந்து ஆசாமிகளைப் பார்த்து, "கொஞ்சம் அமைதியாக இருங்கள். உங்களுக்கு இருபதினாயிரம் ரூபாய் கிடைக்கப் போகிறது!" என்றான். அவன் சொன்னது காட்டுத் தீ போல் கூட்டத்தினிடையே பரவியது. உடனே அந்தப் பெருமையைத் தான் அடித்துக் கொண்டு போகலாம் என்ற எண்ணத்துடன் ஜுகல்கிஷோர் உரத்த குரலில் மக்களைப் பேசாமல் இருக்குமாறு கேட்டுக் கொண்டான்.

ஜுகல் கிஷோர் தன் சொற்களை ஆமோதிப்பதற்கென்றும், தன் சொற்படி நடப்பதற்கென்றும் கூட்டத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் தன் ஆசாமிகளை நியமித்திருப்பானோ என்று தோன்றியது.

ஏனெனில் அவன் அமைதியாக இருக்கும்படி கேட்டுக் கொண்ட சில விநாடிகளுக்கெல்லாம், ஒவ்வொரு மூலையிலிருந்தும் ஜனங்கள், "உஷ்! சத்தம் போடாதீர்கள், சத்தம் போடாதீர்கள்!" என்று கூச்சலிட்டனர். சில நிமிஷங்கள் அமைதியை நிலைநாட்டுவதற்காகக் கூச்சல் எழுந்தது. அப்புறம் தொழிலாளர்களின் கும்பல் நிசப்தமாக அடங்கி விட்டது. ஜுகல் கிஷோர் உடனே ரமேஷைப் பார்த்துச் சொல்ல வேண்டியதைச் சொல்லுமாறு சமிக்ஞை காட்டினான்.

ரமேஷ் தனது இயல்பான குரலைக் காட்டிலும் சிறிது உரத்த குரலில், "நீங்கள் எல்லோரும் உங்கள் எசமானருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய முற்பட்டிருக்கிறீர்கள். ஆனால் அதே முதலாளியின் அருமை மகள் உங்கள் நலனை உத்தேசித்துத் தனக்குக் கிடைத்திருக்கும் பிறந்த நாள் பரிசான இருபதினாயிரம் ரூபாயையும் மிக்க மகிழ்ச்சியுடன் செலவிடத் திட்டமிட்டிருக்கிறாள்!' என்று பிரகடனப்படுத்தினான்.

கூட்டத்தில் இருந்த ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்குத் தனிப்பட்ட முறையில் இருபதினாயிரம் ரூபாய் கிடைத்து விட்டது போன்ற மகிழ்ச்சி மிதப்பில் கூவிக் கொம்மாளமிட்டனர். தொழிலாளிகளுக்கு உரிமை, நியாயம் போன்ற வெறும் சொற்களைக் காட்டிலும் பணம் கிடைக்கிறது என்ற நேரிடையான சொல் மிகவும் பிடித்திருந்தது. சுற்றி வளைத்துப் பேசும் பேச்சைக் காட்டிலும் செயல்தானே பொதுவாக எல்லோருக்கும் அதிக மகிழ்ச்சியை அளிக்கிறது?

ஜனங்கள் மீண்டும் அமைதியை நிலைநிறுத்தி ரமேஷின் பேச்சைக் கேட்க ஆவலுடன் தயாராயினர்.

"குஸூம குமாரி அளிக்கும் இந்த நன்கொடை உங்கள் நலனுக்கு உபயோகப்படும். உங்கள் குழந்தை குட்டிகளைக் கவனித்து நல்ல முறையில் பராமரிக்க உதவியாயிருக்கும்!" என்று முடித்தான் ரமேஷ்.

மக்கள் மறுபடியும் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து ஆரவாரம் செய்தனர்.

ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு புது மாதிரியான அர்த்தம் கொடுத்து அதை விபரீதமாக்கி வைக்கும் கலையில் கைதேர்ந்த ஜுகல் கிஷோர் மெதுவான குரலில், "இப்போ



மூது சொல்லுங்கள்! உங்கள் உண்மையான தலைவர் இதோ இருக்கும் இந்தப் புண்ணியவானா அல்லது உள்ளே ஆனந்தமாக மின்சார விசிறியின் அடியில் உட்கார்ந்து வம்பு அடிக்கும் அந்தத் தலைவர்களா?" என்றான்.

ஒன்றுகூடி ஓரினமாக வாழும் மக்கள் பெரும்பாலும் பட்சபாத குணம் அற்றவர்கள். இன்னார் வேண்டும், இன்னார் வேண்டாம் என்ற விருப்பு-வெறுப்புக்கு இடம் கொடாதவர்கள். அவர்கள் தங்களுக்கேற்ற தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் விதமே அலாதி. பண மூட்டைகளையோ பெரிய ஆசாமிகளையோ பார்த்துத் தங்கள் தலைவர்களாக்க வேண்டும் என்று அவர்கள் எண்ணுவதில்லை. அவர்கள் மனத்துக்கு ஒருவன் பிடித்தவனாயிருந்துவிட்டால், உடனே அவனைத் தங்கள் தலைவனாக்கிக் கொண்டு விடுவார்கள். அவன் அவர்களது நலனைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாப்பவனாக இருந்துவிட்டால், அப்புறம் கேட்க வேண்டுமா? அவர்கள் நன்மையில் அக்கறை காட்டிய ரமேஷ் அடுத்த நிமிஷமே அவர்களுக்குத் தங்கள் தலைவனாகத் தோன்றத் தொடங்கி விட்டான். உற்சாகம் மிகுந்த சிலர் உணர்ச்சி வெறி பீறிட்டு எழவே, ஓடி வந்து ரமேஷைத் தூக்கித் தோள் மீது வைத்துக் கொண்டு பங்களாவை நோக்கி ஓடினார்கள். தங்கள் நலனை உத்தேசித்துப் பெரும் பொருளை நன்கொடையாக அளித்த குஸுமாவைக் கண்டு கல் எறிந்த பாவத்துக்குப் பிராயச் சித்தம் தேடும் முறையில் அவளிடம் நேரில் சென்று மன்னிப்புக் கேட்க விரும்புவதாகப் பலர் புகன்றனர்.

ஜனங்கள் குழப்பம் எதுவும் செய்யாமல் சாந்தமாக இருக்கவே, போலீஸ் நடுவில் விழுந்து குளறுபடி செய்யாமல் பேசாமல் நின்றது. ஜனங்கள் மகிழ்ச்சிக் கூச்சலிடுவதைக் கேட்டு உள்ளேயிருந்தவர்கள் வெளியே எட்டிப் பார்க்கலாயினர். மனிதனது தோள்களும் கைகளும் குழந்தைகள் குவியாக உட்கார்ந்து சந்தோஷப்படுவதற்கான சாதனங்களாக இருக்கலாம். ஆனால் ரமேஷைப் போன்ற வாலிபனுக்கு அதில் கஷ்டமும் தன் இஷ்டப்படி இருக்க முடியாத அடிமைத்தனமும் இருப்பதாகத் தோன்றியது. அதனால் தொழிலாளர்களின் தலையிலிருந்து மெதுவாக இறங்க முயற்சித்துக் கொண்டிருந்தான்.

அதைப் பார்த்த சாந்திப் பிரியன் சிரித்து, "ரமேஷ் என்னவோ ஜனங்களின் மீது ஏறி நடனம் ஆடுகிறான் போலத் தோன்றுகிறதே!" என்றான்.

அவன் பேச்சைக் கேட்டு எல்லோரும் 'கட கட'வென்று சிரித்தனர். ஆனால் குஸுமாவின் பார்வை ரமேஷின் மீது நிலைத்து விட்டது. அவள் சாந்திப் பிரியனின் பரிகாசத்தையும் அதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்ததையும் கவனிக்கவில்லை. "ரமேஷை இங்கே வரச் சொல்!" என்று தன் பலம் கொண்டமட்டும் இரைந்து கூவினாள்.

குஸுமாவைப் பார்த்ததும் ஜனங்கள் மேலும் மகிழ்ச்சி வெறியில் மூழ்கி, வான் முட்டக் கோஷமிட்டனர். கைகளையும் கைக்

குட்டைகளையும் அசைத்து மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். கும்பலின் மகிழ்ச்சியும் கோபமும் நினைத்த மாத்திரத்தில் நின்றுவிடக் கூடியதா? எல்லை கடந்து 'போதும், போதும்' என்று சொல்லக் கூடிய அளவுக்கு அதிகரித்து விட்டு அப்புறம் தானே நிற்கும்?

ரமேஷ் மிகவும் பிரயாசைப்பட்டுத் தன் சட்டைப் பையிலிருந்த காகிதத்தை எடுத்தான். அதில் என்ன எழுதியிருந்தது என்பதை அறிந்து கொள்ளுவதற்காக ஜனங்கள் மௌனத்தைக் கடைப் பிடித்தனர். அப்பொழுது ஜுகல்கிஷோர் உரத்த குரலில், "நண்பர்களே! சகோதரி குஸுமா அளித்த நன்கொடையைப் பிரகடனப் படுத்தும் காகிதம் இது!" என்றான்.

ஜனங்கள் கை தட்டி ஆர்ப்பரித்தனர். பிறகு குஸுமாவுக்கு வணக்கம் தெரிவிக்கும் முறையில் கைகளைக் குவித்துத் தலையைத் தணித்தனர். இதற்குள் ரமேஷ் மெதுவாகத் தன்னைத் தூக்கிக் கொண்டிருந்தவன் தலையிலிருந்து இறங்கி விட்டான்.

சுகபாலுடைய முகத்திலும் சாந்திப்பிரியனுடைய முகத்திலும் கூட்டத்தின் செய்கை பிடிக்க வில்லை என்பது போலத் திரஸ்காரம் தொனித்தது. அதைக் கவனித்த ஜுகல்கிஷோர் பக்கத்தில் நிற்பவர்களுக்கு மட்டும் கேட்கும்படியான குரலில், "அதோ நிற்கிறார்களே, அவர்கள்தான் அப்பா உங்கள் தலைவர்கள்! 'கழுவில் ஏறுங்கள், நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறோம்' என்று கூறி உங்களைப் பட்டினி போட்டுக் கொல்லப் பார்க்கிறார்களே, அந்த மகானுபாவர்கள்தான் இவர்கள்! மாடியில் நின்று கொண்டு இந்த வேடிக்கையை எவ்வளவு ரசித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், பாருங்கள்!" என்றான்.

இதைக் கேட்டதும் ஜனங்கள் தங்களது அந்த மதிய தலைவர்களை எள்ளி நகையாடும் தோரணையில் கேலி நின்றவண்ணமே பரிகாசம் செய்தனர். தொழிலாளிகளில் சில திறமைசாலிகள் ஒப்பந்தக் காரியத்தைக் கவனிக்க ஜுகல் கிஷோரையும் ரமேஷையும் போகுமாறு வேண்டிக் கொண்டு வற்புறுத்தி உள்ளே அனுப்பி வைத்தனர்.

சாந்திப்பிரியனுக்கு அதைக் கண்டபோது உள்ளம் கொதித்தது. "ரமேஷ்! நீ நிமிஷத்தில் பெரிய மனிதனாகி விட்டாய் போலிருக்கிறதே! பலே கைகாரன்தான், அப்பா!" என்று இளக்காரம் செய்தான்.

"பெரிய மனுஷ்யனாகும் தொழில் உங்களைச் சேர்ந்தது. எனக்கும் அதற்கும் வெகுதூரம். நான் யாரிடம் வேலை பார்க்கிறேனோ, அவர் காரியத்தைக் கவனிப்பதற்காகத்தான் இங்கே வந்திருக்கிறேன்!" என்றான் ரமேஷ்.

"உன் கையில் அது என்ன காகிதம்? யார் நன்கொடை அளித்தார்கள்? எதற்காக அளித்தார்கள்?" என்று கேட்டான் சுகபால்.

"உங்களுக்குத் தெரியாதா? 'நாங்கள் தொழிலாளர் தலைவர்கள்' என்று சொல்லிக் கொண்டு சுற்றுகிறீர்களே! சகோதரி குஸுமாவுடன் நட்புரிமை கொள்வதற்காக நாய் போலச் சுற்றிச் சுற்றித் திரிகிறீர்களே!" என்று ஜுகல் கிஷோர் சற்றுக் கடுமையாகவே வார்த்தைகளை வீசி விட்டான்.

ஜுகல் கிஷோர் மகா பயங்கரமான ஆசாமிதான். அவனை நண்பன் என்றும் நினைக்க முடியாது, விரோதியாகவும் பாராட்டிவிட முடியாது. பாம்பு என்றும் தாண்ட முடியாது, பழுதை என்றும் மிதிக்க முடியாது என்பார்களே, அது போலத்தான். அதனால்தான் அவனைக் கண்டால் யாருக்குமே அதிகமாகப் பிடிப்பதில்லை.



புரசைவாக்கம் ஸர் எம். ஸிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளி மாணவர்களும், ஆசிரியர்களும் "போஜன்" என்ற நாடகத்தை பெப்ருவரி மாதம் 19ம் தேதி வெகு சிறப்பாக நடித்துக் காட்டினர். நாடகத்துக்கு 'கல்கி' ஆசிரியர் திரு 'சோமு' அவர்கள் தலைமை வகித்துப் பாராட்டிப் பேசினர். "போஜன்" நாடகத்தில் நடித்த மாணவர்களையும், ஆசிரியர்களையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

பிறரைப் பற்றி விமரிசனம் செய்யும் பொழுது அவன் முகம் போகும் பயங்கரத்தைப் பார்க்க வேண்டுமே! அப்பப்பா! பெரியபெரிய போக்கிரிகள் கூட அவன் விமரிசனத்துக்குப் பதில் சொல்வதென்றால் சற்று யோசிக்கத் தான் செய்வார்கள்.

அப்படியிருக்கும் பொழுது நாகரிகமாகப் பழகும் பண்பு வாய்ந்த சுகபாலும் சாந்திப் பிரியனும் எப்படிப் பதில் சொல்வார்கள்? அதனால் அவர்கள் பேசாமலே இருந்தார்கள். அவர்

மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே!

**உங்கள் வாய்துர்நாற்றத்தை** அகற்றுகையில்

**உங்கள் பற்களை சுத்தி செய்து**

**அவற்றை சொத்தையாகாமல் தடுக்கிறது**




DCG/23

---

ஜாம்-பெக்கினால் அந்த எக்ஸிமா,
மண்டை சருமநோய், மற்றும் சிரங்கை
ஒழித்து விடுங்கள்

# Zam-Buk





ஜாம்-பெக் உலகிலேயே மகோன்னதமான சருமக்களிம்பு. ஜாம்-பெக் புண்ணை ஆற்றி அரிப்பை நிறுத்தும். ஜாம்-பெக் சருமத்தினுள் புகுந்து, நோயுற்ற தசைநார்களை சுத்தம் செய்து விரைவில் சருமத்திற்கு அழகும் தசைக்கு ஆரோக்கியமும் ஊட்டும். விஷகாயங்கள், கொப்புளங்கள் சீப்பிடித்த புண்கள் முதலியவற்றை குணப்படுத்துவதிலும், பூச்சிக்கடிகளை பரிசுத்தமாக்குவதிலும், கால்வலி மற்றும் ரணங்களை ஆற்றி சமனமூட்டுவதிலும், ஜாம் - பெக்கின் சக்தி அற்புதமானது. அநேக மதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களடங்கிய ஜாம்-பெக்கில் க்ளோரோபில்லும் சேர்ந்திருப்பதால் அதன் சமன குணமும் தசைநார் புஷ்டி மற்றும் இதர பயன்களும் கிடைக்கின்றன.

மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

ஜாம் - பெக்கினால் குணம் பெறுவீர்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-35 TAM.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்

கன் அப்படியிருந்தது பார்க்கப் போனால் பல விதத்திலும் நியாயந்தானே? சுகபால் பதில் சொல்லவில்லையே ஒழிய அவன் முகத்தில் ஜுகல்கிஷோரைக் காணவே பிடிக்கவில்லை என்ற பாவம் தொனித்தது. உள்ளம் பற்றியெரிந்தால் யாருக்குமே முகத்தில் கடுகடுப்புத் தோன்றுவது சகஜந்தானே?

சுகபாலின் முக பாவத்தைப் பார்த்த ஜுகல்கிஷோர் அலட்சியமாக ஒரு முறை நகைத்தான். ரமேஷ் காகிதத்தில் எழுதியிருந்த விஷயத்தைப் படித்துச் சொன்னான். அதைக் கேட்டதும் மனோஹர் குஸுமாவின் பக்கம் திரும்பி, "என்னிடம் இதை நீங்கள் ஏன் முன்பே சொல்லவில்லை? சொல்லியிருந்தால் இத்தனை தூரம் காரியம் மிஞ்சிப் போயிருக்காதே!" என்றான்.



மார்ச் மாதம் 6-ம் கும்பகோணத்துக்கு அருகில் இருக்கும் அம்மா சத்திரத்தில் "அன்னதானசிவன் அனாதை மாணவர் இல்லம்" முதல் ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குக் குடந்தை ரெவினியூ டிவிஷனல் ஆபீசர் திரு என். ராமகிருஷ்ணன் தலைமை வகித்தார். அன்னதான சிவன் சங்கத்தின் தலைவராக இருந்து மாணவர் இல்லத்தை ஆரம்பித்து வைத்த ஸ்ரீ கல்கி அவர்களின் திரு உருவப் படத்தைத் திருவாளர் தேவன் திறந்து வைத்தார். மேற்படிசங்கத்தின் காரியதரிசி திரு டி. எஸ். ராமநாதன் வரவேற்புரை நிகழ்த்துவதைப் படத்தில் காணலாம். போட்டோ : வி. ஆர். மூர்த்தி

"உங்களிடம் சொல்ல எனக்குப் பொழுது எங்கேயிருந்தது? நான் வரும்பொழுதுதான் இங்கே ஏகக் களேபரமாகக் கிடந்ததே! ஒருவர் பேச்சை ஒருவர் காதில் வாங்கிக் கொள்ளும் நிலையிலா நாம் அப்பொழுது இருந்தோம்?" என்றாள் குஸுமா.

"ஆமாம், குஸுமாவை இங்கே எதற்காக அழைத்து வந்திருக்கிறீர்களாம்?" என்று கேட்டான் ஜுகல் கிஷோர். தன் கேள்விக்கு யாரும் சரியான பதில் சொல்ல மாட்டார்கள் என்றே அவன் எண்ணினான்.

ஆனால் மனோஹர் அவன் கேள்விக்கு விடை அளித்தான். "இவர்கள் இங்கே வந்திருப்பதனால் சமாதானம் சீக்கிரம் ஏற்படலாம். ஜனங்களை அடக்கி ஆள முடியும் என்று எண்ணி நம் வக்கீல் சுகபால்தான் அழைத்து வந்தார்!" என்றான்.

"இப்படி அழைத்து வருவதனால் பெரும் ஆபத்தை விலைக்கு வாங்க நேருமே என்று உங்களில் யாரும் எண்ணிப் பார்க்கவில்லை போலிருக்கிறது!" என்று சொன்ன ஜுகல் கிஷோர் சிரித்தான்.

அதேசமயம் திடுதிடுப்பென்று பிராணலால் அங்கே வந்தார். 'உலகத்தில் பிரளயம் வந்து விட்டது!' என்பதை அறிவிப்பதற்காக ஒருவன் ஓடி வந்தால், அந்தத் துர்ப்பாக்கியசாலியின் முகத்தில் எத்தகைய அமைதியின்மை, கலவரம், பரபரப்பு, படபடப்பு, கோபம், கவலை ஆகிய உணர்ச்சிகள் ஒன்றையொன்று மோதிக் கொண்டு வெடித்து வரும்? அத்தகைய உணர்ச்சிக் குமுறல்கள் அவர் முகத்தில் தாண்டவமாடிக் கொண்டிருந்தன.

"ஏன், மிஸ்டர் பிராணலால்! உங்களுக்கு இப்பொழுது நேரம் இருக்கிறதா? இருந்தால் நம் நிபந்தனைகளைப் பற்றிப் பேசலாமே!" என்றான் சாந்திப்பிரியன்.

"நேரமும் ஆச்சு! மண்ணாங்கட்டியும் ஆச்சு! உன் நிபந்தனைகளை யெல்லாம் கொண்டு போய் உடைப்பில் போடு! இங்கே யாருக்கு வேண்டியிருக்கிறது உன் நிபந்தனை! இந்த ஆசாமிகள் என்ன அக்கிரமம் செய்து விட்டார்கள், தெரியுமா?" என்று கடுவன் பூனையாகச் சீறினார் பிராணலால்.

"என்ன ஆச்சு? சொல்லுங்கள், சொல்லுங்கள்!" என்று அவர் பேச்சைப் பார்த்த பலரும் ஏக காலத்தில் கேட்டனர்.

"என்ன ஆகிறது? என் மேஜையிலிருந்து பதினையாயிரம் ரூபாய் நோட்டுகள் எப்படியோ கால் கை முளைத்து மாயமாக மறைந்து விட்டன!" என்று உள்ளங் குமுறப் பதில் அளித்தார் பிராணலால்.

அதைக் கேட்டதும் அங்கிருந்தவர்கள் ஒருவரையொருவர் விழித்துப் பார்க்கலாயினர். உண்மை பேசும் விஷயத்தில் பிராணலாலுக்கு அவருடைய ஜன்மச் சத்துருக்களிடம்கூட மட்டும் மரியாதையும் மிகுந்த மதிப்பும் உண்டு. அவர் ஒரு பொழுதும்

பொய் பேச மாட்டார் என்ற விஷயத்தில் எல்லோருக்குமே திடமான நம்பிக்கை. அதனால் அவர்கள் அவ்வளவு பேரும் அயர்ந்து போய் என்ன பேசுவதென்று கூடப் புரியாமல் பதுமையாக நின்றனர்.

"ஆமாம், நீங்கள் கடைசியாக அந்த நோட்டுக்களை எப்பொழுது பார்த்தீர்கள்?" என்று கேட்டான் சுகபால்.

"என்னத்தை எப்பொழுது பார்த்தேன்! என்ன கேள்வி இது? நீங்கள் எல்லோரும் வந்தீர்களே. ஜனங்கள் எல்லோரும் கூச்சல் போட்டுக் குழப்பம் செய்தார்களே! அப்பொழுது மேஜை டிராயரைப் பூட்டி விட்டுக் கீழே வந்தேன். அப்புறம் போய்ப் பார்த்தால் பணத்தைக் காணவில்லை. என்றைக்கும் இல்லாத திருநாளாக இன்றைக்கு மட்டும் எப்படித்தான் சாவியை மறந்து அங்கேயே வைத்துவிட்டு வந்தேனோ. புரியவில்லை. போதாத காலம் வந்தால் புத்தி இப்படித்தான் கெடும் போலிருக்கிறது!" என்றார் பிராணலால்.

"அது இருக்கட்டும். அப்பொழுது அங்கே வேறு யார் யார் இருந்தார்கள்?"

"வேறு யார் இருந்தார்கள்?... ஆமாம், ஆமாம். நம் ரமேஷுக்குத் தெரிந்தவர் இருந்தார் அவர் பெயர் கூட....என்னவோ சொன்னாரே! இருங்கள். சொல்கிறேன்!... அவர் பெயர்...! ஜகதீஷ்! ... அவர் தான் இருந்தார்!" என்றார் பிராணலால்.

"அப்புறம் அவன் எங்கே போனான்?"

"அதை யார் கண்டார்கள்?" என்று சொன்ன பிராணலால், "அவர் நம் சந்திரகாந்தனைக் கொண்டு புழக்கடைக் கதவைத் திறக்கச் சொல்லி அவ்வழியே போய் விட்டாராம்!" என்று முடித்தார்.

உடனே ஜுகல்கிஷோர் எழுந்து வெளியே போய், 'இன்று ஒப்பந்தம் நடக்காது. பெரிய தொகை திருட்டுப் போய் விட்டது. அந்தக் குற்றம் யார் தலையில் சுமரப் போகிறதோ, தெரியவில்லை. யாராவது போய் உங்கள் எசமானருக்கும் இந்த விஷயத்தைத் தெரிவியுங்கள்!" என்றான்.

ஜனங்கள் பலவிதமாகத் தர்க்க விதர்க்கங்கள் புரிந்தார்கள்; பற்பல விதமான ஊகங்களைக் கிளப்பி விட்டார்கள். கடைசியில் கூட்டத்தில் இருந்த சிலர் கும்பலாகப் பிஹாரிலாலின் பங்களாவை நோக்கிச் செய்தி அறிவிப்பதற்காக விரைந்தார்கள். பலர் சம்பவம் நிகழ்ந்த இடத்தைப் பார்க்கச் சென்றனர். போலீஸார் கொஞ்ச தூரம் கூட்டத்துடன் சென்றனர். எங்கேயாவது அவர்கள் குழப்பத்தை விளைவித்து விடுவார்களோ என்ற பயம் அவர்களுக்கு. ஆனால் கூட்டத்தினர் குழப்பம் எதுவும் விளைவிக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை பிறக்கவே, போலீஸார் வந்த வழியே திரும்பி விட்டனர்.

"இங்கே உட்கார்ந்திருப்பவர்கள் எல்லோரும் ஆண்மை அற்றவர்கள். வையுங்களடா தீயை!" என்றான் ஜுகல் கிஷோர். அவன் சொன்னது அதிகமானவர்கள் காதில் விழுந்திருக்காது. அதைச் சொன்ன பின் ஜுகல் கிஷோர் அப்புறம் அங்கே நிற்கவில்லை. எங்கேயோ மாயமாக மறைந்து விட்டான்.

பிராணலால் போலீஸாருக்குத் திருட்டு சம்பந்தமான தகவலைத் தெரிவித்தார். அவருக்கு எடுத்த எடுப்பில் ஜகதீஷின்மீதுதான் சந்தேகம் ஏற்பட்டது. சுகபாலும் சாந்திப்பிரியனும் அந்தச் சந்தேகத்தை வலுப்படுத்தும் விஷயத்தில் தங்களால் இயன்ற உதவியை அவருக்குச் செய்தார்கள். ஜகதீஷின் சிரமதசை, அவனது இயல்பு, அவனது போக்கு ஆகியவற்றை விவரித்து ஜகதீஷ்தான் திருடியிருக்க வேண்டும் என்றும் சாதித்தார்கள்.

ரமேஷ் திருட்டைப் பற்றி விசாரிக்கவும் விவாதிக்கவும் தொடங்கினான். "ஜகதீஷ் இம்மாதிரிச் செயல்களில் இறங்கியே இருக்கமாட்டான்!" என்று அவன் தனக்குத்தெரிந்த விஷயங்களைக் கொண்டு சாதித்தான். அவன் பேச்சை எல்லோரும் சிரித்து மழுப்பிக் காற்றில் பறக்க விட்டு விட்டார்கள்.

"நண்பன் என்பதற்காக உனக்கு அவன் மேல் அபார இரக்கம் பிறந்து விட்டாற் போலிருக்கிறது. அப்படித் தானே?" என்று கேட்டான் சுகபால்.

"இரக்கமா? என் நண்பன் ஒன்றும் என் இரக்கத்துக்காக ஏங்கிச் சாகிறவன் இல்லை. தெரிந்து கொள்ளுங்கள்!" என்று ரமேஷ் கொஞ்சம் கடுமையாகவே பதில் அளித்தான்.

"ஆமாம், ஆமாம்! எதற்காக அவன் உன் தயவை எதிர்பார்க்கப் போகிறான்? தடலடியாகப் பதினையாயிரம் ரூபாய் கிடைத்து விட்டபின் அவன் பிறருடைய இரக்கத்தை எதிர்பார்த்து எதற்காக ஏங்கித் தவிக்க வேண்டும்? நீ சொல்வது நியாயம்தான்!" என்றான் சாந்திப் பிரியன். அப்பொழுது அவன் பேச்சில் தொனித்த ஏளனத்தை என்னவென்று சொல்வது?

"என்ன? என்ன சொல்கிறீர்கள்? ஜகதீஷ் திருடினானா? இதை நீங்கள் நிரூபித்து விட்டால் நான் அந்தப் பதினையாயிரம் ரூபாயை இப்பொழுதே கட்டத் தயாராயிருக்கிறேன்!" என்றான் ரமேஷ். அப்பொழுது அருகில் நின்ற குஸுமா வைத்த கண் வாங்காமல் அவனையே பார்க்கலானாள்.

"முதலில் உன் கையில் அந்த இருபதினாயிரம் ரூபாய் சேரட்டும். அப்புறம் மார்தட்டிக் கொள்ளலாம்!" என்றான் சுகபால் சிரித்துக் கொண்டே.

"அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். என் முதலாளி என்னை நம்பிக் கொடுப்பார். நான் வாழ் நாள் முழுவதும் அவருக்குச் சம்பளம் இல்லாமலேயே உழைத்து அந்தப் பதினையாயிரம் ரூபாயையும் அடைத்து விடுவேன்!" என்றான் ரமேஷ்.

"இதையெல்லாம் நிரூபிக்க நாம் யார்? எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளப் போலீஸ் இருக்கிறது. யாருக்கும் வீண் சிரமம் வேண்டாம்!" என்றார் பிராணலால். (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram




# பெர்டுஸின் "டெஷ்னர்"




சென்ற 60 வருஷ காலத்தில் கக்குவான் இருமல் உட்பட சகல வித மான இருமல்களினின்று அவதிப்படு பவர்களுக்கு பெர்டுஸின் துரித நிவா ரணம் அளித்திருக்கிறது. ஆகவே நீங்களும் பெர்டுஸின் வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய் - 1 இவர்க ளால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY.7.TAM

**REGISTERED No. M. 4392**

*Registered as newspaper in Ceylon*